# கல்கி

## பொருளடக்கம்


**அரசியல்**

| | | | |
|---|---|---|---|
| 'விற்றுக்கோள் தக்கது' | ... | ... | 3 |
| ஜப்பானில் ஜவாஹர்லால் நேரு | ... | ... | 4 |
| படகு முன்னேறுகிறது ! | (கார்ட்டூன்) விஜி | ... | 4 |
| சென்னை கவர்னரின் மறைவு | ... | ... | 5 |
| ருஷ்யாவின் செயற்கைச் சந்திரன் | ... | ... | 6 |

**கதைகள்**

| | | | |
|---|---|---|---|
| பாவை விளக்கு | அகிலன் | ... | 25 |
| வெய்யிலும் நிழலும் | டால்ஸ்டாய்—ரா. வீ. | ... | 41 |
| மாலவல்லியின் தியாகம் | கி. ரா. கோபாலன் | ... | 55 |
| நேசம் மறக்கவில்லை ! | எஸ். விஜயராகவன் | ... | 81 |
| குறைவிலே நிறைவு | பூர்ணம் விசுவநாதன் | ... | 86 |
| நினைவில் நின்றவள் | நா. பார்த்தசாரதி | ... | 94 |

**கட்டுரைகள்**

| | | | |
|---|---|---|---|
| கி. ரா. கோபாலன் குடும்ப நிதி | ... | ... | 11 |
| கா. சி. க. மகாநாடு | எஸ். வி. எஸ். | ... | 13 |
| சங்கங்கள் மலிந்த சிங்கப்பூர் | டி. கே. சண்முகம்—புத்தனேரி | ... | 19 |
| பழைய நினைவுகள் | அ. சிநிவாசராகவன் | ... | 37 |
| குபேரனுகி விட்டால்.... | ஸ்ரீஹரி | ... | 47 |
| மாதர்குல திலகங்கள் | ... | ... | 49 |
| காந்தி கதை | அழ. வள்ளியப்பா | ... | 71 |

**பாலர் மலர்**

| | | | |
|---|---|---|---|
| சோதிடப் புலி (சித்திரத் தொடர்கதை) | அசயம் | ... | 62 |
| மாயப் பந்து | ராஜி | ... | 64 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

"அதற்கு சிறிதும் சந்தேகம் கிடையாது.



அவர் வெகு அழகாக அணிந்து கொண்டிருப்பது

**பின்னி மில்**

துணிகளே"

வாங்குமிடம்:



## வெங்கடேஷ் வஸ்திராலயா

இங்கு வாங்குவதே ஒரு ஆனந்தம்

### ரீடெய்ல் ஷோ ரூம்கள்

ஹைகோர்ட் எதிரில் & 2 தம்புசெட்டி தெரு, மதராஸ்-1.

**ஷோரூம் நெ. 1** — இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லில உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 2** — இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்நாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 3** — இங்கு நாங்கள் பின்னி மில்லில் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உயர்ந்த ரக துணிகளையும் விற்கிறோம்.

---

தீபாவளி விற்பனையை முன்னிட்டு எமது ஷோரூம்கள் அக்டோபர் 13, 20-ந் தேதி ஞாயிற்றுக்கிழமைகளில் திறந்திருக்கும்



மலர் 17 இதழ் 11

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

ஹேவிளம்பி புரட்டாசி 27

# "விற்றுக்கோள் தக்கது"

" ஒப்புரவினால் 'ஒரு கேடு நேர்ந்தாலும் ஒருவன் அந்தக் கேட்டைத் தன்னை விற்றாயினும் பெற்றுக் கொள்ளலாம்'' என்று வள்ளுவர் கூறுகிறார்.

அதாவது மனிதன் ஒப்புரவு செய்வதற்காகத் தன் சுதந்திரத்தை இழந்து விட்டாவது அந்தப் பெரும் பயனைப் பெறப் பார்க்கலாம்.

ஆனால் நமது பாரத நிதி மந்திரி டி. டி. கே. அமெரிக்காவில் சொன்னார் :

இந்தியாவை விற்று அமெரிக்க உதவியைப் பெறவேண்டும் என்றும் அதற்காகத் தாம் பெரு முயற்சி எடுப்பதாகவும் சொன்னார்.

'' விற்பது '' என்பது ஒரு ஆங்கில வாணிப மொழி. '' நல்ல பொருள், நீங்கள் எடுத்துக் கொள்ளும் தகுதிவாய்ந்த பொருள் '' என்று சொல்லிச் சாமர்த்தியம் செய்து பிறரை வசிகரிக்கும் முறையைப் பற்றி இந்த வாணிப மொழி ஏற்பட்டது.

அந்தப் பாணியில் டி. டி. கே. இந்தியாவை '' விற்க '' வேண்டும் என்று சொன்னார்.

இந்தியாவைக் கடையில் வைத்து இது மிக நல்ல சரக்கு என்று காட்டி அமெரிக்காவை வசிகரித்து அவர்களிடமிருந்து பணம் பெறுவதாகச் சொன்னார்.

ஆனால் இந்தியா நல்ல பொருள் என்பதை நம்முடைய பிரதமர் ஜவாஹர்லால் நேரு உலகத்துக்கு நிரூபித்து வெகு நாட்கள் ஆகிவிட்டன.

புதிதாக நிரூபிக்க வேண்டியது ஒன்றுமில்லை.

பிரதமர் நேருஜியின் நிருபணம்தான் அமெரிக்கரின் ஆசையைக் கிளப்பி யிருக்கிறது. எப்படியாவது இந்தியாவை விலைக்கு வாங்கி விட வேண்டும் என்று ஆசைப் படுகிறார்கள்.

ஆனால் இந்தியாவை ''விற்று'' விடாமல் பெறக்கூடிய உதவியைப் பெறவேண்டும் என்பது நேரு யோசனை. விற்றும் விடலாம் என்பது டி. டி. கே. அவர்களின் தீர்மானம் போலிருக்கிறது.

'சீக்கிரம் பணம் பெறுவீரா ?' என்று கேட்டதற்கு '' இந்தியாவை நான் விற்க வேண்டுமே '' என்று டி. டி. கே. பதில் சொன்னது நமக்குப் பயமாகத்தான் இருக்கிறது

இந்தியாவின் கொள்கைச் சுதந்திரத்தை இழக்காமல் ஏதேனும் பெறுவதாயிருந்தால் பெறலாம். பணத்துக்கு ஆசைப்பட்டு வலையில் சிக்காமலிருக்க வேண்டும். இதுவே நம்முடைய கவலை.

போனவர் க்ஷேமமாய்த் திரும்ப வேண்டும்.

கடன் வாங்குவதற்கும் உதவி பெறுவதற்கும் வெகு வித்தியாசம் என்று சர்க்கார் தரப்பில் எடுத்துக் காட்டப்படுகிறது. தானத்துக்கும் கடனுக்கும் பேதமுண்டு என்பதில் ஐயமில்லை. ஆனால் இரண்டும் உதவியேயாகும். அப்படியே கருதவும் படும். சமயத்தில் கடன் கொடுப்பது உதவியேயன்றி வேறில்லை. தானம் கொடுத்தவர்களை அதைப் பெற்றவர்கள் வெறுப்பது உலக சுபாவம். கடன் கொடுத்தவர்களை வெறுப்பது முடியாது. தாட்சிண்யம் நீடிக்கும்; பெற்ற கடனை வட்டியுடன் சீக்கிரம் திருப்பிக் கொடுத்துவிடக் கச்சிதமான திட்டம் ஏற்படுத்திவிடுவது நலம்—அதாவது பிரதமருடைய ஜப்பான் சுற்றுப் பிரயாணத்துக்குப் பின் கடன் கிடைக்குமானால் !

# ஜப்பானில் ஜவாஹர்லால் நேரு

ஆசியாவிலே முக்கிய ஸ்தானம் வகிக்கும் ஜப்பானுக்கு விஜயம் செய்துள்ள பாரதப் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு, அந்த நாட்டில் பத்து நாட்கள் வரையில் தங்கியிருந்து பிறகு திரும்பி வரத் திட்டமிட்டுள்ளார். ஜப்பானில் ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள், அதிகாரிகள் முதலிய சகலரும் நேருஜிக்கு அளித்துள்ள அமோகமான வரவேற்பிலிருந்து ஜப்பானிய மக்களுக்கு நேருஜியிடமுள்ள மதிப்பையும் இந்தியாவிடமுள்ள நட்பையும் தெரிந்து கொள்ளலாம்.

ஆயுத வலிமையிலும் செல்வாக்கிலும் பொருளாதாரச் சிறப்பிலும் ஐரோப்பிய வல்லரசுகளுக்குச் சமமாக விளங்கிய ஒரே ஆசியா நாடு ஜப்பான்தான் என்பதை அறியாதவர் இருக்க முடியாது. சென்ற உலக மகா யுத்தத்தில் பெரும் தோல்வியடைந்த ஜப்பான், தோல்வியால் ஏற்பட்ட மகத்தான கஷ்ட நஷ்டங்களை ஒரு சில ஆண்டுகளில் சமாளித்து மீண்டும் வல்லரசுகளுக்குச் சமமாக முன்னேறத் தொடங்கி விருப்பது அதிசயிக்கத்தக்க சாதனையாகும். இந்தச் சாதனை ஜப்பான் மக்களின் சலியா உழைப்புக்கும், திடமான மன உறுதிக்கும் சான்று பகரும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இன்று உலகத்தைப் பல பிரச்னைகள் எதிர்நோக்கி நிற்கின்றன. அவை திருப்திகரமாகத் தீரவேண்டுமாயின், ஆசிய நாடுகளிடையே ஒற்றுமையும் ஒத்துழைப்பும் நிலவ வேண்டியது அவசியமாகும். இவ்விஷயத்தில் இந்தியா, சீனா, ஜப்பான்போன்ற நாடுகளே மற்ற ஆசிய நாடுகளுக்கு வழிகாட்டும் பொறுப்பை வகிக்க வேண்டியவையாக இருக்கின்றன. ஐக்கிய நாடுகள் சபையில் சீனக் குடியரசு அங்கம் வகிப்பதற்கு அமெரிக்காவும் அதன் கட்சியைச் சேர்ந்த நாடுகளும் முட்டுக்கட்டை போட்டு வருகின்றன. இந்த முக்கியமான, சந்தேகத்துக்கு இடமிராத விஷயத்தில்கூட ஆசிய நாடுகளிடையே ஒற்றுமையில்லை. இந்தியா—சீனா—ஜப்பானின் நட்பும் ஒத்துழைப்பும் அத்தகைய ஒற்றுமை ஏற்படுவதற்கு உதவியாக இருக்கும்.

இந்தியா சுதந்திரம் பெற்றுப் பத்து ஆண்டுகள் ஆகின்றன. ஆனால், ஜப்பான் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாகச் சுதந்திரத்துடன் திகழ்ந்து வருகிறது. அதனால் தான் ஆசியாவிலேயே தொழில் துறைகளில் ஜப்பான் முதல் ஸ்தானம் வகித்து வருகிறது. எனவே, அரசியல் துறையில் இந்தியா ஜப்பானுக்குப் பக்கபலமாக இருக்கக் கூடும். அணுகுண்டு வீச்சினாலும் சோதனைகளாலும் ஜப்பானைக் காட்டிலும், கஷ்டங்களுக்கு உள்ளான நாடு வேறு எதுவுமில்லை. மேற்படி ராக்ஷச குண்டுகளின் சோதனைகளை நிறுத்த வேண்டும் என்று இடைவிடாது வற்புறுத்தி வரும் நாடுகளின் வரிசையில் இந்தியாவே முதல் ஸ்தானம் வகிக்கிறது. உலகில் அமைதி ஏற்பட வேண்டும் என்பதிலும் இந்தியா மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறது. இவ்விஷயத்திலும் சீனா, ஜப்பான் முதலிய ஆசிய



நாடுகளின் ஒத்துழைப்பு மிகுந்த பலனைக் கொடுக்கும். அதுபோலவே, இந்தியாவில் தொழில் துறை முன்னேறுவதற்கு ஜப்பான் பேருதவி புரியக் கூடிய நிலையில் இருக்கிறது.

தற்போது ராக்ஷச குண்டுகளை ஒழிப்பதற்கும் உலக சமாதானத்துக்கும் முட்டுக் கட்டையாக இருப்பது ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள பரஸ்பர விரோதம்தான். இவ்விரண்டு வல்லரசுகளுக்கும் உள்ள கருத்து வேற்றுமையைத் தீர்ப்பதற்கு இந்தியாவும் ஜப்பானும் ஆவன செய்யக் கூடும் என்ற அபிப்பிராயம் நிலவி வருகிறது.

எனவே, எப்படிப் பார்த்தாலும் நேருஜியின் ஜப்பான் விஜயத்தினால் பல நன்மைகள் ஏற்படுவதற்கு வழியிருக்கிறது.

ஆனால், சென்ற மகாயுத்தம் முடிந்து பல ஆண்டுகள் வரையில் ஜப்பான் அமெரிக்க ஆதிக்கத்தின் கீழ் இருக்க நேர்ந்ததால், ஐரோப்பிய வல்லரசுகளின் மனம் கோணாமல் நடந்து கொள்ளவேண்டும் என்ற பீதி ஜப்பானில் இருந்து வருகிறது. நேருஜி விஜயத்தின் பலனாக அந்தப் பீதி ஒழியுமாயின், அதுவே ஆசிய நாடுகளின் எதிர்கால ஒற்றுமைக்கு முதற்படியாக இருக்கும்.

# சென்னைக் கவர்னரின் மறைவு

சட்டப் பரீட்சையில் தேறித் திருவனந்தபுரம் ஹைகோர்ட் வக்கீலாக இருந்த ஸ்ரீ ஜான் 1925-ல் அரசியலில் ஈடுபட்டார். திருவனந்தபுரம் சட்டசபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவர், 1938-ல் திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸ் தலைவர் பதவிக்கு வந்தார். தேசப்பணி புரிந்ததற்காகச் சிறை செல்லும் பாக்கியம் அவருக்குக் கிடைத்தது. காங்கிரஸ் சட்ட விரோதமான ஸ்தாபனம் என்று திருவாங்கூர் சர்க்கார் பிரகடனம் செய்து, ஸ்ரீ ஜானையும் கைது செய்தனர். அப்போது அவர் மீது நடந்த வழக்கில் அவருக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

1944-ம் ஆண்டில் தேர்தல் நடந்தபோது, அவரும் ஓர் அபேட்சகராக நின்றார். ஆனால் அவர் சிறை சென்ற கைதி என்று கூறி அவரது அபேட்சைப் பத்திரம் அப்போதைய சர்க்காரால் நிராகரிக்கப்பட்டது. தேர்தலில் நிற்பதற்குக் கூட உரிமையற்றவர் என்று அன்னிய அதிகார வர்க்கத்தினரால் முடிவு செய்யப்பட்ட அவர், சுதந்திர இந்தியாவில் ஒரு மாகாண கவர்னர் பதவிக்கு வந்தது பெருமைப்பட வேண்டிய விஷயம் அல்லவா?

சுதந்திரம் பெற்றபின் திருவாங்கூரில் சபாநாயகர் பதவியையும் பல தடவைகள் மந்திரி பதவியையும் திறம்பட வகித்த ஸ்ரீ ஜான் சென்ற வருஷம் டிசம்பர் மாதம் கவர்னர் பதவி ஏற்றார். ஆனால் அவர் பதவி ஏற்று ஓராண்டு முடிவதற்குள்ளாகவே அவரது காலம் முடிந்து விட்டது. இந்த மாகாணத்துக்குப் பெரும் நஷ்டமாகும்.

—ஸி

## தில்லியில் கல்கி ஏஜன்ஸி மாற்றம்

தில்லியில் ஸ்ரீமதி சீதா (C/o ஸ்ரீ எஸ். வி. ராமன், ராஜீஸ் ஏஜன்ஸீஸ் புதுதில்லி) அவர்கள் பெயரிலிருந்த கல்கி ஏஜன்ஸியை 6-10-57 கல்கி இதழுடன் ரத்து செய்து விட்டோம். தில்லியிலுள்ள கல்கி நேயர்களும் கல்கி விற்பனையாளர்களும் இனிமேல் கல்கி பத்திரிகை சம்பந்தமாக ஸ்ரீமதி சீதா அவர்களுடனோ அல்லது ராஜீஸ் ஏஜன்ஸிக்காரர்களுடனோ யாதொரு விதமான தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம்.

13-10-57 கல்கி இதழிலிருந்து தில்லியில் கல்கி விநியோகத்தை நமது காரியாலயப் பிரதிநிதி ஸ்ரீ எம். ஏ. கிருஷ்ணமூர்த்தி [C/o Khanna Stores (Madras Emporium) 68, Baird Lane, New Delhi] அவர்களே கவனித்துக் கொள்வார். எனவே தில்லியிலுள்ள கல்கி நேயர்களும், விற்பனையாளர்களும் மேற்படி விலாசத்திலுள்ள நமது பிரதிநிதி ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியிடமிருந்து தங்களுக்குத் தேவையான கல்கி பிரதிகளைப் பெற்றுக் கொள்ளக் கோருகிறோம்.

மேலும் தங்களுக்குத் தேவையான தீபாவளி மலர்ப் பிரதிகளுக்கும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியிடமே முன் பணம் செலுத்திப் பதிவு செய்துகொள்ள வேண்டுகிறோம்.

மானேஜர்: கல்கி காரியாலயம், சென்னை - 10

# ருஷ்யாவின் செயற்கைச் சந்திரன்

**வி**ஞ்ஞான உலகிலே எதிர்பாராத ஒரு பேர் அதிசயம் நிகழ்ந்திருக்கிறது!

வான மண்டலத்திலே ருஷ்யா ஒரு செயற்கைச் சந்திரனைச் சுழலவிட்டிருக்கிறது!

இந்தச் செயற்கைச் சந்திரன் இந்தப் பூமியைச் சுமார் ஒன்றரை மணி நேரத்தில் ஒரு சுற்று சுற்றி விட்டு வருகிறது!

உலகில் எல்லாப் பகுதிகளிலுமுள்ள வான மண்டல ஆராய்ச்சிக் கூடங்கள் பார்த்து, அதன் சுழற்சியையும் அது அனுப்பும் ரேணங்களையும் பதிவு செய்து வருகின்றன!

நவீன விஞ்ஞான ஆராய்ச்சியிலே அமெரிக்கா தான் முன்னணியில் நிற்பதாக உலகம் இதுவரை கருதி வந்தது.



அமெரிக்கா தயாரித்து வரும் செயற்கைச் சந்திரன் இது தான். இம்மாதிரியானதோர் சந்திரனைத்தான் இப்போது ருஷ்யா வான மண்டலத்திலே சுழல விட்டிருக்கிறது.

முதன் முதலில் அணுகுண்டை அமெரிக்கா கண்டு பிடித்தது. அப்போது ருஷ்யாவிடம் அணுகுண்டு கிடையாது.

சிறிது நாட்களில் ருஷ்யாவும் அணுகுண்டைச் செய்யத் தொடங்கியது.

பின்னர் அதைவிடப் பயங்கரமான ஹைட்ரஜன் குண்டைத் தான் கண்டு பிடித்து விட்டதாக அமெரிக்கா பெருமையடித்துக் கொண்டது. "நானும் கண்டுபிடித்து விட்டேன்!" என்று சில நாட்களுக்குப் பிறகு ருஷ்யாவும் கூறியது! இப்படி அமெரிக்காவுக்குப் பின்னால் வாலும் தலையுமாக விஞ்ஞானத் துறையில் வந்து கொண்டிருந்த ருஷ்யா சில வாரங்களுக்கு முன்னால்தான் அமெரிக்காவைத் தோற்கடித்துவிட்டதாக அறிவித்து விட்டது.

ஒரு கண்டத்திலிருந்து மற்றொரு கண்டத்துக்குப் பறந்து சென்று குறித்த குறியில் வெடிக்கக்கூடிய குண்டுகளைச் செய்து வெற்றி பெற்று விட்டதாக ருஷ்யா அறிவித்தது. அந்த முறையில் இது வரையில் அமெரிக்கா சோதனைகள் செய்து பல தோல்விகள் அடைந்தது. இந்த நிலையில் ருஷ்யா தன் வெற்றியை ஜெயபேரிகையுடன் அறிவித்து உலகத்தை ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. ருஷ்யாவின் மகத்தான வெற்றியை அமெரிக்கா கொஞ்சம் சந்தேகத்தோடு அங்கீகரித்துத் தன்னைத் தானே சமாதானப்படுத்தித் திருப்திப் படுத்திக் கொண்டது!

இந்த வெற்றியைக் கேட்டு உலகத்தின் பயம் கலந்த வியப்பு தணிவதற்குள் ருஷ்யா ஆகாயவீதியிலே செயற்கைச் சந்திரனைச் சுழலவிட்டு விஞ்ஞான உலகை அதிசயக் கடலில் ஆழ்த்திவிட்டது! அமெரிக்க நிர்வாகத் தலைவர்கள் அமெரிக்காவில் இது ஏன் ருஷ்யாவுக்கு முந்தி நடைபெறவில்லை என்பதை விசாரிக்க ஒரு கமிட்டியை ஏற்படுத்தி விட்டிருக்கிறார்கள்.

இந்தச் செயற்கைத் திங்கள் விஷயத்தைப் பற்றி ஒரு ரகசியம். இந்தத் திங்கள் நிலவுதராது. குழந்தைகளுக்குக் காட்டி சந்தோஷப்படுத்தவும் பயன்படாது. கடல் தாண்டி வெடிக்கும் குண்டுகளை உயரக் கிளப்பிச் செலுத்தும் சக்தி ருஷ்யாவுக்கு உண்டாகி விட்டது என்பதைச் சந்தேகமற நிரூபித்து விட்டது. அதுவே அமெரிக்காவின் கோபத்துக்குக் காரணம். விளையாட்டுச் சந்திரனை உண்டாக்கி விட்டார்களே என்று அல்ல!

கேரளத்தில் அந்த நாட்டுச் சர்க்கார் சொல்லலாம்: "பார்த்தீர்களா, கம்யூனிஸத்தினுடைய சக்தியை! நீங்களும் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தால் நாமும் இப்படியெல்லாம் செய்யலாம்." இதையும் சிலர் நம்புவார்கள். நாற்பது ஆண்டுகளுக்கு முன் மிகவும் பின் தங்கியிருந்த தேசம், இன்று இந்த அதிசயத்தை விளைவித்துள்ளது! உலக நாடுகளெல்லாம் பகிஷ்கரித்த போதிலும், தான் முன்னேறியே தீரவேண்டும். அதிலும் பிறர் உதவியின்றித் தன்னுடைய சொந்த முயற்சியிலே முன்னேறியே தீரவேண்டும் என்று ஒரு நாடு உறுதி செய்து கொண்டுவிட்டால் நிச்சயம் முன்னேறியே தீரும் என்பதை இன்று ருஷ்யா உலகத்துக்கு நிரூபித்து விட்டது இதுதான் ருஷ்யாவின் செயற்கைச் சந்திரன் நமக்குக் கற்றுத் தரும் பாடம்.

# சென்னையில் சங்கரர்

காஞ்சி காமகோடி பீடத்தை, ஆதி சங்கரர் ஸ்தாபித்த நாளிலிருந்து, மிகப் பெரிய மகான்களே அதை அலங்கரித்து லோக சேவை, தர்ம கைங்கரியம் புரிந்து வந்திருக்கிறார்கள்!

ஆயினும் தற்போது அந்தப் பீடத்தை அலங்கரிக்கும் ஜகத்குரு சந்திரசேகர சரஸ்வதியவர்களைப் போல் பாரதவாசிகளின் உள்ளம் கவர்ந்த பெரியோர் யாருமே இருந்ததில்லை! ஆதிசங்கரரே மீண்டும் வந்து இப்பொழுது அருளி வருகிறார்கள் என்றே பக்தர்கள் எண்ணி வருகிறார்கள்.

சுவாமிகள் சென்னை நகருக்கு விஜயம் செய்ததிலிருந்து சென்னை நகர மக்கள் புது ஆத்ம பலம் பெற்று விளங்குகிறார்கள்.

அவர்களது தவம், அவர்களது நியம நிஷ்டைகள், அவர்களது எளிய பண்பு யாவும் மக்களைப் பரவசப்படுத்துகின்றன. எல்லாவற்றையும்விட இன்றைய மக்கள் படும் தொல்லைகளை அவர்கள் அனுதாபத்தோடு உணர்ந்து பேசும் அருள்மொழிகள் மக்களின் இதயங்களைத் தொட்டுக் கனியச் செய்கின்றன.

ஆசாரிய சுவாமிகள் பரமார்த்திக விஷயங்களில் மூழ்கித் திளைத்தாலும் இன்றைய அரசியல், பொருளாதார விஷயங்களையும் உற்றுக் கவனித்து அற்புதமான முறையில் அவர்கள் விளக்கம் தருவதைப் பார்க்கும்போது நமக்கு மெய்சிலிர்க்கிறது!

ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான மக்கள் அவரது தரிசனத்துக்காகக் காத்துக் கிடக்கிறார்கள். அவரை தரிசித்தபின் கண் படைத்த பயனைப் பெற்றோம் என்று மகிழ்ந்து போகிறார்கள். அவர் அருள் உபதேசத்தைக் கேட்டதும் மனத்தில் ஒரு நிறைவுபெற்று நிம்மதியுடன் திரும்புகிறார்கள்.

நவராத்திரி பத்து தினங்களும் சென்னை மயிலாப்பூர் சம்ஸ்கிருதக் கல்லூரி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

கடைசி தினமான விஜயதசமி தினத்தன்று ஆசாரிய சுவாமிகள் தலைமையில் காளிதாஸன் திருநாளைச் சென்னை சமஸ்கிருத அகாடமியார் கொண்டாடினார்கள். அந்த நாளில் மிக அருமையான அறிவிப்பு ஒன்றைச் செய்தார்.

கவி காளிதாஸனின் சாகுந்தலத்தை முதன் முதலில் மறைமலை அடிகள் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்.

மறைமலையடிகளிடம் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் பலர் மறைமலையடிகளின் பெயரில் ஒரு தமிழ்க் கல்லூரி திறப்பதற்கு ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

அந்தக் கல்லூரியில் பயிலும் சமஸ்கிருதமே அறியாத மாணவன் மறைமலையடிகளின் சாகுந்தலம் புஸ்தகத்தைப் படித்து விட்டு எழுதும் உயரிய கட்டுரைக்குப் பரிசு நல்க ஆசாரிய சுவாமிகள் ஐயாயிரம் ரூபாய் நன்கொடையளித்திருக்கிறார்கள்.

ஆசாரிய சுவாமிகள் நிகழ்த்திய அருளுரையில் தமிழ் நாட்டுத் தாய்மார்களைத் தமிழை நன்றாகப் பயிலும்படி சொன்னார். சங்க இலக்கியங்கள் எல்லாம் மிக அழகாக இருக்கின்றன. அவற்றையெல்லாம் துய்க்கும் அளவுக்குத் தாய்மார்கள் தமிழ் மொழி பயில வேண்டும் என்றார். அந்த அளவுக்குத் தாய்மார்கள் தமிழ் படித்து விட்டால், வரும் கால சந்ததிகள் தமிழில் நல்ல புலமை பெற வாய்ப்பு சுலபமாக ஏற்பட்டுவிடும் என்றார். தாய்மார்கள் ஒரு காரியத்தைச் செய்ய ஏற்றுக் கொண்டால் அது வெற்றியடைந்துவிடும் என்பதில் என்ன சந்தேகம்?

இப்படி ஆசாரிய சுவாமிகள் அன்றாட வாழ்வுக்கும் நித்தியமான வாழ்வுக்கும் பொருந்திய பயன் அளிக்கக் கூடிய அருளுரைகள் ஏராளமாகப் பொழிந்து வருகிறார்கள்.

ஆச்சாரிய சுவாமிகளும் அவர்களுடைய பிரதம சிஷ்யர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதியவர்களும் சென்னையில் இன்னும் சில நாட்கள் தங்கி தமிழ் மக்களுக்கு அருளுபதேசம் செய்வார்கள் என்று அறிகிறோம். ஆசாரிய சுவாமிகளும், இளைய சுவாமிகளும் சென்னை நகர பக்த கோடிகளுக்கு காட்சி அளித்த திருக்கோலத்தை இவ்வார கல்கி இதழ் அட்டை தாங்குவதை மிகுந்த பாக்கியமாகக் கருதுகிறோம். தமிழ்நாட்டுப் பெருமக்கள் ஆச்சாரிய சுவாமிகளுடைய பொன்மொழிகளைக் கேட்டுப் பயன் அடைவார்களாக.

அருள் வாக்கு

# ஒரு ஆத்மா போதும்!

ஸ்வாமி ஏமாற்றுகிறார். இயற்கை ஏமாற்றுகிறது. 'நேச்சர்' ஏமாற்றுகிறது. எல்லாமே நம்மை ஏமாற்றுகின்றன.

நமக்கு நாக்கு இருக்கிறதே, அது எதற்காக ஏற்பட்டிருக்கிறது? ருசிக்காக. ருசியே தெரியவில்லை என்றால் மருந்து போட்டு ருசி தெரியும்படி செய்து கொள்கிறோம்.

நாக்கு ஏற்பட்டது, நல்ல பதார்த்தங்கள் சாப்பிடுவதற்காக என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். இல்லை, நாக்கு ருசி தெரியாமல் மரத்துப் போய்விட்டதானால் நமக்குச் சாப்பிடுவதற்கே தோன்றாது. சாப்பிடவில்லையானால் உடம்பு வளராது. உடம்பு வளரத்தான் நாக்கில் ருசி ஏற்பட்டிருக்கிறது!

குழந்தையிருக்கிறது. நம்முடைய குழந்தை என்றால்தான் பிரியம் ஏற்படுகிறது. அது நலையாட்டினால், முகத்தைத் திருப்பினால் அளவு கடந்த சந்தோஷம்.

அதுவே அடுத்த வீட்டுக் குழந்தை என்றால், வேண்டாதவன் வீட்டுக் குழந்தை என்றால் 'சீ, சீ' என்று வெறுக்கிறோம்! நம்முடைய குழந்தை என்றால் ஏன் இவ்வளவு ஆசை? ஏன் இவ்வளவு ஆசை உண்டாகிறது?

இந்த ஆசை இல்லையென்றால் நமது குழந்தையைச் சிரத்தையாக வளர்க்க மாட்டோம். நமக்கு முன் அதற்குச் சாப்பாடு போட்டு வளர்க்கிறோம். நமக்கில்லாவிட்டாலும் அதற்குச் சாதம் ஊட்டுகிறோம். இந்த ஆசையில்லாவிட்டால் அந்தக் குழந்தையின் உடம்பு வளராது. ஆமாம். இந்த ஆசை நமக்காக ஏற்பட்டதல்ல! அந்தக் குழந்தையின் வளர்ச்சிக்காக, அதன் உடம்பு வளர்ச்சிக்காக ஏற்பட்டது.

காமம் நம் சுகத்துக்கு என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

காமம் என்பதும் இன்னொரு ஏமாற்றுதான்:

இன்னொரு ஜீவன் பிறவி எடுப்பதற்காக வேண்டி ஸ்வாமி இதைக் கொடுத்திருக்கிறார்.

அந்த ஜீவன் சரீரம் எடுத்தால் அது க்ஷேமம் அடைய வழி பண்ணிக் கொள்ளும் அல்லவா?

அந்த ஜீவன் க்ஷேமத்தை அடையக் காணோமே? நாக்கு இருக்கிறது, புத்தியிருக்கிறது, உடம்பிருக்கிறது, எல்லாம் இருக்கின்றன. இருந்தும் உலகில் பாபம் உண்டாகிக் கொண்டுதானே இருக்கிறது.

அம்பாளின் கடாக்ஷம் அடைந்து பூரணத்துவம் பெற்றுச் சாகவில்லையே என்று ஒரு சந்தேகம் வரும். அந்தச் சந்தேகம் வேண்டாம்.

கோடி, கோடி சரீரத்திலே ஒரு ஆத்மா பூரணத்துவம் அடைந்தாலே போதும்!

[4-10-57 அன்று ஆசாரிய ஸ்வாமிகள் நிகழ்த்திய அருளுரையில் ஒரு வாக்கு.]

"உலகில் தமிழ் மக்கள் சென்று வசிக்காத இடமே இல்லை. தென்னாப்பிரிக்காவில் அமெரிக்காவில், இங்கிலாந்தில் இன்னும் பல இடங்களிலும் தமிழர்கள் சென்று குடியேறி இருக்கிறார்கள். இத்தாலி தேசத்திலும் வசித்து வருகிறார்கள்.

இத்தாலி தேசத்தில் நாகரிகத்தில் சிறந்த நகரமான மிலானோ என்னும் நகரத்தில் சில தமிழ்க் குடும்பங்கள் இருக்கின்றன. தமிழகத்தை விட்டு எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் சென்று அவர்கள் வாழ்ந்து வந்தாலும் தமிழையும் தமிழ்ப் பத்திரிகைகளையும் மறப்பதில்லை. பெரியவர்கள் மட்டும்தானா? குழந்தைகள் கூட மறப்பதில்லை. மிலானோவில் வாழும் தமிழ்க் குடும்பம் ஒன்றில் உள்ள ஸ்யாமளா என்ற குழந்தை சென்ற ஆண்டு 'கல்கி' தீபாவளி மலரை வைத்துக் கொண்டு "இந்த ஆண்டு 'கல்கி' தீபாவளி மலர் எப்பொழுது வரும்?" என்று கேட்கிறாள்.

அக்டோபர் 22-ந் தேதி தீபாவளித் திருநாளன்று தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் 'கல்கி' தீபாவளி மலர் கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.



# உங்கள் வீட்டில் அவசியம் இடம்பெற வேண்டியது 'டெட்டால்'




'டெட்டால்'-டாக்டர்கள் உபயோகிக்கும் கிருமிநாசினி —உங்களுடைய அன்றாட வாழ்க்கையில், பலவழிகளில் வியாதிகள் பரவுதலைத் தடுக்கக்கூடும். அது விஷக்கிருமிகளைக் கொல்லுவதால் குழந்தைகளின் உள் ஆடைகளைச் சுத்தம் செய்யும் தண்ணீரிலும் அல்லது நீங்கள் குளிக்கும் தண்ணீரிலும் அல்லது நீங்கள் க்ஷவரம் செய்து கொள்ள உபயோகிக்கும் தண்ணீரிலும், சேர்க்கப்பட்டால் அதிகப் பாதுகாப்பை அளிக்கிறது. உங்களைச் சுற்றி எல்லா இடங்களிலும், நீங்கள் தொட்டுக் கையாளும் எல்லா சாமான்களின் மேலும், காற்றிலும், உங்கள் சருமத்தின்மீதுங்கூட, கோடிக்கணக்கான, கண்களுக்குப் புலப்படாத கிருமிகள் உள்ளன. இவற்றுள் பல, நோய்களைப்பரவச் செய்யக் காரணமானவை. உங்களுடைய அன்றாட வாழ்க்கையில் சிறு வெட்டுக்காயம், சொறிந்து கொள்வதால் ஏற்படும் சிறு காயங்கள் முதலியவை ஏற்பட பல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. உங்கள் சருமத்தில் ஒரு சிறு காயம் ஏற்பட்ட வினாடியிலேயே நீங்கள் வியாதிகளைத் தொத்திக்கொள்ள ஏதுவாகிறீர்கள்.

## இந்த மாதிரி எப்பொழுது ஏற்பட்டாலும்

## உடனே—'டெட்டாலை' எடுங்கள்

'டெட்டால்' விஷக்கிருமிகளால் ஏற்படும் வியாதிகளுக்கு எதிராக உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. 'டெட்டால்' — டாக்டர்கள் உபயோகிக்கும் கிருமிநாசினி — உபயோகித்த வினாடியிலேயே தன் வேலையைத் துவக்குகிறது. இது கேடுதல் விளைவிக்கும் கிருமிகளைக் கொல்கிறது. விஷக்கிருமிகளை எதிர்க்க இரத்தத்திற்கு உதவியாயுமுள்ளது. சாதாரண இரத்தக்கசிவு இறந்த கிருமிகளையும், அழிக்கப்பட்ட ஜீவ அணுக்களையும் (Cells) வெளிப்படுத்துகிறது. இதன் மூலம் மேலும் உபாதைகள் ஏற்படாமல் காயங்கள் விரைவில் குணமடைகின்றன

உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் 'டெட்டால்' வைத்திருங்கள்.

வெட்டுக்காயங்கள், சிராய்ப்புகள், தோல் உரிந்த புண்கள், திறந்த காயங்கள் இவைகளை உடனே 'டெட்டால்' உபயோகித்து வியாதி பரவாமல் தடுங்கள்.

**இலவசம்**

'Modern Hygiene for Women' 'ஸ்திரீகளுக்கு சுகாதாரம்' என்ற இலவசப் புத்தகத்தைப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட்., (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது), இலாகா FB-2, தபால் பெட்டி நெ. 9009 கல்கத்தா-16 விலாசத்திற்கு எழுதுங்கள்.

DI-2

AEL 1299

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

**ஆலோசனை நேரம்:** குறிப்பு—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | | இடம் | தேதி | |
|---|---|---|---|---|---|
| தஞ்சாவூர் | 17 | காலை & மாலை | விருத்தாசலம் | 22 | மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | காலை | சிதம்பரம் | 23 | காலை & மாலை |
| திருத்துறைப்பூண்டி | 18 | மாலை | கடலூர் N. T. | 24 | காலை & மாலை |
| மன்னார்குடி | 19 | காலை | பாண்டிச்சேரி | 25 | காலை |
| திருவாரூர் | 19 | மாலை | திண்டிவனம் | 25 | மாலை |
| நாகப்பட்டினம் | 20 | காலை | விழுப்புரம் | 26 | காலை & மாலை |
| நன்னிலம் | 20 | மாலை | காஞ்சிபுரம் | 28 | காலை & மாலை |
| மாயவரம் டவுன் | 21 | காலை & மாலை | வேலூர் | 29 | காலை & மாலை |
| சீர்காழி | 22 | காலை | குடியாத்தம் | 30 | காலை |

ஜாம்ஷெட்பூர்: ஒவ்வொரு மாதக் கடைசி ஞாயிறு, காலை & மாலை
சாக்ஷியிலுள்ள ஆந்திர டிராமாடிக் & தியேட்டர் சொஸைட்டி கட்டிடத்தில்

காரக்பூர்: 4; காலை & மாலை M/s. யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், N.T.E.155. ரயில்வே மார்க்கெட்

ஜபல்பூர்: 15; 8 to 12 முற்பகல் & 3 to 5 மாலை M/s. மாடர்ன் ஓட்டல்,
(அப்துல்லாபாய் & சன்ஸ், எதிரில்) அந்தந்தேதி போன்: நெ. 346

★

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**
சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# ஒன்றல்ல 17 மயக்கும் மணங்கள் உங்களுக்கு கிறுகிறுப்பும் புளகாங்கிதமும் தரும்!

PALMOLIVE
Talcum Powder
DE LUXE

வெறியூட்டும் 17 ஸெண்டுகளின் அற்புதக் கலவை சேர்ந்த பாமாலிவ் டால்கம் டீ லக்ஸின் நறுமணம் உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம் அடையச் செய்யும்... மணிக்கணக்காக உங்களுக்கு குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!

# பாமாலிவ்

## டால்கம் டீ லக்ஸ்

உண்மையில் உயர்ந்த டால்க்...
வீட்டிலுள்ள அனைவருடைய சுகத்திற்கும்
சுகாதாரத்திற்கும்... குழந்தைக்கும்கூட!

PTD/6/2

# கி. ரா. கோபாலன் குடும்ப உதவி நிதி

மகாகவி பாரதியார் வாழ்ந்த காலத்தில் அந்தக் காலத்துத் தமிழ் மக்களைப் பற்றி ஒரு குறை இருந்தது. தமிழ் வளர்க்கும் எழுத்தாளர்களையும், கவிகளையும் போற்றிப் பாராட்டுவதில்லை என்று. நமது முன்னோர்கள் மீது இருந்த குறையை நாம் போக்கி விட்டோம். மகா கவிக்கு மணி மண்டபம் கட்டினோம். அவர் மனைவியார் கஷ்டப்படாமல் இருக்க உதவி புரிந்தோம். இந்தக் காலத்தில் வாழ்ந்து வரும் கவிஞர்கள் கவலையில்லாமல் வாழ்ந்துவர வசதி செய்து கொடுத்து வருகிறோம். தமிழ் எழுத்தாளர்களைப் போற்றுகிறோம். அவர்களைப் போற்றுவதுடன் அவர்கள் கருத்துக்களைப் பாராட்டுவதுடன் மட்டும் நின்றுவிடலாமா? அவர்கள் குடும்பமும் மகிழ்ச்சியுடன் இருக்க உதவி செய்ய வேண்டாமா? தமிழ் வளர்ப்பதற்குப் பாடுபட்டு வரும் எழுத்தாளர்கள் குடும்பங்கள் கஷ்டப்படுவதை நாம் புறக்கணித்து விட்டால் 'நாம் தமிழர்கள்' என்று சொல்வதற்கே தகுதியற்றவர்கள் ஆகிவிடுவோம்.

தமிழுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் பாடுபட்டவர்கள் நினைவைப் போற்றுவதற்கு அவர்கள் குடும்பம் கஷ்டமில்லாமல் இருக்க உதவி செய்ய வேண்டும். இவ்வாறு உதவி செய்வதன் மூலம் இந்தக் காலத்தில் தமிழ் வளரப் பாடுபடுபவர்களையும் வருங்காலத்தில் தமிழ் வளர்க்கப்போகிறவர்களையும் நாம் போற்றத் தவற மாட்டோம் என்று உறுதி கூறுவதாகும். ஒரு ஏழைத் தமிழ் எழுத்தாளர் குடும்பத்துக்கு, அநாதரவான நிலையில் இருக்கும் ஏழைக் குடும்பத்துக்கு உதவி புரிவதன் நோக்கம் இதுதான்.

எழுத்தாளர் திரு கி. ரா. கோபாலன் அவர்களைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில் உள்ள தமிழ் மக்கள் எல்லாரும் நன்கு அறிவார்கள். அவர் தமிழுக்குத் தொண்டாற்றி வந்ததைப் பற்றி நாம் ஒன்றும் அதிகமாகக் கூறவேண்டியதில்லை. அவர் தம்முடைய முப்பத்தேழாம் வயதில் திடீர் என்று காலமாகி விட்டார். அவருடைய இளம் மனைவியும், ஐந்து குழந்தைகளும் இன்றைய தினம் ஆதரவற்றவர்களாக இருக்கிறார்கள். திரு கி. ரா. கோபாலனின் தமிழ்த் தொண்டைப் பாராட்டி அவருடைய குடும்பத்துக்கு உதவி செய்ய முன் வந்திருக்கும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தைப் பாராட்டுகிறோம். எழுத்தாளர் சங்கம் தமிழ்ப் பெரு மக்களுக்கு விடுத்திருக்கும் வேண்டுகோளை நாம் மனமுவந்து வரவேற்கிறோம். தமிழ் எழுத்தாளர் கி. ரா. கோபாலனின் குடும்ப உதவியின் அவசியத்தை உணர்ந்து சங்கம் கீழ்க்கண்ட அறிக்கையைத் தமிழ் மக்களுக்கு விட்டிருக்கிறது :—

'ராஜாளி மடம்,' 'மிஸ்டர் அப்பு,' 'ராணி மாதவி,' 'அபலை அஞ்சுகம்,' இப்போது 'கல்கி'யில் தொடர்ந்து வரும் 'மாலவல்லியின் தியாகம்' போன்ற உயர்ந்த நாவல்களையும் சிறு கதைகளையும், கவிதைகளையும் எழுதித் தமிழகத்தை மகிழ்வித்து வந்த சிறந்த எழுத்தாளர் திரு கி. ரா. கோபாலன் சமீபத்தில் அகால மரணமடைந்ததால், அவரது குடும்பம் ஆதரவற்ற நிலையில் இருக்கிறது. அவர் காலமான செய்தி கிடைத்தவுடனே நம் சங்கம் ரூ. 250 அவரது குடும்பத்தாருக்கு அனுப்பி உதவியது. அந்தக் குடும்பம் அதிகக் கஷ்டமின்றி வாழத் துணைபுரிவதற்காக ஒரு நிதியைத் திரட்டித் தருவது என்றும் சங்கம் தீர்மானித்து, அதற்காக ஒரு குழுவையும் அமைத்துள்ளது. குழுவில் சங்கத் தலைவர், பொதுச் செயலாளர், திருவாளர்கள் டி. கே. ஷண்முகம், சோமஇல்வாமிநாதன், ந. சிதம்பரசுப்பிரமணியன், எம். பி. கல்யாணசுந்தரம் முதலியோர் அங்கம் வகிக்கின்றனர். எழுத்தாள நண்பர்களும், திரு கோபாலனின் அபிமானிகளும் தங்களால் இயன்ற அளவு பொருளுதவி செய்ய வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த வசூல் சம்பந்தமான கணக்குப் பொறுப்புக்கள் நிதிக் குழுவைச் சார்ந்த திரு எம். பி. கல்யாணசுந்தரத்தினிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. தயவு செய்து கீழ்க்கண்ட அவரது முகவரிக்கு நிதி அனுப்பிவைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். திரு எம். பி. கல்யாணசுந்தரம், 'கல்கி' காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10.

— ஏ ஜி. வேங்கடாச்சாரி
தலைவர், தமிழ் எழுத்தாளர் சங்கம்.

இந்த அறிக்கையை ஏற்கெனவே இனப் பத்திரிகையில் படித்த பல தமிழ் அன்பர்கள் திரு கி.ரா. கோபாலன் குடும்பத்துக்கு உதவி யளித்திருக்கிறார்கள். அந்த நன்கொடையின் விவரங்களைக் கீழே காணலாம்:

| | |
|---|---|
| திருமதி ஆனந்தி, துணை ஆசிரியர், கல்கி, சென்னை | ரூ. 50 |
| திரு வி. ஜி. உம்மன், கார்ட்டூனிஸ்ட், சென்னை | ரூ. 50 |
| திரு மாசிலாமணி, கலைஞன் பதிப்பகம், தியாகராயநகர், சென்னை | ரூ. 25 |
| திரு ஸ்ரீஹரி, 'செல்வகோடி' நுங்கம்பாக்கம், சென்னை | ரூ. 10 |
| திரு டி. கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ., எப்.ஐ.ஏ., பம்பாய் | ரூ. 10 |
| ஆக | ரூ. 145 |

தமிழ்நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு தமிழ் எழுத்தாளர் சங்கம் இருக்கிறது. அந்தந்தத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் சற்று முயற்சி எடுத்தால் கி. ரா. கோபாலன் குடும்ப உதவி நிதிக்கு வெகு எளிதில் பொருள் சேர்த்து விடலாம். ஏற்கனவே திருச்சி எழுத்தாளர் சங்கம் கி. ரா. கோபாலன் குடும்பத்துக்கு உதவி புரிய வேண்டும் என்ற கோரிக்கையை விட்டிருக்கிறது. இவ்வாறு கி. ரா. கோபாலன் குடும்ப உதவிக்கு ஏற்பாடு செய்துவரும் தமிழ் எழுத்தாளர்கள் சங்கங்களைப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

எல்லாச் சங்கங்களும், தமிழ் அன்பர்களும் கி. ரா. கோபாலன் குடும்ப உதவி நிதிக்கு மனமுவந்து உதவுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். நிதி அனுப்ப வேண்டிய விலாசத்தை மீண்டும் நினைவூட்டுகிறோம். திரு எம். பி. கல்யாணசுந்தரம், 'கல்கி' காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை — 10.



# கா. சீ. க. மகாநாடு

எஸ். வி. எஸ்.

தமிழகத்தின் நடுநாயகமாக விளங்குகிறது மதுரை. பூகோள ரீதியில் மட்டுமன்றி மற்ற எல்லாத் துறைகளிலும் மதுரை நகர் நடுநாயகமாக விளங்குகிறது.

அரசியலில் ஏதாகிலும் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட வேண்டுமென்றால் அது மதுரையில் தான் முளைவிட வேண்டும்.

மதுரை நகரப் பெருமக்கள் "ஆமாம்" என்று அங்கீகரித்து விட்டால், அது தேசமெங்கும் பரவி வியாபித்து நிலைத்து விடும். இதற்கு எத்தனையோ சான்றுகள் எடுத்துச் சொல்லலாம். அவற்றை இங்கே சொல்லி இடத்தை நாம் நிரப்ப விரும்பவில்லை.

சமீபத்தில் செந்தமிழ் நாட்டு அரசியலில் ஏற்பட்ட திருப்பம் இனி நிலைத்துவிடும் என்ற சூசகம் சென்ற வாரம் 28, 29-ம் தேதிகளில் மதுரை மாநகரில் காணப்பட்டது.

*

சமீபத்தில் நடந்த தேர்தலுக்கு முன்னால் தமிழ் நாட்டிலே காங்கிரஸ் சீர்திருத்தக் கட்சி என்றோர் புதிய அரசியல் கட்சி உருவானதை நேயர்கள் அறிவார்கள். அறிந்தது மட்டுமல்ல, அதைக் கண்டு ஆச்சரியக் கடலில் மூழ்கிப் போயிருப்பார்கள்;

தமிழ் நாட்டுக் காங்கிரஸில் உபதலைவராக இருந்தவர்களும், இன்றையத் தலைமைக்குப் பெரும் ஆக்கந் தேடி உழைத்தவர்களும் இப்பொழுது பிரிந்து போய்த் தனிக் கட்சி ஏற்படுத்தி யிருக்கிறார்களே என்று எண்ணி வியந்திருப்பார்கள்!

பின்னர், காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி என்றால் காங்கிரஸைச் சீர்திருத்தியான பிறகு இவர்கள் காங்கிரஸில் சேர்ந்து விடத்தான் திட்டமிட்டிருக்கிறார்களோ என்றும் நினைத்திருப்பார்கள்!

காங்கிரஸ் 'அட்ஹாக்' கமிட்டியார் இவர்களை அபேட்சகர்களாக நிறுத்தாததினாலேயே இவர்கள் பிரிந்து விட்டிருக்கிறார்கள் என்று தவறாக நினைத்தார்கள். இவர்களில் தலைவராக இருந்த ஒரு சிலரை அபேட்சகர்களாக நிறுத்துவதாகக் காங்கிரஸ் மேலிடத்தார் வாக்களித்தார்கள். ஆனால் ஒரு சிலரை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றவர்களைக் காங்கிரஸுக்கும் தேச நலனுக்கும் சம்பந்தப்படாதவர்களை அபேட்சகர்களாக நிறுத்துவதால் என்ன பயன்? அதனால் இவர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தை விட்டே வெளியேறி, காங்கிரஸுக்கு எதிராகப் போட்டி போட்டுச் சில ஸ்தானங்களையும் பெற்றார்கள்!

இதில் என்ன விசேஷம் என்றால் தேர்தலுக்கு ஒருசில நாட்களுக்கு முன்னால் ஆரம்பிக்கப்பட்ட இக் கட்சி பண பலம் இல்லாத கட்சி. ஆள் பலமும் திரட்ட முடியாத நிலை. எனினும் பல ஸ்தானங்களைப் பெற்றிருக்கிறது என்றால் அது மகத்தான வெற்றி. தமிழ் நாட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனம் எவ்வளவு அதிருப்தியை வளர்த்திருக்கிறது என்பதை அந்த வெற்றியே நிரூபித்து விட்டிருக்கிறது; இதுவும் ஒரு மகத்தான வெற்றி.

ஆனால் இவ்வளவு கலபமாகத் தெரியக் கூடிய விஷயமும் சிலருக்கு எளிதில் பிடிபடுவதில்லை. மகாநாடும், கூட்டமும் போட்டால் தான் தெரிகிறது.

காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டியின் பூர்வாங்க மகாநாடு மதுரையில் சென்ற செப்டம்பர் 28, 29 ம் தேதிகளில் பிரமாதமாக நடைபெற்றது. மகாநாட்டுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பிரம்மாண்டமான அழகிய பந்தலும், மேடையும், பந்தல் முழுதும் நிரம்பி வழிந்த மக்களும், தமிழ் நாட்டின் பல ஜில்லாக்களிலிருந்து திரண்டு வந்திருந்த பிரதிநிதிகளும், தமிழ் நாட்டில் கா. சீ. க. வுக்கு ஆதரவு பெருகி வருகிறது என்பதை எடுத்துக் காட்டின. கா. சீ. க. மகாநாட்டுக்கு ஆயிரத்து அறுநூறு பிரதிநிதிகள் பல ஜில்லாக்களிலிருந்து ஒரு ஸ்பெஷல் ரயிலில் வந்தார்கள் என்றால், அந்தக் கட்சிக்கு நாட்டில் பெருகி வரும் பலத்தை நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

கா. சீ. க. மகாநாட்டின் முதல் நாள்விழா 27 ம் தேதி ஸ்ரீமான் எஸ். எஸ். கரையாளர் கொடி ஏற்று வைபவத்துடன் துவங்கியது.

ஸ்ரீமான் கரையாளர் கொடி ஏற்றி வைத்து விட்டு, ஆளும் கட்சியினரின் எதேச்சாதிகாரப்

போக்கைக் கண்டித்தார். "இருபதாண்டு காலமாகக் காங்கிரஸுக்காக உழைத்து விட்டு, இப்பொழுது நாங்கள் அந்த ஸ்தாபனத்திலிருந்து பிரிந்து நிற்கிறோம் என்றால், அந்த ஸ்தாபனத்தில் ஏற்பட்டுள்ள ஊழல்கள் எவ்வளவு சகிக்க முடியாதபடி போயிருக்க வேண்டும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்" என்றார்.

அடுத்தபடியாக, வரவேற்புரை நிகழ்த்தியவர் டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி. இன்றையக் காங்கிரஸ் தலைமைக்கு மிகவும் பக்கபலமாக இருந்து பணியாற்றியவர். இப்பொழுது அதைவிட்டுப் பிரிந்து கா. சி. க.வில் தீவிரமாக வேலை செய்து வருகிறார். கா. சி. க.வை வளர்த்த சிற்பிகளில் மிகவும் முக்கியமானவர். அவர் கா. சி. க. சார்பில் வெற்றி பெற்ற சென்னை சட்டசபை அங்கத்தினர்களையெல்லாம் பொதுமக்களுக்கு அறிமுகப்படுத்தி மலர்மாலைகள் அணிவித்துவிட்டுவரவேற்புரை நிகழ்த்தினார்.

அவருடைய வரவேற்புரையில் பெரும் பகுதி ராமநாதபுரம் கலவரம் சம்பந்தமான விஷயமே இடம் பிடித்துக் கொண்டது. அவர் அதைப் பற்றிக் கூறியதாவது:

"பத்திரிகைகளில் வெளிவரும்செய்திகளைப் போல் அங்கு நடப்பது சாதிச் சண்டையல்ல. ஆட்சியாளரின் ஆழ்ந்த அரசியல் சூழ்ச்சியும் தந்திரமும்தான். கணக்கெழுதிப் பாங்குகளில் வைக்கவோ, சேமித்து வைக்கவோ, வர்த்தகத்தில் முடக்கவோ முடியாமல், தேங்கிக் கிடக்கும் ஒரு சமூகத்தினர் பணமுந்தான் இராமநாதபுரம் நிகழ்ச்சிகளைத் தூண்டிவிருக்கின்றன!"

அன்று பிற்பகல் நான்கு மணிக்கு மதுரையில் கா. சி. க. மகாநாட்டின் காரியாலயத்திலிருந்து தலைவர்கள் ஊர்வலமாக மகாநாட்டுக்கு அழைத்து வரப்பட்டார்கள்! இந்த ஊர்வலத்தைத் திரு முத்துராமலிங்கத் தேவர் முன்னணியில்நின்றுநடத்தினார். மகாநாட்டுத் தலைவர்களுக்கு முன்னும் பின்னும் கண்ணுக்கெட்டியதூரம் ஒரேதலைமயமாகத்தெரிந்தது!

வானம் 'கருகும்' என்று இருண்டு வந்தது. குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது. என்றாலும் கூட்டம் குதூகலமாக மேள வாத்திய கோஷங்களுடன் மகாநாட்டுப் பந்தலை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது.

அன்று மதுரை வீதிகளில் கண்ட கண்ட இடமெல்லாம் போலீஸ் கூட்டங்கள்தான். திரு முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் தலைமையில் ஊர்வலம் செல்வதால் ஏதாகிலும் கலவரம் நடந்துவிடுமோ என்று பயம், சர்க்காருக்கு. ஆனால் திரு முத்துராமலிங்கத் தேவர் தலைமையில் ஊர்வலம் நடப்பதாலேயே எவ்விதத் தகராறும் கலவரமும் ஏற்படாது என்பது மகாநாட்டை ஏற்பாடு செய்தவர்களின் நம்பிக்கை. திரு தேவர் வாக்கு என்றால் அந்தப் பகுதி மக்கள் அதைக் கடவுளின் ஆணைக்குச் சமமாக மதிக்கிறார்கள். ஸ்ரீ தேவர் "அமைதி ஏற்பட்டே தீரவேண்டும்" என்று ஓயாமல் சொல்லும்போது யார் கலவரத்துக்கு முற்படுவார்கள்?



அகில இந்திய ஜனநாயக காங்கிரஸின் தலைவர் திரு வெங்கடகிருஷ்ண ரெட்டியார் தலைமையுரை நிகழ்த்துகிறார்.

மகாநாட்டுப் பந்தலை அடைந்தவுடன் முதன்முதலாகத் திரு முத்துராமலிங்கத் தேவரின் திறப்புவிழாப் பிரசங்கம் நடக்கவிருந்தது. மகாநாட்டுக்கு டிக்கெட் வைக்கப்பட்டிருந்தது. கூட்டம் சொல்லி முடியாது. வருண பகவான் தாமும் மகாநாட்டுக்கு வர முயற்சி செய்து கொண்டிருந்தார். ஆனால் திரு தேவர் தமது கம்பீரமான குரலில் முருகன் புகழைப் பத்து நிமிஷ நேரத்துக்கு மெய்யுருகப் பாடி விட்டுத் தமது அற்புதமான பிரசங்கத்தை ஆரம்பித்தார். அன்று சுமார் இரண்டே முக்கால் மணி நேரம் பேசினார்! பேசினார் என்று சொல்வது போதாது. செந்தமிழ் அருவி பாய்ந்தது! இடை இடையே அற்புத கருத்துக்கள் வண்ணக் கோலமிட்டுச் சென்றன!

அவற்றில் ஒன்றைச் சொல்லுகிறேன். பழம் பாரதத்திலே, அறிவும் வீரமும் ஒன்றியிருந்தன. பீஷ்மர், துரோணர், கிருபாச்சாரியார் போன்றவர்கள் அறிவைப் போற்றும் அந்தணர் குலத்திலே தோன்றினவராயினும் க்ஷத்திரியர்களுக்கு இணையாக வில் ஏந்திப் போர்க்களத்தில் நின்று படையை நடத்தும் திறமை படைத்திருந்தனர். பிற்காலத்திலே அறிவுபடைத்தவனுக்குத். தேக வலிமையற்றுப் படைக்கலங்களைப் பிடிக்கும் திறம் அற்றுப் போயிற்று. படைக்கலங்களைப் பயில்பவன் எழுத்து வாசனை கூட இல்லாத தற்குறியாகப் போனான்! இதில் ஏற்பட்டது பாரதத்தின் அழிவு!" என்று தொடங்கி,பாரதம் சுதந்திரம் இழந்த வரலாற்றைச் சொன்னார்.

ராமநாதபுரம் கலவரங்களின் விவரங்களை வெகு விரிவாகச் சொல்லிவிட்டு, "நான் ஏதோ அமைதியாக இருக்கிறேன். நண்பர்கள் என் அமைதியைக் கண்டு, பொறுமை இழக்காமல் இருப்பதைக் கண்டு, ஆச்சரியப்பட்டுப் பேசுகின்றனர். பொறுமை இழப்பதனால் என்ன பயன்? வீரத்தின் லட்சணம், ஆத்திரப் படுவதல்ல; பொறுமையைக் கடைப்பிடிப்பதே!" என்று அழகாகச் சொன்னார்.

கடைசியாகத் தம்மைப் பற்றியும் சொல்லிக் கொண்டார். "நான் எங்கும் தன்னந்தனியாகத்தான் செல்கிறேன். தற்காப்புக்காக ஒரு ஆயுதமும் கொண்டு செல்வதில்லை. என் தற்காப்பெல்லாம் என் உடல் வலிமையும்



திரு டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சொற்பொழிவாற்றுகிறார்.

மனோதைரியமும்தான்!" என்று கம்பீரமாகச் சொல்லிக் கொண்டார்.

இப்படிப் பேசிய ஒரு மனிதரைப் பேசி முடித்த ஒன்றரை மணி நேரத்துக்குள் அப்படியே கைது செய்து விட்டார்கள்.

கைது செய்தபோது, போலீஸ் அதிகாரி அவர் காரை மறித்து நின்று, "உங்களுக்கு அரெஸ்ட் வாரண்ட் கொண்டு வந்திருக்கிறேன்" என்றார்.

"ரொம்ப சரி" என்றார் திரு தேவர்.

"நீங்கள் அதைப்பார்க்க விரும்ப வில்லையா?" என்றார்கள்.

"இல்லை!" என்று சொல்லிவிட்டு, தமது ஜிப்பா பைகளுக்குள் கைகளை விட்டார். உடனே இரண்டு போலீஸ்காரர்கள் இரண்டு பக்கத்திலும் வந்து நின்று அவரது இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டார்கள்.

"என்னிடம் ரிவால்வர் போன்ற ஆயுதம் இடையாது!" என்று சொன்ன பிறகுதான் தளர்த்தினார்களாம். பின்னர் இரண்டு பைகளுக்குள்ளிருந்தும் கைகளை எடுத்து இரு சாமான்களை ஸ்ரீ டி. ஜி. கிருஷ்ணமூர்த்தியிடம் ஒப்படைத்தார். ஒன்று விபூதிப் பை; மற்றொன்று ருத்திராட்சமாலை!

*　　　*　　　*

திரு தேவர் அவர்கள் பேசிக் கொண்டிருந்தபோது, வருண பகவான் தம்மால் இயன்ற அட்டகாசத்தைச் செய்து பார்த்தார். கோவென்று மழையைக் கொட்டினார். இடி இடித்தார். மின்னல்களைப் 'பளார் பளார்' என்று வெட்டினார். ஜனங்கள் சுமார் இருபதாயிரம் பேருக்கு மேலிருப்பார்கள். அப்படியே நின்று திரு தேவரின் பேச்சைக் கேட்டார்கள்! சில நாட்களுக்கு முன் இப்படியொரு அதிசயம் மதுரையில் நடந்தது என்று பத்திரிகைகளில் படித்தேன். மீண்டும் அதே மாதிரி அதிசயத்தைக் கண்ணாரக் கண்டேன்!

தேவரின் பேச்சு மிக நீண்டு விட்டதால் தலைவர் உரை மறுநாளுக்குத் தள்ளிப் போடப்பட்டது!

மறுநாள் காலை மகாநாடு தொடங்கியது. மகாநாட்டுத் தலைவரும் ஜனநாயக காங்கிரஸின் தலைவருமான திரு வேங்கட கிருஷ்ண ரெட்டியார் ஒரு நீண்ட பிரசங்கம் செய்தார். தெளிவாக எழுதி அச்சடிக்கப்பட்டிருந்த புஸ்தகத்தை அழுத்தம் திருத்தமாகவும் நின்று நிதானமாகவும் படித்தார். அந்தப் பிரசங்கம் இன்றையக் காங்கிரஸ் நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. அதனால் அதிலிருந்து எந்தப் பகுதியையும் எடுத்துக் காட்டி எழுதுவது என்பது சாத்தியமல்ல. ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் திரு ரெட்டியார் அவர்கள் மிகத் தெளிவாக எடுத்துக் கூறி விட்டார்.

"மதுரை மாநகரில் மீனாட்சி சந்நிதானத்திலிருந்து ஒன்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். நாங்கள் திரும்ப இன்றையக் காங்கிரஸில் சேருவது என்ற பேச்சே இல்லை. ஏனெனில் பழைய காங்கிரஸ் இப்போது செத்து விட்டது. ஏற்கெனவே இருந்த காங்கிரஸ் வேறு; இப்போதுள்ள காங்கிரஸ் வேறு. காலியாய்ப் போன பெருங்காயப் பாண்டம் போல இன்றையக் காங்கிரஸ் உள்ளது. பாண்டம்தான் பழையதே தவிர உள்ளே இருப்பது காயமில்லை."

முதல் நாள் கூட்டத்திலிருந்த உற்சாகம் மறுநாள் மகாநாட்டில் காணோம்; அதற்குக் காரணம், திரு தேவர் அவர்கள் சிறைப்படுத்தப்பட்ட விஷயம். திரு தேவர் சிறைப்படுத்தப்பட்டதாலேயே மகாநாட்டின் முக்கியத்துவம் வளர்ந்தது. திரு தேவர் அவர்கள் கைது செய்யப்பட்டதைப் பற்றி என்ன முடிவு செய்யப் போகிறார்கள் என்பதை அறிய வேண்டும் என்ற ஆவல் மக்கள் உள்ளத்தில் அலைமோதிக் கொண்டிருந்தது.

திரு ரெட்டியார் அவர்களின் தலைமைப் பேருரை முடிந்தவுடன், காரைக்குடி தேசபக்தர் திரு சா. கணேசன் முக்கியமானதோர் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். அந்தத் தீர்மானம் திரு தேவர் அவர்களைக் கைது செய்த சர்க்காரின் போக்கைக் கண்டித்தது. மக்களை ஆத்திரப்படாமல், அமைதி இழக்காமல், பொறுமையோடிருக்கும்படி கேட்டுக் கொண்டது.

இந்தத் தீர்மானத்தின் மீது பேசிய திரு சா. கணேசன், தேவர் அவர்களைக் கைது செய்தது சற்றும் ராஜதந்திரமற்ற செய்கை என்று கடிந்து விட்டு, மற்றோர் விஷயத்தையும் குறிப்பிட்டார். ராமநாதபுரம் கலவரப் பகுதிகளில் சமாதானத்தை நிலைநாட்ட, சமாதானத் தூதர்களாக திரு சா. கணேசன், தோழர் ராமமூர்த்தி, திரு ம. பொ. சி., ராமநாதபுரம் சேதுபதி அவர்கள் ஆகிய நான்கு பேரும் சென்னை முதன் மந்திரியைச் சந்திக்கச் சென்றபோது, முதன்முறை மிகவும் சிரத்தையோடு அவர்களுடன் ஒத்துழைப்பதாகத் திரு காமராஜர் சொன்னார்.

நான்கு நாட்கள் கழித்து இரண்டாவது தடவை சந்தித்தபோது, திரு காமராஜர் பரிபூரணமாக மனம் மாறி எவ்விதத்திலும் ஒத்துழைக்க முடியாது என்று கூறிவிட்டார்.

இந்தத் தீர்மானத்தையொட்டி, சட்ட சபை எதிர்க்கட்சித் தலைவர் திரு வி. கே. ராமசாமி முதலியார், நாகர்கோவில் கா. சி. க. எம். எல். ஏ. திரு டி. எஸ். ராமசாமி, திரு எஸ். எஸ். மாரிசாமி முதலிய பலர் பேசினார்கள். திரு எஸ். என். சோமயாஜுலு இந்தத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய போது, பாஞ்சாலி சபதத்தில் விதுரன் சொல்வதாக அமைந்துள்ள பின்வரும் இரண்டடிகளை மேற்கோள் காட்டினார்.

"பேய் அரசு செய்தால்
பிணம் தின்னும் சாத்திரங்கள்"

கா சி. க. கமிட்டியை, அகில இந்திய ஜன நாயக காங்கிரஸ் என்று பெயர் மாற்றி அமைக்கும் தீர்மானமும் பிரேரேபிக்கப்பட்டது. அந்தத் தீர்மானமும் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

அடுத்தாற்போல் கொடியைப் பற்றிய தீர்மானம் கொண்டு வரப்பட்டது. காங்கிரசின் பழைய மூவர்ணம் ஒரு பகுதியிலும், பாக்கிப் பகுதி முழுவதும் மங்களகரமான மஞ்சள் நிறம் கொண்டதாகவும் தீர்மானிக்கப்பட்ட கொடியை மக்கள் முன்னிலையில் காண்பித்துத் திரு சா. கணேசன் பிரேரேபித்தார்! கொடியும் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

விஷயாலோசனைக் கமிட்டிகளில் புதிய ஜன நாயக காங்கிரஸ் கட்சி எப்படித் தொழிற்பட வேண்டும் என்பதற்கான சட்டதிட்டங்களும் அங்கீகரிக்கப்பட்டன.

இப்படி இரண்டு நாள் புதிய கட்சியின் நாமகரண வைபவத்தைப் பார்த்து விட்டுச் சென்னைக்குத் திரும்பி வந்தேன்.

இந்த மகாநாட்டுக்கு வந்து விட்டு திரும்பியதில் என் உள்ளத்தில் மேலோங்கி நிற்கும் எண்ணங்களையும் குறிப்பிட வேண்டும்!

முக்கியமாக, இன்றைய ஆட்சியில் அதிருப்தி கொண்ட மக்கள் ஏராளமான பேர்கள் இருக்கிறார்கள். அதிலும் ராமநாதபுரம் கலவரத்தில் சர்க்காருக்கு மிகப் பெரிய பங்கு உண்டு என்று எல்லாக் கட்சி மக்களுமே எண்ணுகிறார்கள். ராமநாதபுரம் மக்கள், கலவரத்தில் பாதிக்கப்பட்ட மக்கள், மறவர்களாயினும் பள்ளர்களாயினும் தங்கள் தங்கள் குடிசைகளுக்குப் போக அஞ்சி வயல் வரப்பிலும், கண்மாய்க் கரையிலுமே இன்னும் வசித்து வருகிறார்கள்! அவர்கள் உணவும் உடையுமின்றித் தவிக்கும் பரிதாபம் சொல்லி முடியாது என்று பலர் சொல்லக் கேட்டேன். இவர்களது கஷ்டங்களை யெல்லாம் யார் தீர்க்கப் போகிறார்கள் என்ற உணர்ச்சி இன்னும் மேலோங்கி நிற்கிறது.

அடுத்தாற்போல ஆளும் கட்சியினிடம் மக்களுக்கு அதிருப்தி ஏற்படுவது சகஜம்: ஆளும் கட்சி, எவ்வளவு நல்ல காரியங்கள் செய்தாலும் அதைக் குறை கூற மக்கள் இருக்கவே செய்வார்கள். ஆனால் இன்று ஆளும் கட்சி என்பதால் மட்டுமின்றிப் பொதுவாகவே காங்கிரஸிடம் பெரும் அதிருப்தி மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

வடநாட்டு காங்கிரஸ் தலைவர்களி லிருந்து உள்ளூரில் காங்கிரஸ் கமிட்டிகளை கைப்பற்றி இருப்பவர்கள் வரையில் அனைவரிடத்திலும் அதிருப்தி பரவி யிருக்கிறது!

இந்த அதிருப்தி ஜனநாயக காங்கிரசுக்குப் பலமாக வாய்த்திருக்கிறது!

ஜனநாயக காங்கிரஸ்வாதிகள் தூங்காமல் நேர்மையாக இன்னும் நான்கு ஆண்டுகள் உழைத்தால் நிச்சயம் அவர்கள் செல்வாக்கு பெருகிவிடும் என்பதில் சந்தேகமில்லை.

ஜனநாயக காங்கிரஸில் இன்று இருப்பவர்கள் பழைய காங்கிரஸில் இருந்தவர்கள் தான். அதில் கொஞ்சம் சுயமாகச் சிந்திக்கக் கூடிய திறம் படைத்தவர்கள் எல்லாம் இப்பொழுது ஜனநாயக காங்கிரஸில் இருக்கிறார்கள். ஆகவே ஜனநாயக காங்கிரஸில் சுயமாகச் சிந்திக்கும் திறம்படைத்தவர்கள் இருப்பது மக்களுக்கு மகிழ்ச்சியையளித்திருக்கிறது.

அதைத் தவிர, நாட்டில் இன்றையக் காங்கிரஸின் போக்கு பிடிக்காமல் சிறு சிறு கட்சிகளாகவும், தனித் தனி நபர்களாகவும் இருந்தவர்கள் எல்லாம் அன்றைய மேடையிலிருந்தனர். திரு எச். டி. ராஜா, திரு வி. எம். சீனிவாசன், சங்கர ரெட்டி போன்றவர்கள் இம் மகாநாட்டுக்கு வந்திருந்தது நாட்டில் காங்கிரஸுக்கு எதிராகப் பல இடங்களாகப் பாய்ந்து கொண்டிருந்த எதிர்ப்புச் சக்தி ஒரு முகமாகத் திரும்புகிறது என்ற நம்பிக்கையை யூட்டியது. மொத்தத்தில் ஜனநாயக காங்கிரஸை வரவேற்கிறோம்.



கேவாபான் 33ல், A. L. ஸையத் எடுத்த புகைப்படம்

# இந்தியப் பெண்மணி







நேற்று அவள் கதிர்களைச் சேர்ப்பதற்கு உதவினாள். அறுவடையின் செழிப்பிலே இன்று அவள் நேர்த்தியாக உடையணிந்து விளங்குகிறாள். கிராமமே மகிழ்ச்சியிலே திகழ்கிறது. இந்தியக் கிராமத்தில் சுபிட்சம் பெருகி வளருவதை இப்படம் விவரிக்கிறது. **கேவர்ட் பிலிமினால்** எடுக்கப்பட்ட படங்களைக் கண்டு நீங்கள் எவ்வளவு தூரம் ஆனந்தமடைவீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். அவை உங்களுக்கு இனிமையான சம்பவங்களையும் வியக்கத்தக்க நினைவு அலைகளையும் உங்கள் மனத்தில் கொண்டு வந்து நிறுத்தும். வீட்டினுள்ளும் வெளிப்புறத்திலும் படங்கள் எடுக்க **கேவாபான் 33** அல்லது **கேவாபான் 36** உகந்தவை. **கேவாபான் 36ல்** "மந்தமான வெளிச்சத்திலும் பிரகாசமான படங்களை" எடுக்கலாம். அற்புதமான வர்ணப் படங்களுக்கும், பெரிய படங்களுக்கும் கேவாகலர் நெகடிவ் பிலிம் (N5) உபயோகியுங்கள். மேலும் உங்களுக்குத் திருப்தியளிக்க உங்கள் பிரின்டுகளும், என்லார்ஜ்மென்டுகளும் — சாதாவோ — கலரோ எதுவாகிலும் கேவர்ட் பேப்பரில் செய்யப்பட்டுள்ளவா என்று பாருங்கள்.

**GEVAERT**

**ALLIED PHOTOGRAPHICS PRIVATE LIMITED**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் பிரைவேட் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1





ஏஜண்டுகள்: மெஸர்ஸ் நாமகிரி டிரேடிங் கார்ப்பொரேஷன், 1, டாக்கர் சத்திரம் லேன், மேற்கு புலிவார் ரோடு, திருச்சி. ○ மெஸர்ஸ் J. C. மன்சந்த, பிளாக் நெ. 1, 15-A/88, கரோல்பாக் புது டில்லி ○ மெஸர்ஸ் கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, லான்ஸ்டவுன் ரோடு, கல்கத்தா-26

## கலை கண்ட மலேயா (7)





# சங்கங்கள் மலிந்த சிங்கப்பூர்

டி. கே. சண்முகம் - புத்தனேரி சுப்பிரமணியம்

உலகப் புகழ்பெற்ற துறைமுக நகரமான சிங்கப்பூரின் சிறப்பை நாங்கள் ஏற்கனவே பலர் வாயிலாகப் பலபடக் கேட்டு நெஞ்சத்திலே பதிய வைத்திருந்தோம்.

''எல்லாப் பொருளும் இதன்பால் உள:
இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்''

என்பதற்கு ஏற்ப மனிதருக்குத் தேவையான பொருள்கள் அனைத்தையும் மலிவாக வழங்கும் மாபெரும் சந்தையே சிங்கப்பூர் என்பதை எங்கள் உள்ளத்திலே ஒருவாறு கற்பனை செய்திருந்தோம்.

எனவே, நகரத்தை அடைந்ததும், அதன் காட்சிகளை யெல்லாம் கண்ணாரக் கண்டு, எங்கள் கற்பனை நகரத்தை அந்த அசல் நகரத்தோடு ஒத்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எங்களிடம் பொங்கிக் கொண்டிருந்தது. இந்த ஆவலின் காரணமாக அகம் குளிர நகர்வலம் காணப் புறப்படத் துணிந்தோம்.

'' நீங்கள் புறப்படுமுன் ஒரு வார்த்தை: சிங்கப்பூரிலும் சரி, மலேயாவிலும் சரி, 'ஐடெண்டிடி கார்டு' என்னும் அடையாளச் சீட்டு இல்லாமல் யாரும் வெளியே நடமாடக் கூடாது என்ற சட்டத்தை மறந்து விடாதீர்கள்!'' என்று நண்பர்கள் அனைவரும் எச்சரிக்கை செய்திருந்தனர்.

''நாங்கள் இன்னும் அடையாளச் சீட்டு பெற்றுக் கொள்ளவில்லையே! அப்படியானால் நாங்கள் வெளியே போகவே முடியாதா?'' என்று ஏக்கத்தோடு கேட்டோம்.

'' அடையாளச் சீட்டு கிடைக்கும் வரை உங்கள் பாஸ்போர்ட்டைக் கையில் எடுத்துக் கொண்டு போகலாம்!'' என்ற ஆறுதலான பதில் கிடைத்தது.

சிங்கப்பூருக்குப் புதிதாக வருகை தருவோருக்கு மட்டும்தான் அடையாளச் சீட்டு வேண்டும் என்று எண்ண வேண்டாம். சிங்கப்பூரிலும் மலேயா நாட்டிலும் வாழும் மக்கள் ஒவ்வொருவரும் அடையாளச் சீட்டு வைத்திருக்க வேண்டுமென்பது சட்டம்!

அடையாளச் சீட்டில் சீட்டுக்கு உடையவரின் புகைப்படம், பெயர், முகவரி முதலான விவரங்களும் அடங்கியிருக்கும்.

நம் இந்தியா போன்ற நாடுகளில் இல்லாத அடையாளச் சீட்டு முறை சிங்கப்பூர்-மலேயாவில் அமுல் நடத்தப்படுவது ஏன் என்ற கேள்விக்கும் விளக்கம் தேடிக் கொண்டோம்.

யுத்த காலத்துக்குப் பின் மலைநாட்டில் 'பயங்கரவாதி'களின் நடமாட்டம் அதிகமாகி விட்டதென்றும், அவர்களை அடக்குவதற்காகப் பிரகடனம் செய்யப்பட்ட அவசர காலச் சட்டத்தை அநுசரித்தே அடையாளச் சீட்டு முறை அமுல் செய்யப்படுகிறதென்றும் தெரிந்து கொண்டோம்.



சிங்கப்பூர் தமிழர் பிரதிநிதித்துவ சபை வரவேற்பில் வள்ளல் திரு கோவிந்தசாமிப் பிள்ளை அவர்கள் திரு பகவதிக்கு மாலை சூட்டுகிறார். அவருக்கு இடதுபுறம் நிற்பவர் தான் சபைத் தலைவர் திரு கோ. சாரங்கபாணி அவர்கள்.

'பயங்கரவாதிகள்' என்றால் யார் ?

யுத்த காலத்தில் பிரிட்டிஷாரின் உதவி கொண்டு ஜப்பானியருக்கு எதிராக, மறைவிலிருந்து போராடி வந்த படையினர் தாங்கள் மலாயா அரசாங்கத்தைக் கைப்பற்றி ஏதேச்சாதிகாரம் புரியும் நோக்கத்துடன் பயங்கரவாத முறைகளைக் கையாண்டார்கள். காடு மேடுகளில் பதுங்கிக் கொண்டு மறைமுகமாகக் கொலை, தீ வைத்தல், போக்குவரத்து சாதனங்களைக் கவிழ்த்தல், தந்திக் கம்பிகளை அறுத்தல் முதலிய நாசகரமான காரியங்களில் ஈடுபட்டார்கள். இக்கோஷ்டியினர் தான் பயங்கரவாதிகள். இவர்களின் மிருகத் தன்மைக்கு ஆயிரக்கணக்கான குடிமக்களும் தற்காப்புப் படையினரும் இரையாகியிருக்கிறார்கள். மலேயாவின் சுபிட்சத்தை விரும்பும் எவரும் இவர்களை ஆதரிக்கவில்லை. இவர்களை அடக்குவதற்காகத்தான் 1948-ம் வருடம் ஜூன் மாதம் பத்தாம் தேதி அவசர காலச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டது.

'பயங்கரவாதி'களில் பெரும்பாலோர் சீனர் என்று சொல்லப்படுகிறது. இவர்கள் புரியும் பயங்கரச் செயல்களைப் பற்றி நண்பர்கள் பலர் கதைகதையாகக் கூறினார்கள்:

சில சமயங்களில் பெரிய பெரிய வியாபாரிகளும், தனவந்தர்களும், ரப்பர்த் தோட்ட முதலாளிகளும் திடீர் திடீர் என்று காணாமற் போய் விடுவார்களாம்! "மந்திரமோ, தந்திரமோ, மாயமோ?" என்று மக்கள் திகைத்துப் போவார்களாம்! இப்படிப் பண வசதி படைத்தோரை அலக்காகத் தூக்கிக்கொண்டு போய் நடுக்காட்டிலே வைத்துத் துப்பாக்கி முனையிலும், கத்தி முனையிலும் அவர்களை மிரட்டி, ஆயிரக்கணக்கில் பணம் சேர்ப்பார்களாம் 'பயங்கரவாதிகள்'!

அப்படித் தூக்கிச் செல்லப்பட்டவர்களிடம் அந்த நேரத்தில் பணம் இல்லையென்றால், இன்ன இடத்தில், இன்ன தேதியில், இத்தனை மணிக்கு இவ்வளவு பணத்தை நாங்கள் அனுப்பும் ஆள் வசம் நீ கொடுத்து அனுப்ப வேண்டும்! இல்லாவிட்டால் உன்னை இலேசில் விடமாட்டோம் என்று 'கெடு' வைத்துக் கடும் எச்சரிக்கையுடன் அனுப்பி விடுவார்களாம்! அந்தக் கெடுவில் குறிப்பிட்ட பணத்தைக் கொண்டு வந்து கொடுக்கத் தவறினால் மீண்டும் ஆபத்துத்தானாம்.

இப்படிப்பட்ட 'பயங்கரச் செயல்'களைப் பற்றிய செய்திகள் அவ்வப்போது சிங்கப்பூர் பத்திரிகைகளில் வெளியாகின்றன. இது போன்ற சம்பவங்களைப் "பம்பாய் மெயில்" போன்ற நாடகங்களிலே மக்கள் கண்ட போது, 'இப்படியும் நடக்குமா?' என்று எண்ணி வியந்ததுண்டு!

"இப்படியும் நடக்கும்! இன்னும் பயங்கரமாகவும் நடக்கும்" என்று நிரூபிப்பனபோல் இருந்தன 'பயங்கரவாதி'களைப் பற்றிய பயங்கரமான பல செய்திகள்!

இன்னொன்றும் கேள்விப்பட்டோம்: 'பயங்கரவாதிகள்' மீது பழியைப் போட்டு விட்டு அசல் கொள்ளைக்காரர்களே சிலசமயங்களில் பயங்கரச் செயல்களில் ஈடுபடுவதும் உண்டு என்பதுதான் அந்தச் செய்தி!

பயங்கரவாதிகளின் இயக்கத்தை அடக்குவதற்காக மலேயா அரசாங்கமும் சிங்கப்பூர் அரசாங்கமும் ஒன்றுசேர்ந்து கொண்டு அதி தீவிரமாக நடவடிக்கை எடுத்து வருவதாகவும் அறிந்தோம்.

மேற்கண்டவை அனைத்தும் சிங்கை சேர்ந்ததும் எங்கள் வெள்ளையான கலை உள்ளத்தில் நாங்கள் ஏந்திக் கொண்ட செய்திகளேயாகும். இவற்றைச் செய்தியளவில் புரிந்து கொண்டதைத் தவிர உள் நாட்டு விவகாரங்கள் எதுவும் எங்களுக்குத் தெரியாது.

வீதியில் நடமாடுவோர் ஒவ்வொருவரிடமும் அடையாளச் சீட்டு இருக்கிறதா என்று திடீரென்று சோதிக்கும் அதிகாரம் போலீஸாருக்குத் தரப்பட்டுள்ளது. எவரிடம் ஐயம் ஏற்படுகிறதோ அவரிடம்தான் "அடையாளச் சீட்டைக் காட்டுங்கள்" என்று போலீஸார் கேட்பார்கள். எனவே எப்போதும் அடையாளச் சீட்டு அல்லது பாஸ்

போர்ட்டை உடன் எடுத்துச் செல்ல வேண்டியது அவசியம் என்பதை உணர்ந்து கொண்டோம். எங்களுக்குத் தாற்காலிக அடையாளச் சீட்டு கிடைப்பதற்கு ஒரு வாரமாவது ஆகும் என்று தெரிந்தமையால் சட்டைப் பையிலே அடங்காத பாஸ்போர்ட்டைக் கையிலே பத்திரமாகக் கொண்டு செல்ல வேண்டியதாயிற்று.

நாங்கள் சிங்கப்பூர் சேர்ந்த நாள் திங்கட்கிழமை; வியாழக்கிழமையன்றே அதாவது மூன்று நாட்களுக்குள் தமிழ் நாடக விழாவைத் தொடங்கிவிட வேண்டும் என்று திட்டம் வகுத்து விட்டார் திரு ஒலிமுகமது. நாடக விழாவுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த இடம் 'பாட்மின்டன் ஸ்டேடியம்'!

''முழுமையாக மூன்று நாட்கள்தானே உள்ளன! இந்தக் குறுகிய காலத்துக்குள் மேடை அமைத்துவிட முடியுமா?'' என்ற ஐயத்தோடு அந்தப் பூப்பந்து விளையாட்டு அரங்கத்தைப் பார்வையிடச் சென்றோம்.

அந்த அரங்கம் நிரந்தரமான கொட்டகையாகக் கட்டப்பட்டுள்ளது. மிக விசாலமானது. நாலாபுறமும் காலரிகள் கட்டப்பட்டுள்ளன. ஒரு பக்கத்தில் காலரிக்குப் பின்புறமாக ஒரு கேளிக்கை உணவு விடுதியும் இணைக்கப்பட்டுள்ளதைக் கண்டோம்.

போதிய அகல நீளத்துடன் கூடிய அந்த அரங்கத்தின் இடது பக்கத்திலுள்ள காலரியை ஒட்டி விசாலமான நாடக மேடையமைக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

ஸ்டேடியத்துக்கு உள்ளே 'காங்கிரீட்' தளம் போடப்பட்டுள்ளபடியால் பள்ளம் தோண்டிக் கால்கள் ஊன்ற முடியாதென்று அரங்க நிர்வாகி கூறிவிட்டார். கொட்டகையின் மேல் முகடு மிக உயரமாகத் தென்பட்டது. இந்த நிலையில் மேடை எப்படி அமைப்பது? சீன்களைக் கட்டுவதற்குப் பரண் எப்படிப் போடுவது? அந்த அரங்கத்திலே நாடக மேடை அமைக்க முற்படுவது ஆகாயத்தில் கோட்டை கட்டுவது போலத்தான் என்று திகைத்து விட்டோம்.

சீனத் தச்சர்களை அமர்த்தி எப்படியாவது மேடையை எழுப்பிவிட வேண்டுமென்ற முயற்சி தொடங்கப்பட்டது. உயரமான விசிப் பலகைகள் பலவற்றை ஒன்றாகச் சேர்த்துக் குறுக்கும் நெடுக்குமாக மரச் சட்டங்களை வைத்து ஆணியடித்து இயன்றமட்டும் மேடையைப் பலமுள்ளதாக்க முற்பட்டார்கள் சீனத் துக்கான்கள். துக்கான் என்றால் மலாய்மொழியில் கைத் தொழிலாளி என்று பொருள்.

சீனத் துக்கான்களுடைய சுறுசுறுப்பு வியக்கத் தக்கதாக இருந்தது. கொட்டகையின் மேல் முகட்டுக்கு அருகில் உள்ள இரும்புக் குறுக்குச் சட்டங்களிலிருந்து முறுக்குக் கம்பிகளைத் தொங்க விட்டுப் பரணையும் மேடையையும் ஆடாமல் அசையாமல் இழுத்துக் கட்டிய அவர்களுடைய திறமையை வியந்து பாராட்டி, மிகவும் மெச்சினோம்.

வேலை நேரம் முடிந்து விட்டால் ஒரு விநாடி கூடத் தாமதிக்காமல் வெளியேறி விடுவார்கள் சீனத் துக்கான்கள். பெரிய அதிகாரிகளைப் போல் ஒய்யாரமாக உடையுடுத்திக் கொண்டு வந்து உற்சாகமாக எங்களோடு கைகுலுக்கிவிட்டு, 'நாளைக்குப் பார்ப்போம்!' என்று அவர்களுக்குரிய பாணியிலே வேடிக்கையாகக் கூறிச் செல்வார்கள். உற்சாகமாக உழைப்பதிலும் வாழ்க்கையை உல்லாசமாகக் கழிப்பதிலும் சிறிதுகூட அலுப்படையாதவர்கள் அந்தச் சீனத் துக்கான்கள்.

எப்படியோ அந்தரத்தில் மேடை அமைந்த விந்தையை நினைந்து மிக மகிழ்ந்தோம்.

''புதிதாக மேடையமைக்க வேண்டிய அவசியம் என்ன? சிங்கப்பூரில் நல்ல மேடை வசதிகளோடு கூடிய கொட்டகை கிடையாதா?'' என்றால் ''கிடையாது'' என்று ஒரே வார்த்தையில் பதிலளித்து விடலாம்.

நல்ல காட்சி அமைப்புகளோடு கூடிய தமிழ் நாடகத்துக்கு ஐம்பது அடி அகலமும் ஐம்பதடி நீளமும் உள்ள மேடை வேண்டும். சிங்கப்பூர் - மலேயாவில் இவ்வளவு விசாலமான மேடை அமைக்கக் கூடிய கொட்டகையே இல்லை என்று சொல்லப்பட்டது. அந்த நாட்டில் அதிகமாகப் பரவியிருக்கும் கேளிக்கை நடனங்களுக்கு ஏற்ற மேடைகளே எங்கும் காணப்படுகின்றன.

**நா**ங்கள் சிங்கை சேர்ந்த மறுநாள், அதாவது ஏப்ரல் இருபத்தி மூன்றாம் தேதியன்று,

தமிழர் பிரதிநிதித்துவ சபையினர் மாபெரும் வரவேற்புக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

தமிழர் பிரதிநிதித்துவ சபையில் சிங்கப்பூரில் உள்ள நாற்பத்திநான்கு சங்கங்கள் அங்கம் வகிக்கின்றன. இந்தச் சங்கங்களின் பெயர்களைக் கேட்டாலே வியப்பாக இருக்கும். நமது தமிழகத்திலுள்ள தாலூக்காக்களின் பெயராலும், கிராமங்களின் பெயராலும் இச்சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. தமிழர்கள் கடல்கடந்து எவ்வளவு தொலைவில் வாழ்ந்தாலும் தமிழ் மண்ணை மறவாமல் வாழும் உணர்ச்சி பெற்றிருக்கிறார்களே என்று பூரிப்படைந்தோம். அதோடு, ''சங்கங்கள் மலிந்த சிங்கப்பூர்'' என்ற ஒரு சிறப்புப் பட்டத்தை இந்தத் துறைமுக நகருக்குச் சூட்டலாமே என்றும் தோன்றியது. தனிப்பட்ட பேர்வழிகளுக்கெல்லாம் என்னென்னவோ பட்டம் கொடுக்கும்போது ஒரு பெரிய நகரத்துக்கு இந்தப் பட்டத்தைக் கொடுத்தால் என்ன குடிமுழுகிப் போகிறது?

தமிழர் பிரதிநிதித்துவ சபையின் தலைவர் திரு கோ. சாரங்கபாணி என்று அறிந்ததும் சபையில் இத்தனை சங்கங்களும் இணைந்ததில் வியப்பில்லை என்று புரிந்து கொண்டோம். செல்வாக்கு வாய்ந்த 'தமிழ் முரசு' என்ற தினசரியின் ஆசிரியரான திரு சாரங்கபாணி அவர்கள் வேற்றுமையிலும் ஒற்றுமை காணும் விதத்தை நன்குணர்ந்த தமிழ் வீரர். தமிழகத்திலிருந்து சிங்கப்பூர் செல்லும் தமிழ்ப் பெரியார்களையும், கலைஞர்களையும், சாதி, சமய அரசியல் வேறுபாடு கருதாமல் வரவேற்றுப் பாராட்டும் நல்லிதயம் படைத்தவர் திரு கோ. சா. ''தமிழ் எங்கள் உயிர்'' என்ற இயக்கத்தின் தலைவர். மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழிக்கு உகந்த உயர்ந்த இடம் வேண்டுமென்று போராடி வெற்றி கண்டு வருபவர். தமிழ் உணர்ச்சி ஒன்றை மட்டும் உரைகல்லாகக் கொண்டு அனைவரையும் தழுவிச் செல்லும் தாராள மனம் படைத்தவராகத் திரு சாரங்கபாணி இருப்பதனால்தான் அவருடைய செல்வாக்கும் 'தமிழ் முரசு' பத்திரிகையின் வளர்ச்சியும் மேலோங்கி நிற்கின்றன.

சபையின் பொதுச் செயலாளராக விளங்குபவர் திரு எம். எம். மாலை. முத்துமாலை என்ற பெயரைத்தான் இவர் 'மாலை' யாக்கி அணிந்துள்ளார். மதுரை மாவட்டத்தில் உள்ள உத்தமபாளையத்தைச் சேர்ந்த இவர் சிங்கப்பூரில் சினிமாப்பட விநியோகத் துறையில் ஈடுபட்டுள்ளார். எனவே, அடிக்கடி விமானத்திலே பறந்து வந்து தமிழகத்தோடு கலைத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டிருக்கும் நல்வாய்ப்பும் பெற்றவர். எல்லோரிடத்திலும் இன்முகம் காட்டி இங்கிதமாகப் பழகும் இதயப் பண்பு படைத்தவர். தமிழ் உணர்ச்சி மிகுந்தவர். எங்கள் கலைக்குழு மலேயாப் பயணத்தை மேற்கொண்டதற்கு இவருடைய தூண்டுதலும் ஒரு காரணமாகும்.

தமிழர் பிரதிநிதித்துவ சபை ஏற்பாடு செய்த பொது வரவேற்பு விக்டோரியா நினைவு மண்டபம் என்னும் நகர மண்டபத்தில் நடைபெற்றது. சென்னையில் உள்ள நமது ராஜாஜி மண்டபத்தைப் போல் மிக அழகாக அமைந்துள்ளது நகர மண்டபம்.

வரவேற்பு விழாவுக்குச் சிங்கப்பூர் கல்வி மந்திரி திரு யியூ சுவீ கீ தலைமை வகித்தார்.

''கலாசார உயர்வில் இந்தியா எந்த நாட்டுக்கும் இரண்டாவதாகாது. சிங்கப்பூர் அநேக துறைகளில் இந்தியாவை எதிர்நோக்கியிருக்கிறது. இந்தியாவை நோக்கிச் சீனத் துறவி ஒருவர் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சென்று, சுற்றிக் கலை உயர்வு கண்டு, சீனாவுக்குத் திரும்பி இந்தியாவின் சிறந்த கலாசார வகைகளைச் சீன நாட்டிலும் பரப்பினார். எனவே அப்படிப்பட்ட பழம் பெருமை வாய்ந்த இந்தியாவின் கலாசாரத் தூதுவர்களாகவே டி. கே. எஸ். குழுவினரை மதித்து மகிழ்வித்து வரவேற்கிறேன்'' என்று பாராட்டினார் கல்வி மந்திரி.

ஏப்ரல் இருபத்திநாலாந் தேதி மாலையில் சிங்கப்பூரிலேயே மிக உயர்ந்த பதினைந்து அடுக்கு மாடியுள்ள மாளிகையும், ஆசியா இன்ஷ்யூரன்ஸ் கட்டடமுமான 'விண் மாளிகை'யில், திரு ஒலி முகமது நம் கலைக் குழுவினருக்கு ஒரு தேநீர் விருந்தளித்துப் பாராட்டினார். விண்மாளிகையின் அழகு கண்கொள்ளாதது. சிங்கைமா நகரின் பெருமையை வானளாவ உயர்த்திக் காட்டுகிறது இந்த விண்மாளிகை. இந்த விண்மாளிகையில் நாள்தோறும் ஆடல் பாடல் முதலிய கேளிக்கைகளுக்கும் விருந்துகளுக்கும் குறைவே இல்லை.

சிங்கப்பூரிலே நடமாடும் கடைகளும் உண்டு என்பதைக் கண்டோம். நாங்கள் தங்கியிருந்த வீட்டின் பக்கமாகக் காலையும் மாலையும் சைக்கிள் வண்டிகளிலே பல அழகான கடைகள் செல்லும் காட்சியைக் கண்டு மகிழ்ந்தோம். அவற்றில் எங்களை மிகவும் கவர்ந்தது பழக்கடை. நாலு சக்கரச் சிறு வண்டியிலே பல வகையான பழங்களை அடுக்கி வைத்திருக்கும் அழகே தனி. கடைக்காரன் ஆப்பிள் பழத்தின் தோலைச் சீவிய முறையே ஓர் அற்புதக் கலையாகத் தோன்றியது. கத்தியானது பழத்தைத் தொட்டும் தொடாமலும் வெங்காயத் தோலியைப் போலத் தோலை மெல்லியதாகச் சீவி எடுக்கும் நேர்த்தியை என்னவென்று சொல்லுவது?

ஆப்பிள் பழம் என்றதும் ஒரு சுவையான செய்தியைச் சொல்ல வேண்டும். அங்கு கிடைக்கும் ஆப்பிள் பழங்களில் இனிப்புச் சுவை கிடையாது என்பதுதான் அந்தச் சுவையான செய்தி.

சிங்கப்பூர் ஆஸ்திரேலியாவுக்கு அருகாமையில் இருப்பதால் அருமையான நாக்கில் நீர் ஊறத் தக்க சுவையுள்ள ஆப்பிள் பழம் கிடைக்கும் என்றுதான் நாங்களும் முதலில் எண்ணினோம். ஆனால் அங்கே கிடைத்த பழங்கள் பேரிக்காயைப் போன்று புளிப்பும் கலந்தனவாகவே இருந்தன. எனவே சிங்கப்பூர் மலேயாவில் கிடைத்த ஆப்பிள் பழங்களுக்கு நாங்கள் 'ஆஸ்திரேலிய மாங்காய்' என்று பெயர் வைத்தோம். ஆனால் இந்த 'மாங்காய்'தான் உடம்புக்கு மிகவும் சத்தானதாம். உடம்புக்குச் சத்தானதாக இருக்கலாம். ஆனால் வாயில் வைக்க வழங்கவில்லை. (தொடரும்)

# பாவை விளக்கு

### அத்தியாயம் 17

## அதிகார உலகம்

அந்த இரவில் அதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகளில் எதை நம்புவது, எதை நம்பாமலிருப்பது என்று தணிகாசலத்துக்கு விளங்கவில்லை. இப்போது வெறிச்சிட்டுக் கிடக்கும் கோயில் வாசல் சற்று முன்புதான் கந்தர்வ லோகத்தின் நாட்டிய மன்றமாகக் காட்சி தந்தது. அதில் அவனுடைய ஊர்வசி அவனுக்காகவும் நடராஜப் பெருமானுக்காகவும் ஆடிச் சுழன்றாள். அத்துடன் அவள் நின்றிருந்தால் அடுத்தாற்போல் இப்படி ஒரு தொல்லை முளைத்திருக்காதல்லவா? அரச மரத்தடி நிழலில், நிலவுக்குக் குடைபிடித்த பச்சைத் தளிர்ப் பந்தலின் தனிமையில், அவனும் அவளும் அருகருகே அமர்ந்து பேசியது நினைவுக்கு வந்தது. நள்ளிரவில் மோகினிகள் உலவி வருவது பற்றி அவன் கேள்வியுற்றிருக்கிறான்.

மோகினிப் பெண்ணழகை இப்படித் தாயுருவத்தில் வந்த காட்டேரி இழுத்துச் சென்று விட்டதே! செல்லக்கண்ணு எங்கிருந்து திடீரென்று வந்து முளைத்தான்? ஊர்வலத்தை முடித்துக் கொண்டு திரும்பக் கூடாதா? பரவசத்தால் ஆடிய செங்கமலத்தையும் பயத்தால் வெளுத்த செங்கமலத்தையும் அவன் ஒப்பிட்டுப் பார்த்தான்.

பொழுது எப்படியோ விடிந்தது.

தணிகாசலம் பயந்தபடி ஒன்றுமே நடக்கவில்லை. செங்கமலத்தின் தாய் அவனுடைய சித்தியிடமோ சித்தப்பாவிடமோ புகார் செய்யவில்லை. அவனையும் நேரில் அழைத்துக் கண்டிக்கவில்லை. காலையில் அவன் அடுத்த தெருவுக்குச் சென்றபோது தணிகாசலம் எதிர்ப்பட்டான். செல்லக்கண்ணு சாதாரணமாகத்தான் அவனைப் பார்த்தான். நேற்று இரவில் நடந்தவற்றையெல்லாம் அவன் நினைவில் கொள்ளவில்லை என்று தோன்றியது. கோபமோ, கடுகடுப்போ, பழி வாங்கும் உணர்ச்சியோ காணப்படவில்லை.

செல்லக்கண்ணுவின் போக்கு அவனுக்குத் துணிவைத் தந்தது. இல்லாத கஷ்டங்களையெல்லாம் நாமாக நினைத்துக் கொண்டோமா? செங்கமலத்தின் பயம் தம்மையும் ஒன்றாய் ஆட்டிப் படைத்து விட்டதா? அவளுடைய தாயார் நடந்ததை மறந்து விட்டாள் போலிருக்கிறதே?

கண்ணபுரத்துக்கு அவன் வேலை விஷயமாகப் போக வேண்டியிருந்தது. கையெழுத்து வாங்க வேண்டிய கடிதத்தை எடுத்துக் கொண்டான். போவதற்கு முன்னால் செங்கமலத்தை ஒரு விநாடி பார்க்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

அவனுடைய சித்தப்பா கண்ணபுரத்தில் கவனிக்க வேண்டிய அலுவல்களை நினைவூட்டினார்.

''நாகநாதன் என்ற இன்ஜினியரைப் பரமசிவத்து அண்ணாவுக்குத் தெரியும். நீ அவர் பிள்ளை என்றால் தெரிந்து கொள்வார். அவரிடம்





கையெழுத்துவாங்கு. அங்கேயே சமஸ்தான ஆபீஸில் நேரில் கொடுத்து விட்டுத் திரும்பி வா.''

''கண்ணபுரத்தில் சுப்பையாவிடம் சொல்லி அவரையும் அழைத்துக் கொண்டு போகட்டுமா?'' என்று கேட்டான் தணிகாசலம்.

''இது சாதாரண உதவி. இதற்குச் சிபாரிசே வேண்டியதில்லே. கையெழுத்துப் போட்டுக் கொடுக்க வேண்டியது அவர்கள்கடமை. எதற்கும் நான் ஒரு கடிதம் எழுதிக் கொடுக்கிறேன். அவர் ஊரில் இல்லாவிட்டால் நீ சுப்பையாவிடம் சொல்லி வேறு யாரிடமாவது வாங்கிக் கொடு.''

சித்தப்பா கடிதம் எழுதிக்கொடுத்தார். காலைப் பலகாரத்தை முடித்துக் கொண்டு கண்ணபுரத்துக்குக்

ளம்பினான். சட்டைப் பையில் பணம் அவ்வளவாக இல்லை. இருபது ரூபாய்ச் சம்பளத்தில் செங்கமலத்தின் முன்னால் அழகாய்த் தோன்றுவதற்காக முக்கால் பகுதிக்கு மேல் செலவழித்தாயிற்று. சித்தப்பாவிடம் கேட்கவும் அவனுக்கு மனமில்லை. காரிலோ ரயிலிலோ போய் வர வேண்டுமானால் ஒரு ரூபாய்க்கு மேல் செலவாகும். கள்ளுக்கடை முதலாளியின் வீட்டில் இரவலாகச் சைக்கிள் வாங்கிக் கொண்டு புறப்பட்டான். பதினைந்து மைல் போய்ப் பதினைந்து மைல் சைக்கிளில் திரும்புவது அந்த வயதில் கடினமான செயல் இல்லை.

ஒரு ரூபாயில் பதினாறு அணாக்கள்; பதினாறு அணாக்களில் அறுபத்து நான்கு காலணாக்களைக் கணக்குப் பண்ணும் நிலைமைக்கு அவனைச் செங்கமலம் கொண்டு வந்து விட்டாள். வெளியில் வெளிச்சம்; உள்ளுக்குள் புழுக்கம்.

சைக்கிளைத் தள்ளிக்கொண்டு சென்று அடுத்த வீட்டின் முன்னால் ஏறிக்கொண்டான். திரும்பிப் பார்த்தபோது கதவோரத்தில் செங்கமலம் நின்று கொண்டிருந்தாள். தலையசைத்தான்; அவளும் தலையசைத்தாள். கண்கள் அவனுக்குக் கலங்கியிருந்தன.

புறப்படும் வேளையில் அவளைப் பார்க்க முடிந்தது. அவனுக்குத் தெம்பைத் தந்தது. அன்றைக்கு மாலையே திரும்பி வந்து அவளுடைய தாயாரின் நடவடிக்கைகளைத் தெரிந்து கொள்ள விரும்பினான். ஒரு நாள் வெளியூர் செல்வதற்காகவா இந்தக் கலக்கம்? அல்லது ஏதாவது இரவில் அங்கு புயல் வீசி இருக்குமா? இருக்காது. அப்படி ஏதும் இருந்தால் இவள் வாசலில் வந்து நமக்காகக் காத்து நிற்பாளா? ஊருக்குச் செல்லும் விவரத்தை அறிந்து கொண்டு தான் அவள் வழி அனுப்புவதற்காக வாசலில் வந்து நிற்கிறாள்.

உற்சாகமாகச் சைக்கிளை மிதித்தான் தணிகாசலம். கிராமத்தை விட்டு ஒரு மைலுக்குமேல் காட்டு வழிச் சாலைக்கு வந்து விட்டது சைக்கிள். முற்பகல் வெய்யில் சுள்ளென்று முகத்தில் அடித்தது; ஆனால் அவனுக்கு அது உறைக்கவில்லை.

காலைப் பலகாரமும் காப்பியும் அவன் வயிற்றில் நிறைந்திருந்தன. நெஞ்சில் செங்கமலம் நிறைந்திருந்தாள். சித்திரை வைகாசிப் பருவமாதலால் சுற்றுப்புற உலகத்தில் இளமை மினுக்கிக் கொண்டிருந்தது. பாதையின் இருபுறமும் வரிசையாக மா, புளி, வேப்பு முதலிய மரங்கள் இளவேனிற் காலத்துக்கு வாழ்த்துக் கூறிக்கொண்டு நின்றன.

தன்னைப் போலவே இயற்கையும் காதல் மயக்கத்தில் கிறங்கி நிற்பதைத் தணிகாசலம் கண்டான். செங்கமலத்துக்காக அவன் புதுச்சட்டை போட்டுக் கொண்டது போல், அவனுக்காக அவள் புத்துடையும் புதுப் பூவுமாய்க் காட்சி கொடுத்ததுபோல், உலகமெங்குமே தன் அழகை வெளிப்படுத்திக் கொண்டு புன்முறுவல் செய்தது. மரம், செடி, கொடி, புல், பூண்டு, புதர் அனைத்துமே அவனுடைய உள்ளத்தைப் பிரதிபலித்தன.

மலரின் இருதயத்துக்குள் மகரந்தத் தூள் விழுவதைப் போல, அவனுடைய இருதயத்துக்குள் ஒரு சொட்டுக் கவிதைத் துளி விழுந்தது. அந்த உணர்ச்சித் துளி விநாடிக்கு விநாடி பெரிதாகிக் கொண்டே வந்து அவனுக்கு வாய் விட்டுப் பாட வேண்டும் போல் தோன்றி



யது. சொந்தமாக உருவாகிய கற்பனைக் கவிதையால் அவன் செங்கமலத்தைப் பாட நினைத்தான்.

கண்ணபுரத்துக்குப் போய்ச் சேருவதற்குள் கவிதைத் துளி கட்லாக மாறி விடுமோ? உள்ளத்தின் உணர்ச்சி கவிதையாகவே வெளிப்பட்டு விடுமோ? மனிதனுக்கு முதல் கற்பனையைக் காதல்தான் தருகிறதா?

பாதி வழியில் சாலையை ஒட்டினாற் போல் பாழடைந்த சத்திரம் ஒன்று தென்பட்டது. சத்திரத்துக்குப் பின்னால் சதுரமான குளம் ஒன்று! நான்கு பக்கங்களிலும் படிக்கட்டுகளுள்ள சிறு குளம். குளத்தங்கரையில் பெரியதொரு மாமரம் இருந்தது.

உச்சி வெய்யிலால் வழிந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டு மரத்தடியில் உட்கார்ந்து களைப்பாறினான். இன்னும் பாதி வழி எதிரே கிடந்தது. மேலே மரத்தை அண்ணாந்து பார்த்தான். குலை குலையாகப் பழக்காய்கள் குலுங்கின. அணில்களின் ஆனந்த வேட்டையும் கிளிகளின் கொஞ்சல்களுமாக ஒரே இன்பக் கொள்ளைக்கு அந்த மரம் இடம் கொடுத்துக் கொண்டிருந்தது. தலைக்கு நேரே பழுத்துத் தொங்கும் மாங்கனி ஒன்றை அணில் குடைந்து குடைந்து தள்ளியது. அந்தக் கனியின் செழுமை அவனுக்குச் செங்கமலத்தின் சிவந்த கன்னங்களை நினைவூட்டியது.



'தொப்' பென்று அவன் மடியில் வந்து விழுந்தது, அந்தக் குண்டு மாம்பழம். எடுத்து அதைத் திருப்பிப் பார்த்தான். எந்த ஓவியனாலும் தீட்ட முடியாத வர்ணக் கலவை அதன் கன்னங்களுக்கு. சமூகம் என்ற அணில் கடித்த பரம்பரையிலிருந்து தப்பி வந்து அவன் மடியில் விழுகிறாளா செங்கமலம்?

மாம்பழம் மிக ருசியாக இருந்தது. அவளை நினைத்துக் கொண்டே அதைச் சாப்பிட்டுக் கையலம்பினான்.

சட்டைப் பைக்குள்ளிருந்த குறிப்பு நோட்டைப் பிரித்து மளமளவென்று சில வரிகளை எழுதிக் கொண்டான். கண்ணபுரம் போகும் வரையில் கவிதை உணர்ச்சி அவனுக்காகக் காத்திருக்கவில்லை. பாதி வழியிலேயே அது உள்ளத்தை உடைத்துக் கொண்டு வெளிப்பட்டது. பிஞ்சுக் கவிதைதான்; எதுகை மோனை சரியாக இருந்ததோ என்னவோ; என்றாலும் தனக்குள் மாம்பழக் கவியாக மாறி விட்டதுபோல் அவனுக்கு நம்பிக்கை!

சைக்கிளின் சக்கரங்கள் பதினைந்து மைல் வேகத்தில் சுழன்றன. கண்ணபுரத்துக்குள் நுழையும்போது சரியாகப் பிற்பகல் இரண்டு மணி. கடைத்தெருவில் ஒரு ஒட்டலுக்குப் போய்ப் பலகாரம் சாப்பிட்டான். சுப்பையாவின் வீட்டுப் பக்கம் சென்றான். அகால நேரத்தில் போய் அவர்களுக்குச் சாப்பாட்டுத் தொல்லை கொடுக்க அவன் விரும்பவில்லை.

வீட்டில் தேவகியும் தாயாருமே இருந்தார்கள். தணிகாசலத்தைக் கண்டவுடன் தேவகியின் முகம் மலர்ச்சியுற்றது. அடுக்களைக்குள் ஓடிப் போய் ஒரு கரண்டியில் சர்க்கரை எடுத்துக் கொண்டுவந்து அவனிடம் நீட்டினாள்.

''நேற்றுத்தான் அண்ணிக்குத் தஞ்சாவூரில் ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. அண்ணா பார்த்து வரப் போயிருக்கிறார். கொஞ்சம் சர்க்கரையை வாயில் போட்டுக் கொள்.''

அவளுக்குக் குழந்தை பிறந்தால் எவ்வளவு ஆனந்தம் அடைவாளோ, அவ்வளவு ஆனந்தம் தேவகிக்கு.

''என்னால்தான் போய்ப் பார்க்க முடியவில்லை. இங்கே அம்மாவைக் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது'' என்றாள். பிறகு, ''அண்ணா வந்தவுடன் நான் ஒருநாள் போய்த் திரும்ப வேண்டும்; குழந்தையும் அண்ணியும் வருவதற்கு ஒருமாதமாவது ஆகும்'' என்றாள்.

''அண்ணா என்றைக்குத் திரும்புவார்?'' என்று கேட்டான் தணிகாசலம்.

''இரண்டு நாட்களாகும்.''

தான் வந்த அலுவலைச் சொல்லிவிட்டு, நாகநாதன் என்பவரைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டான். இரவுச் சாப்பாட்டுக்குத் தேவகி அவனை வீட்டுக்கு அழைத்தாள். அன்றைக்கே தான் புதுப்

பட்டிக்குப் போக வேண்டு மென்றும் தங்க வேண்டிய அவசியம் இருக்காதென்றும் கூறினான். "தங்குவதாக இருந்தால் வா ; சமையல் செய்து தயாராக வைத்திருக்கிறேன்."

பிரமுகரைத் தேடிக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதாக இல்லை. அலுவலகத்தில் சென்று விசாரித்தான். பங்களாவில் இருப்பதாகச் சொன்னார்கள். அவன் நுழையக் கூடிய அவ்வளவு சிறிய பங்களாவாக அது இல்லை.



பங்களாவில் மனிதர்கள் நுழைய முடியாது. நாய் கட்டிக் கிடந்தது; வில்லைச் சேவகன் வாசலில் காத்து நின்றான். கார்கள் உள்ளே சென்றன. பட்டாளத்துத் தோரணையில் 'சல்யூட்' அடித்து ஒதுங்கி நின்றான் சேவகன். நடந்து சென்றவர்களை வழி மறித்தான். கட்டிக் கிடந்த நாயும் அடித் தொண்டையால் விடாமல் குரைத்தது.

"நான் அவர்களை அவசரமாய்ப் பார்க்க வேண்டும்" என்று சேவகனிடம் கூறினான் தணிகாசலம்.

"எல்லாருக்குந்தான் அவசரம் ; ஐயாவுக்குத் தான் நேரமில்லை."

"பார்க்கவே முடியாதா ?" என்று நம்பிக்கை இழந்த குரலில் கேட்டான்.

"இது பெரிய மனுஷங்க வந்து பார்க்கிற நேரம் ; நாளைக்கு நீ ஆபீசிலே போய்ப் பார்."

"அங்கேதான் போனேன் ; இங்கே வரச் சொன்னார்கள்."

சேவகன் இரக்கமில்லாமல் சிரித்தான். கட்டிக் கிடந்த நாயும் குரைத்தது. தணிகாசலம் தான் பதினைந்து மைல தூரத்திலிருந்து ஒரே ஒரு கையெழுத்து வாங்குவதற்காக வந்த விவரத்தை உருக்கத்துடன் அவனிடம் விவரித்தான். சேவகன் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. அவனை உள்ளே விடுவதாகவும் இல்லை. எங்கே போவது? என்ன செய்வது ? தணிகாசலத்துக்கு ஒன்றும் புரியவில்லை. கையெழுத்து வாங்கி மறுநாள் ஆபீஸில் கொடுத்தாக வேண்டும். சுப்பையாவும் ஊரில் இல்லை.

சைக்கிளும் தானுமாக மூன்று மணி நேரம் அதே இடத்தில் கால் கடுக்க நின்றான். கார்கள் வருவதும் போவதுமாக இருந்தன. அவனைப் போல் கால் நடைப் பேர்வழிகள் அலுத்துப் போய்த் திரும்பி விட்டார்கள். வானம் வேறு கறுத்துக் கொண்டு வந்தது. மெல்ல மழைக் காற்று புறப்பட்டது. விரைவில் வானத்தைக் கிழித்துக் கொண்டு கடும் மழையே கொட்டும் போல் தெரிந்தது.

பையனின் பிடிவாதம் வில்லைச் சேவகனின் உறுதியைச் சிறிது தளர்த்தியிருக்க வேண்டும். 'நீ போய்த் தொலைய மாட்டாயா?' என்று கேட்கும் பாவனையில் தணிகாசலத்தைப் பார்த்தான். 'நீ என்னை விட்டுத் தொலைக்க மாட்டாயா ?' என்று தணிகாசலம் அவனைக் கண்களால் கேட்டான்.

சேவகன் கிழவன். மீசை நரைத்துப் போய் உதடுகளுக்குக் கீழே தொங்கியது.

"தாத்தா, என் அப்பாவை இவருக்குத் தெரியும் ; கடிதம் வேறே கொண்டு வந்திருக்கிறேன். மழை வருவதற்குள்.."

கிழவன் அலட்சியமாய்க் கை நீட்டிக் கடிதத்தை வாங்கிக் கொண்டான். "நீ உள்ளே வந்து படிக்கட்டுக்குப் பக்கத்தில் நில். என் பின்னால் நுழைந்து விடாதே ! ஐயா என்ன சொல்கிறார் பார்ப்போம்."

இருவரும் வெளி வாசலைத் தாண்டி உள்ளே போனார்கள். தணிகாசலம் உள் வாசலுக்குப் பக்கத்தில் நின்று சன்னல் வழியே பார்த்தான். செல்வப் பெருக்கின் சின்னங்கள் வீடு முழுவதும் சிதறிக் கிடந்தன. வெள்ளிப் பாத்திரங்கள், இரும்பு அலமாரிகள், சாப்பிடும் மேசைகள், மெத்தை தைத்த நாற்காலிகள், பட்டுத் துணிக் குவியல்கள், எந்த சமஸ்தான அதிகாரியும் அவர் வாங்கும் சம்பளத்தில் இத்தனை பொருள்களை வாங்கியிருக்க முடியாது.

சேவகன் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு கடுகடுத்த முகத்துடன் வெளியில் வேகமாக வந்தான்.

"ஏதும் சொன்னார்களா ?" என்று கேட்டான் தணிகாசலம்.

"ஊஹூம்."

"கடிதத்தை..."

"படிச்சுப் பார்த்தாங்க; கிழிச்சுக் குப்பைத் தொட்டியிலே போட்டாங்க."

"நான் வெளியில் நிற்பதை அவரிடம் சொன்னீர்களா ?"

சேவகன் உறுமினான். "யார் உன்னை நிற்கச் சொன்னது? போயேன் !"

"போய்க் கொஞ்சம் சொல்லுங்கள்."

"அட போப்பான்னா !"



தணிகாசலத்துக்குக் கண்களில் நீர் முட்டிக் கொண்டு வந்தது. மனிதனை மனிதன் காரணமில்லாமல் இவ்வளவு கேவலமாக நடத்துவானேன்? உண்டு, இல்லை என்று சொல்லக் கூடாதோ?

காரணம் இருந்தது; அவனிடம் காசு இல்லை!

சேவகனுக்கு உள்ளே ஏதாவது ஏச்சுக் கிடைத்திருக்க வேண்டும். அந்த வேகத்தில் அவன் இவனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விடுவான் போல் தோன்றியது. "கழுத்தை அறுக்காதே ! போய்த் தொலை !" என்று கத்தினான்.

தணிகாசலமும் திரும்பக் கத்தினான். "சமஸ்தானத்தில் ஏன் இப்படி ஒரு சட்டம் போட்டார்களாம்?"

உள்ளே இருந்து ஒரு புலி இதைக் கேட்டு உறுமிக் கொண்டு வெளியில் வந்தது. ஒல்லியாக, உயரமாக, சிடுசிடுத்த முகத்துடன் ஒரு மனிதர் வெளியே வந்தார். அவர்தாம் நாகநாதனாக இருக்க வேண்டும்.

"யார் நீ?"

மளமளவென்று பாடத்தை ஒப்பித்தான் தணிகாசலம். தான் காட்டிலாகா பரமசிவத்தின் பிள்ளை என்றும், வேலையில்லாத் திண்டாட்டத்தில் கஷ்டப்படுவதாகவும், தனக்கு வேண்டியது ஒரே ஒரு கையெழுத்தென்பதையும் கூறி முடித்தான். தனக்கு வந்த கடிதத்தை எடுத்து நீட்டினான். அவர் அதை வாங்கிக் கொள்ளவில்லை.

"உன் அப்பாவை எனக்கு ஞாபகமில்லை. அப்படியே இருந்தாலும் நீ அவர் மகன் என்று எனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

"சித்தப்பாவின் கடிதம்..."

"யார் இந்தச் சித்தப்பா? கண்டவனையெல்லாம் யார் எனக்குக் கடுதாசி எழுதச் சொன்னது?"

தணிகாசலம் வாயடைத்து நின்றான்.

"பி. ஏ., எம். ஏ. முடித்தவனெல்லாம் வேலைக்குக் கிடந்து ஆலாய்ப் பறக்கிறான். வேலை வேணுமாம் வேலை!"

அவர் சட்டென்று திரும்பி உள்ளே நடந்தார். தணிகாசலம் மறுபடியும் அவர் வெளியில் வருவார் என்று எதிர்பார்த்தான். வரவேயில்லை. சன்னல் வழியே மேசைக்கு முன்னால் அவருடைய குடும்பம் சாப்பிடுவதற்கு உட்காருவதைக் கவனித்தான். அவனுக்கும் பசியெடுத்தது. அதற்குள் மழை வேறு பிடித்துக் கொண்டது.

கடுமையான மழை. கீழே இறங்கி நடக்கவும் வழியில்லை.

சேவகனுடைய கடுமை இதற்குள் கரைந்து விட்டது. இரக்கத்துடன் அவனைப் பார்த்து மெதுவாகப் பேசினான்:

"பரமசிவத்து ஐயா பிள்ளையா நீ? நான் அவர்கிட்டே வேலை பார்த்தவன்."

தணிகாசலம் பதில் பேசவில்லை. அநுதாபத்தை எதிர்பார்க்கும் நிலை அவனுக்கு மாறி விட்டது.

"வருத்தப் படாதே தம்பி! முன்னாலேயே உன் அப்பா பேரைச் சொல்லியிருந்தால் நான் உள்ளே விட்டிருப்பேன். ஆனால் உள்ளேவிட்டு என்ன செய்யறது? யாருக்குமே இவர் கையெழுத்து போடுகிறதில்லை."

"கடமை இல்லையா இது?"

"இதிலே ஒரு ரகசியம் இருக்கு. பெரிய இடத்து விவகாரம். வெளியிலே விட்டுடாதே! இந்த எசமான் சமஸ்தானத்

இலே பிறந்தவரில்லே ; சட்டமும் இப்போ வந்த சட்டந்தான் : இதற்கு முன்னாலே எப்படியெல்லாமோ ஆளைக் கொண்டு வந்து விட்டாரு. இப்போ அப்படித் தள்ள முடியலேங்கிற ஆத்திரத்திலே வருகிறவங்க மேலே யெல்லாம் எரிஞ்சு விழுகிறாரு ... போயிட்டுவா தம்பி. மழை கொஞ்சம் ஓஞ்சாப்பிலே தெரியுது.''

மழை ஒன்றும் ஓயவில்லை. அடித்துக் கொட்டிக் கொண்டுதானிருந்தது. கிழட்டுச் சேவகனின் பயத்தைத் தணிகாசலம் நன்றாகத் தெரிந்து கொண்டான். அவன் அதற்கு மேல் அந்த இடத்தில் நின்றால் சேவகனை வெளியில் அனுப்பினாலும் அனுப்பி விடுவார் நாகநாதன்.

முழங்கால் தண்ணீரில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வெளியில் நடந்தான்.

## அத்தியாயம் 18

# கவிதை கொடுத்தவள்

**க**ண்ணபுரத்துத் தெரு விளக்குகள் மழையில் அழுது வடிந்தன. கோடை மழை தணிகாசலத்தின் முகத்தில் பேயாய் அறைந்தது. சந்தனக் குழம்பாக ஓடிய மழைத் தண்ணீரில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு அவன் நடந்தான். நடந்து எங்கே போவது என்று தெரியவில்லை. வயிற்றுப் பசி குடலைக் கிள்ளியது. நாகநாதன் வீட்டில் கிடைத்த வரவேற்பு தன்மானத்தைக் குத்திக் கிழித்தது. பசி உள்ளவனுக்குத் தன்மானம் இருக்கக் கூடாது. பாவம், இளம்பிள்ளை! இன்னும் அவன் இந்த உலகத்தில் சரியாக அடிபடவில்லை.

இந்த நேரத்தில், இந்தக் கோலத்தில் அவனுக்குச் சுப்பையாவின் வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை. வேறு எங்குமே போகப் பிடிக்கவில்லை. மழையில் மெதுவாக நடந்து செல்வதில் அவனுக்கு ஒரு ஆறுதல் கிடைத்தது. கால் போன திக்கில், அருவியைப் போல் வழிந்து கொட்டும் நீரில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு அவன் நடந்தான். ஓரமாகத்தான் அவன் நடந்து சென்றான். என்றாலும் குறுக்கு நெடுக்கில் விரைந்து செல்லும் கார்கள் அவன்மீது தாராளமாகச் சேற்றை அள்ளி வீசிச் சென்றன. 'கார்களுக்குத்தான் மனிதன் பிரகாசமாக ஒளி வீசும் இரு கண்களைப் பதிப்பித்திருக்கிறானே தவிர, தனக்குக் கண்கள் வேண்டும் என்று வைத்துக் கொள்ளவில்லை' என்று முணுமுணுத்தான் தணிகாசலம்.

சட்டைப் பையில் நான்கணாவும், நாட்குறிப்பும், பேனாவும் இருந்தன. சைக்கிளை ஒரு கையிலும், சட்டைப்பையை மறு கையிலும் பிடித்துக் கொண்டான். பைக்குள்ளே இருந்த நாட்குறிப்பில் அவன் எழுதிய கவிதைத் துணுக்கைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளவேண்டுமென்ற ஆவல். மத்தியானம் மரத்தடியில் உட்கார்ந்து அதை எழுதிய இன்பகரமான நேரத்தையும், நேற்று இதே நேரத்தில் தான் கண்டு களித்த செங்கமலத்தின் நடனத்தையும், இப்போது நடுத்தெரு மனிதனைத் தலைகுனிந்து நடப்பதையும் நினைத்துக் கொண்டான். அவனுக்குச் சிரிப்பு வந்தது; அத்துடன் பசிக் களைப்பும் தலையைச் சுற்றியது.

சட்டைப் பையை மறைத்திருந்த இடது கரத்தைக் கீழே தொங்க விட்டான். எல்லாமே நனையும்போது அக் கவிதையும் சேர்ந்து நனைந்தால் என்ன? நன்றாக நனையட்டும்! காதல், கவிதை, பக்தி, கலை என்ற விவகாரங்கள் நடுத்தெரு மனிதனுக்கு எதற்காக? பசி ஒன்றுதான் அவன் செல்வம்; அவமானம் ஒன்றுதான் அவன் புகழ். பசிக்காதவனுக்குக் காதலிக்க நேரமுண்டு, கவிதை எழுத ஒய்வு உண்டு, கலையை அநுபவிக்





கக் காசு உண்டு. தான் எங்கே? செங் கமலம் எங்கே? அவள் நடனமெங்கே?

முதல் நாள் அவனிடம் அவள் பேசிய பேச்சுக்கள் திரும்பவும் அவனுடைய சட்டைப் பைக்குக் கரத்தை இழுத்துச் சென்றன. கவிதையைக்காப்பாற்றினான்.

கையிலுள்ள நாலணாவைச் செலவழிக்க அவனுக்கு மனம் வரவில்லை. மற்றொருநாள் அங்கே தங்கித் திரும்பவும் கையெழுத்து வேட்டையில் இறங்க வேண்டும், புதுப்பட்டி போய்ச் சேரும் வரையில் வெறும் பையுடன் இருக்கக் கூடாது. இந்த நாலணா பையை விட்டுப் போய் விட்டால் உடம்பில் இருக்கும் அரைகுறைத் தெம்பும் போய்விடும்.



தெருத் திண்ணை ஒன்றில் மழைக்காக ஒதுங்கினான். இரவுப் பொழுதைக் கழிப்பதற்கும் யோசனை செய்ய வேண்டும், எங்கு போய்த் தங்குவது? எப்படித் தங்குவது? பசித்த வயிற்றுடன், நனைந்த உடையுடன் எப்படித் தூக்கம் வரும்? தூக்கம் வந்தால் சைக்கிளை யார் பார்த்துக் கொள்வது? மழை நின்று சிறு தூற்றல் போடும் வரையில் அங்கு நின்றான், அதற்குள் ஊர் அடங்கி உறங்கப் போய்விட்டது. 'தங்குவதாக இருந்தால் வா: சமைத்து வைத்திருக்கிறேன்' என்று தேவகி கூறினாளல்லவா? அதன்படி முன்பே செய்திருக்கலாம் என்று நினைத்தான்.

பசி வெட்கத்தை விரட்டியது.

சுப்பையாவின் வீட்டுக்குப் பதினொரு மணிக்கு வந்துசேர்ந்தான் தணிகாசலம். விளக்குகள் எரியவில்லை. கதவு தாழிடப்பட்டிருந்தது. 'தட்டுவோமா, வேண்டாமா?' என்ற தடுமாற்றத்தில் சிறிது நேரத்தைக் கழித்துவிட்டுப் பிறகு மெல்லத் தட்டினான். பயந்து கொண்டே கதவைத் தட்டினான்.

நடைச்சத்தம் உடனடியாகக் கேட்டதும் விளக்கைப் போட்டுக் கொண்டு தேவகி கதவைத் திறந்தாள். தணிகாசலத்தின் தோற்றத்தைக் கண்டவுடன் அவளுடைய தேகமே பதறியது. ''வா! ஏன் நிற்கிறாய்? உள்ளே வா!'' என்று அழைத்து, சைக்கிளைப் பிடுங்கிக் கூடத்தில் வைத்தாள். துவட்டிக் கொள்ளத் துண்டைக் கொண்டு வந்தாள். சுப்பையாவின் வெளுத்த உடைகள் பெட்டிக்குள்ளிருந்து வெளியில் வந்து சேர்ந்தன. மழையில் சொட்டச் சொட்ட நனைந்த தலையை உலர்த்திக் கொள்ளச் சாம்பிராணிப் புகையைத் தயார் செய்தாள்.

சாப்பாடு நடந்து கொண்டிருந்தது.

''எங்கே சொல்லிக் கொள்ளாமல் திரும்பி விட்டாயோ என்று நினைத்தேன். இவ்வளவு நேரம் காத்திருந்து இப்போது தான் படுக்கப் போனேன். தூக்கம் வரவில்லை. மழைக்கு ஒதுங்கக்கூடத் தெரியாத பிள்ளை என்ன பிள்ளை?''

தணிகாசலம் அன்றைக்கு நடந்த கதையைக் கூறி முடித்தான். சாப்பாடு முடிந்தவுடன் சுப்பையாவின் அறையில் அவனைப் படுக்கச் சொல்லிவிட்டுச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள் தேவகி. ''நீ இவ்வளவு சிரமப்பட்டிருக்கவேண்டியதில்லை. அண்ணா உன் வேலை விஷயமாக மகாலிங்கம் என்பவரிடம் சொல்லியிருக்கிறாராம். அவரைப் போய்க் காலையில் பார்த்து வா. மிகவும் நல்ல மனிதராம். அண்ணா பெயரைச் சொன்னால் உடனே புரிந்துகொள்வார்.''

தணிகாசலம் முதல்நாள் மண்டகப் படிக்கு வந்திருந்த பிரமுகரை நினைத்துக் கொண்டான். அவரும் இவரும் ஒருவராகத்தான் இருக்க வேண்டும். அவனுக்கு நம்பிக்கை பிறந்தது.

இரவில் அமைதியாக உறங்கினான் தணிகாசலம். செங்கமலத்தின் நினைவு அவனுக்குத் தேவகியிடம் இருக்க வேண்டிய நன்றி உணர்ச்சியைக் கூட மறக்க வைத்தது. பொழுது புலர்ந்தவுடன் தேவகி அவனுடைய உடைகளைத் துவைத்து உலரப் போட்டிருந்தாள். பலகாரம் சாப்பிட்டு விட்டு மகாலிங்கத்தைப் பார்ப்பதற்குப் புறப்பட்டான்.

நாகநாதனை விடப் பெரிய அதிகாரியாக இருந்தும் அவரிடம் அதிகாரச் செருக்கைக் காணோம். தொந்தியும் தொப்பையுமாக நாற்காலியில் சாய்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். அவனை அருகில் உட்காரச் சொல்லிப் பேசினார். சுப்பையாவின் சிபாரிசு பற்றியும் குறிப்பிட்டார். அவனிடமே பேனாவை வாங்கிக் கையெழுத்தையும் போட்டுக் கொடுத்தார்.

''நீதானே மண்டகப் படியில் என் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாய்? சரி, இதை ஆபீசில் கொடுத்து விட்டுப் போ. சீக்கிரம் உனக்கு உத்தரவு வரும்.''

எப்படி அவருக்கு நன்றி தெரிவிப்ப தென்று தெரியாமல் திணறி விட்டுத் தணிகாசலம் திரும்பினன்.

தன்னுடைய வேலைகளை முடித்துக் கொண்டு தேவகியிடம் விடைபெற்றான். அன்றைக்கு மாலைக்குள் செங்கமலத்தைப் பார்க்கா விட்டால் அவன் தலை வெடித்துவிடும் போல் வலித்தது.

புதுப்பட்டி கிராமத்தை நோக்கிச் சைக்கிள் சக்கரங்கள் உருண்டன. வழு வழுப்பான நேர் பாதை, மேடு பள்ளம் நிறைந்த நொடிப் பாதை, சேறும் மழை நீரும் கலந்த சகதிப் பாதை—இப்படி மாறி மாறிக் குறுக்கிட்டன. கடந்த இருபத்து நாலு மணி நேரத்துக்குள் வாழ்க்கையின் ஒரு அணுத்துளி தன் அநுபவத்தை அவனிடம் பதிய விட்டுச் சென்றது. மிதி வண்டிச் சக்கரத்தையும் தன்னையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டான். சமூகத்தின் மிதி வண்டி அவன். எதிர்காலக் குமாஸ்தா!

எதிர்காலக் கல்லூரி ஆசிரியர் இல்லை அவன்; எதிர்கால இளைஞர்களை அவன் தட்டி எழுப்ப முடியாது; உயிர்த் துடிப்புள்ள இளஞ் செல்வங்களுடன் நேருக்கு நேர் நின்று பேசப் போவ தில்லை. 'பைல்' கட்டுகளை அடுக்கித் தன் முதுகில் சுமந்து கொண்டு சமஸ் தான அலுவல்களுக்கு வளைந்து கொடுக் கப் போகிறன்.

ஐந்து மைல் தூரம் வந்தவுடன் வண்டியை வேகமாக அழுத்தி மிதித்தான். அவனுடைய கிராமம் மேட்டில் இருந் தது. இன்னும் பத்து மைல் தூரமும் மிதியை விட்டுக் காலை எடுக்க முடியாது. செங்கமலத்தைக் காண வேண்டு மென்ற துடிப்பில் கண்களை மூடிக் கொண்டு வண்டியை உருட்டினன்.

'படீ' ரென்று பின் சக்கரத்தில் ஒரு சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து 'டங் டங்' என்று சக்கரத்தின் இரும்பு தரையில் மோதியது. நிறுத்தி விட்டு இறங்கிப் பார்த்தான். பாதையில் கிடந்த குதிரை லாடம் ஒன்று சக்கரத் தில் பதிந்து கிழித்து விட்டது. பற்களைக் கடித்துக் கொண்டு அதைப் பிடுங்கி ஆத்திரத்துடன் எறிந்தான். சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ஊருக்கு நடந்து போவதைத் தவிர வேறு வழியில்லை. இது வரையில் வண்டி அவனைத் தள்ளி யது; இனி அவன் வண்டியைத் தள்ளிச் செல்ல வேண்டும்.

வழியில் நேற்றுப் பார்த்த சத்திரமும் மாமரமும் குறுக்கிட்டன. அவன் அங்கு போய் உட்காரவில்லை. குளத்தில் இறங்கி இரண்டு வாய்த் தண்ணீர் குடித்து விட்டு நடந்தான். நேற்று அவன் கண்களுக்கு அவ்வளவு அழகாகத் தோன்றிய உலகம் இன்றைக்கு ஏனே அவனைக் கண்டு பெருமூச்சு விட்டது. மனிதனுடைய வசதிக்கும் மன நிலைக் கும் தக்கபடி அவன் காணும் காட்சி களும் மாறும் போலும்!

என்றாலும் செங்கமலம் அவனை இழுத் துப் பிடித்து நடக்க வைத்தாள். தாம ரைக் குளத்தில் உட்கார்ந்து கொண்டு அவனை விரைந்து வரச் சொல்லிக் கை காட்டினள். அவனுடைய சோர்வு, பசி, களைப்பு, கால்வலி அனைத்தையும் அவள் வாங்கிக் கொண்டாள்.

செங்கமலத்தின் சிரிப்பைக் காண் பதற்காகப் பத்து மைல் என்ன, நூறு மைல்கள் இந்த ஓட்டைச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடக்கலாம்.

புதுப்பட்டி கிராமம் கண்ணுக்குத் தெரிந்தது. கோவில் கோபுரத்துக்கு அருகிலிருந்த இரு தென்னை மரங்களைக் கவனித்தான். பின்னல் தெரிந்த வானத்தில் கருமேகங்கள் படர்ந்திருந் தன. ஊருக்குள் நுழையப் போகும் திருப்பத்தில் சின்னஞ்சிறு சுழல் காற்று அவனை வரவேற்றது.

தெருவுக்குள் நுழைந்தவுடன் அவன் கால்கள் நகரவில்லை. கண்கள் இமைய வில்லை. செங்கமலத்தின் வீட்டு வாச லில் நீல நிறக் கார் ஒன்று நிற்பதைக் கண்டு திடுக்கிட்டான்.

கார் பளபளவென்று பிற்பகல் வெய்யி லில் மின்னிக் கொண்டிருந்தது. டிரை வரும் நட்டுவக் கிழவருமாகச் சாமான் களைத் தூக்கிப் பின்புறம் வைத்துக் கொண்டிருந்தார்கள். காரோட்டி முன்னல் வந்து உட்கார்ந்து கொண் டான். கிழவர் கதவைத் திறந்து விட் டார். செல்லக்கண்ணு பரபரவென்று செங்கமலத்தை இழுத்துக் கொண்டு வந்து காருக்குள் தள்ளினள். தானும் ஏறிக் கொண்டாள். கதவு சாத்தப் பட்டது. கிழவனர் காரோட்டிக்குப் பக்கத்தில் முன்னல் வந்து உட்கார்ந்து கொண்டார். பெரியதொரு உறுமலு டன் புகைக் குவியலை வெளியே தள்ளிக் கொண்டு அது புறப்பட்டது.

தணிகாசலம் அப்போது தெரு முனை யில் நடுவழியில் நின்று கொண்டிருந் தான். வழியை விட்டு அவன் விலக வில்லை. அவன் சைக்கிளைப் பற்றி யிருந்த கரம் நடுங்கியது.

காரோட்டி கோபத்துடன் காரைத் திருப்பினன். முன் சக்கரத்தின் வலது புற மூடி சைக்கிளைக் கீழே தள்ளிவிட்டு மேலே நகர்ந்தது. காரின் வேகம் குறைந்தது. நான்கு கண்கள் ஒன்றை ஒன்று மென்று தின்றன.

தலையை வெளியில் நீட்டி, "கண் தெரியவில்லையா உனக்கு? ஒதுங்கிப் போ!" என்று டிரைவர் கத்தினான்.

அவன் ஒதுங்கவில்லை. "தணிகாசலம்!" என்று அடிவயிற்றைப் பிடித்துக்கொண்டு அலறினாள் செங்கமலம். அலறிய வாய் மூடப்பட்டது.

கார் ஒதுங்கி, தெருப்புழுதியை அவன் மேலே வீசி விட்டு, விரைந்து சென்றது.

கண்ணுக்குக் கார் மறையும் வரையில் அவன் கீழே விழுந்த சைக்கிளை எடுக்கவில்லை. பிறகு அவன் எப்படி அதைக் குனிந்து எடுத்தானோ, எப்படித் தள்ளிக் கொண்டு வந்தானோ, எப்படி வீடு வந்து சேர்ந்தானோ, தெரியாது.

வீட்டில் யாரிடமும் எதுவும் பேசாமல் சைக்கிளைப் போட்டு விட்டு வாசலுக்கு வந்தான். அடுத்த வீட்டுக் கதவில் பெரியதொரு இரும்புப் பூட்டு தொங்கியது. அந்தக் கதவை நாளை மறு நாள் யாரும் வந்து திறப்பார்களா? மாட்டார்களா? செங்கமலம் திரும்பி வருவாளா? மாட்டாளா? அந்தப் பூட்டுக்குப் பதில் சொல்ல வாயில்லை.

குளத்தங்கரைப் படிக்கட்டில் போய் உட்கார்ந்தான். அவனுடைய நிழல் தண்ணீரில் நடுங்கியது. முதல் முதலாக அவளைச் சந்தித்ததிலிருந்து ஐந்து நிமிஷத்துக்கு முன்பு நடந்தது வரை எண்ணிப் பார்த்தான். இப்படிச் சொல்லிக் கொள்ளாமல் புறப்படுவதற்கு என்ன பொருள்? அவர்கள் எங்கே போகிறார்கள்? கண்ணபுரத்துக்குப் போவதானால் அவர்கள் வீட்டைத் தேடிக் கண்டு பிடிக்க முடியுமா? கண்டு பிடித்தாலும் அவளைக் காண முடியுமா?

'தணிகாசலம்!' என்று அவள் கதறிய கதறலை நினைத்துக் கொண்டான்.

'ஒதுங்கிப் போ!' என்று டிரைவர் கூறியதையும் நினைத்துக் கொண்டான்.

காரில் போகிறவளைக் காதலித்தால், இரவல் சைக்கிளில் போகிறவன் ஒதுங்கிப் போக வேண்டியதுதானா?

சட்டைப் பையிலிருந்த கவிதையைப் பிரித்தான். அதன் எழுத்துக்கள் கண்ணீரால் பொட்டுப் பொட்டாய்க் கலையத் தொடங்கின. கவிதையைக் கொடுத்தவள் காரில் போய் விட்டாள். அவள் எங்கே போயிருக்கிறாள் என்று கேட்பதற்காகத் திரும்பவும் தன் வீட்டுக்கு வந்தான். முகத்தைத் துடைத்துச் சுத்தமாக வைத்துக் கொண்டு, தன் உணர்ச்சிகளைக் கூடியவரையில் மறைத்துக் கொண்டு, சித்தியிடம் சென்றான். அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"சித்தி! அடுத்த வீட்டுக்காரர்கள் காரில் போகிறார்களே, எங்கே போகிறார்கள் தெரியுமா?" என்று கேட்டான்.

பையனைப் பார்த்தவுடன் கேள்விக் குறி போல் சித்தியின் நெற்றியில் ஒரு சுருக்கம் எழுந்தது. (தொடரும்)

## திருவாசகமணியின் தொண்டு

தமிழுக்கும் தேவாரத் திருமுறைகளுக்கும், சைவத்துக்கும் லக்ஷம்லக்ஷமாகச் செலவழித்து, "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற ஒரே கொள்கையில் நிரந்தரமான சிவத் தொண்டு புரிந்துவரும் திருப்பனந்தாளில் உள்ள காசி மடத்தின் தற்போதையத் தலைவராகிய ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பு ஒரு திட்டம் ஏற்படுத்தியுள்ளார். அதன்படி அலகாபாத், காசி இவ்விரு நகரங்களில் உள்ள சர்வகலாசாலைகளிலும் முறையே ஒன்று, மூன்று சொற்பொழிவுகள் சைவ சித்தாந்தத்தைப் பற்றி ஆங்கிலத்தில் நிகழ்த்தப்பட்டு வருகின்றன.



இவ்வாண்டு மேற்படி சைவசித்தாந்த சொற்பொழிவை ஆற்றச் சென்றவர் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்கள். 'திருவாசகமணி' அவர்கள் தமிழ் நாடெங்கும் சைவச் சொற்பொழிவுகள் ஆற்றி வருவதும் பலருக்கு நன்றாகத் தெரியும். இவர் இம்மாதம் முறையே செப்டம்பர் 6-ம் தேதி அலகாபாத் சர்வகலாசாலையிலும், 10, 11, 12 தேதிகளில் காசி ஹிந்து சர்வகலாசாலையிலும் சைவ சித்தாந்தத்தைப் பற்றி ஆங்கிலத்தில் நான்கு சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார்.

ஆறும் தேதி நடந்த அலகாபாத் கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய சம்ஸ்கிருதப் பிரிவின் தலைவர் ஸ்ரீ சட்டோபாத்யாயர் அவர்கள், "வடநாட்டையும் தென்னாட்டையும் சித்தாந்தத்தின் மூலம் தம் சிறந்த பேச்சால் ஒற்றுமைப்படுத்தும் திருவாசகமணியைப் பாராட்டுகிறேன்" என்று கூறினார்.

காசியில் இருந்து வரும் நிரந்தர சைவ சித்தாந்தப் பேராசிரியராகிய ஸ்ரீ கே. சிவராமன் அவர்கள் நன்றி கூறி, 'திருவாசகமணியின் தொண்டினால் உலகமெங்கும் சித்தாந்தம் வாழும் வகை பிறக்கும் என்று எதிர்பார்க்கிறோம்' என்றார்.

# கிரைப் ஸிரப் - ஐ. டி. எல்.

சிசுக்களின் ஜீரணக் கோளாறுகளை நீக்கும் பிரபல நிவாரணி. உடனே குணம் தெரியும்.



தொடர்ந்து உபயோகித்தாலும் ஹானி விளைவிக்காதது.






குழந்தைகள் விரும்பிச் சாப்பிடக் கூடியது

தயாரிப்பவர்கள்:

**தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிட்.,**
மல்லேஸ்வரம், பெங்களூர்-3.

விற்பனை டிப்போ: 35/37, தம்பு செட்டி தெரு, சென்னை-1.

---

## உலகிலேயே அதிக விற்பனையுள்ள ஸைகிள்கள்



பகலும் இரவும், ஒவ்வொரு நிமிஷமும் ராலே வகையறா ஸைகிள்கள் இரண்டுக்குக் குறையாமல் உலகில் எங்கோ விற்பனையாகின்றன. இந்த வர்க்கத்தில் மிக்க விரும்பப் படும் இரண்டு வகைகள் ராலே, ராபின் ஹூட் ஆகும்— அழகிய தோற்றம் கொண்டு, சவாரிக்கு செளகர்யமாகவும் வைத்துப் பராமரிக்கச் சிக்கனமாகவும் உள்ளன.

# ராலே




# ராபின்ஹூட்

SRC-48 T



இலக்கியச் செல்வம் 44

# பழைய நினைவுகள்

பேராசிரியர்:
அ. சீநிவாசராகவன்

தீயிற்கனி அருந்தி மயங்கிக் கிடக்கும் கிரேக்க வீரர்கள் சிந்தை, பழைய நினைவுகளைத் தொட்டுப் பார்க்கிறது.

எப்போதோ பல ஆண்டுகளுக்குமுன், 'வா' என்று போர் முரசம் அதிர்ந்த போது, இலிய நகரப் போர்க்களத்தை நோக்கி அவர்கள் புறப்பட்டார்கள். அந்த நாள், முதலில் நினைவுக்கு வருகிறது. எவ்வளவு இனிமையாக இருக்கிறது, அந்தப் பழைய நினைவு. மனைவி மக்களோடு வாழ்ந்த காலமல்லவா அந்த நினைவிலே உயிர் பெறுகிறது!

**மனைவிமாரோடே நாம் வாழ்ந்த பழங்கால**
**நினைவு இன்று இனிக்குதடா! நீண்டபோர்**
**எண்ணிப்**
**புறப்பட்டோம் அன்று புழுங்கிஅவர் நம்மை**
**இறுகத்தழுவி வடித்த கண்ணீர் இன்னும்**
**சிந்தையிலே தித்திப்புச் சிந்துதடா ஆனாலும்...**

என்ன, 'ஆனாலும்' என்று எங்கேயோ திரும்புகிறீர்கள்? இனிமையை அணைந்து, பழைய நினைவுகளில் விரையும் சிந்தனைத் தேருக்கு, ஏன் 'ஆனாலும்' என்ற இந்த முட்டுக்கட்டை? சிந்தனையின் விசித்திரம் இது. தன் போக்குக்கு, தானே தடைபோட்டு வேறு திசையில் அதைத் திருப்பும் ஆற்றல், மனிதனுடைய சிந்தைக்குத்தான் உண்டு.

'நம்முடைய மனைவிமார் நம்மிடம் எவ்வளவோ அன்போடுதான் இருந்தார்கள். அவர்கள் நம்மை விட்டுப் பிரிவதற்கு விரும்பவில்லைதான். நாம் போரிலே எப்படி எல்லாம் கஷ்டப்படுவோமோ என்று எண்ணித் துயரப்பட்டது என்னவோ உண்மைதான். அது காரணமாகப்போருக்கு நாம் புறப்பட்ட போது எவ்வளவோ வருந்தினார்கள், அழுதார்கள், அதுவும் உண்மைதான். அதையெல்லாம் இப்பொழுது எண்ணும் போது இனிமையாகத்தான் இருக்கிறது. ஆனாலும்....அந்த அன்பு இத்தனை வருஷங்களுக்குப் பிறகு, இன்னும் பசுமையாய் இருக்குமா? ஏது, இருக்கும் என்று தோன்றவில்லை. காலப் போக்கில் எது அழியாமல் நிற்கிறது? அவர்கள் அன்பு என்றோ தேய்ந்து போயிருக்கும்.

'மனைவிமார்களின் அன்பு ஒரு புறம் இருக்கட்டும். ஊருக்கு நாம் திரும்பிச் சென்றால், என்னத்தைக் கண்டு விடப் போகிறோம்? அடையாளம் காணமுடியாதபடி நம்முடைய வீடு உருக்குலைந்து போயிருக்கும். இல்லை என்றால், அங்கே நம்முடைய மகனோ, பேரனோ ஆட்சி புரிந்து கொண்டிருப்பான். அங்கே நாம் போய்ச் சேர்ந்தால், இறந்தவர்கள் பிழைத்தெழுந்து வந்த கதையைப் போல, ஒரே குழப்பந்தான் மிஞ்சும். எதற்காக ஊருக்குத் திரும்ப வேண்டும்? நாம் ஊரில் இல்லாத காரணத்தால் நம்முடைய வீடு, வாசல், சொத்து, சுதந்திரம் எல்லாவற்றையும் நம்முடைய நாட்டுச் சிற்றரசர்கள் ஏப்பம் விட்டிருப்பார்கள். இலிய நகர்ப் போர்க்களத்தில் நாம் காட்டிய வீரத்தைப் பற்றி, அதை ஏதோ கற்பனைக் கதையாக, நீண்ட பழம் பொய்யாக ஜோடனை செய்து, பாணன் எவனோ ஒருவன் நீட்டி முழக்கிப் பாடிக் கொண்டிருப்பான். 'ஊருக்குத் திரும்புவதா? நல்ல வேடிக்கை! ஊரிலே யார் நம்மை ஞாபகத்தில் வைத்திருக்கப் போகிறார்கள்? அங்கே உள்ள குழப்பத்தை நீக்கி, ஊரைச் சீர்ப்படுத்தும் பொறுப்பு ஒன்று தான் நம்மை அங்கே வரவேற்கும். அலைந்ததும், பாடுபட்டதும் போதாதா? ஊருக்குப் போனால் அது ஒன்றுதான் கிடைக்கும். இரவிலும், புயலிலும் ஆகாசத்தைத் துழவித் துழவி, நட்சத்திரங்களைக் கொண்டு, திசை பிடிக்கத் தடுமாறி ஓய்ந்த நம்முடைய கண்ணும் போரிலே அடிபட்டு ஓய்ந்த நம்முடைய உள்ளமும், மறுபடியும் புண்ணாகும், அவ்வளவுதான். விட்டு விடு, அப்பனே, விட்டு விடு. ஊருக்குத் திரும்பும் எண்ணத்தை விட்டுவிடு' என்று மனமுடைந்து பேசுகிறார்கள் கிரேக்க வீரர்கள்:

ஆனாலும்
நேரலாம் ஊர்சேர்ந்தால் சேர்ந்தாரைக்
கண்டு மனம்
ஆறலாம் என்பதுவின் ஆகாசக் கோட்டையடா
வீடா? அதுகுப்பை மேடாகிப் போயிருக்கும்
வீடாய் இருந்தாலும் யாரோ முகமறியாப்
பேரனே பின்னையோ ஆட்சி செலுத்திடுவான்.
யாரிவர் என்றே நம்மைப் பார்த்துத்
திகைத்திடுவான்.
வீட்டில் விளக்கேற்றி வைத்திருப்பார்
நம்மை இடு
காட்டுப் பேய்போல் தோன்றிக் கலங்க
அடித்திடுவோம்.
அவ்வளவே......இல்லை யென்றால்......
ஏடா, நாம் ஊரில்இல்லை என்ற துணிவில்நம்
வீடுவயல் ஏப்பம்விட்டு வீற்றிருப்பார் சிற்றரசர்
பாடி அவர்முன்னே பாணன் விரித்திடுவான்.
ஓடி உழைத்துநாம் உற்றபெருமை யெலாம்.
ஏதோ பழங்கதையாய் என்றோ நடந்ததுவாய்
பாதி மறந்தொழிந்த பாவனையாய்ப் போய்க்
கனவாய்
பத்தாண்டு இலியநகர்ப் பாழில்நாம்
ஊன்றியதைச்
செத்த கதையாகச் சிதைத்து முடித்திடுவான்.

'ஊரை எண்ணும்போது, இப்போது அங்கே என்ன சீர்கேடோ, அதை நாம் போய்ச் சரிப்படுத்த வேண்டாமா என்று தோன்றுகிறது. இல்லையா? இதற்கு இடங் கொடாதே. சீர்ப்படுத்துவதாவது மண்ணாங்கட்டியாவது! கட்ட மண்ணை ஒட்ட வைக்கப் புறப்படுகிறாயோ? சங்கடத்தை விலைக்கு வாங்காதே. பட்டது போதும்.'

என்ன கலங்குகிறாய்? நாட்டில் குழப்ப
மென்று?
சின்னஞ் சிறுதீவு* சிதைந்து தவிக்குமென்று?
நூறியவை எல்லாம் நூறிக் கிடக்கட்டும்.
ஆருக் கடவுளரை ஆற்றநம்மால் ஆகாது.
ஊரிலே அந்நாளில் ஓங்கிவளர்ந்த பழஞ்
சீரைஇன்று நம்மாலே சீர்ப்படுத்த ஒண்ணாது.
மேவிநாம் ஊர்சென்றால் மேவும் பயனென்ன?
சாவினும் கேடான சங்கடத்தில் ஆழ்ந்திடலாம்.
வெந்துயர்மேல் வெந்துயரும் வேதனைமேல்
வேதனையும்
நொந்த நமைச்சார நொந்துழைத்து வெந்திட
லாம்.
எத்தனையோ போரில் இளைத்த உளத்திற்கும்
எத்தனையோ நாள்கடலில் எருத்திரை பிடிக்க
விண்ணிலே மீன்துழவி வீய்ந்து இருண்ட
கண்ணிற்கும்
புண்ணாகும் புண்ணியத்தைச் சூட்டிடலாம்.
அவ்வளவே.

நூறியவை - உடைந்தவை

'பிறகு? இந்த லோடஸ் நாடுதான் இப்போது நம்முடைய தாயகம். இங்கே, மாலி * மலரும், மந்தாரக் கொழுந்தும் சமைத்த படுக்கையிலே சாய்ந்து, ஆற்றிலே புனல் அசைவதை, காற்று இசை பயில்வதை, எதிரொலி அங்கு மிஞ்சும் திரும்பித் திரும்பி மயங்குவதை, அருவி ஒளிநடனம் ஆடுவதை, நாள் முழுதும் கண்டு, இன்பத்தில் அமுந்திக் கிடக்கலாம். தூரத்திலிருந்து கடலின் ஓசை காதில் விழும். கடலிலிருந்து தப்பி விட்டோம் என்பதை அந்த ஓசையிலே கேட்டு மகிழ்வோம். 'துயில்நாடே நம்முடைய நாடு. சோம்பலே பேரின்பம்' என்று முடிவு கட்டுகிறார்கள், துயிற்கனி வேதாந்தம் காணும் இவ்வீரர்கள்.

மந்தாரப் பூங்கொழுந்தும், மாலி மலரும்
வேய்ந்த
வித்தைப் படுக்கையிலே சாய்ந்து, மதுர
இசைத்
தாலாட்டுப் பாடி இளந்தென்றல் நமைவருட
கோலவான் தெய்வக் கொடுங்கையின்கீழ்
வீற்றிருப்போம்
ஊதா மலையிருந்து ஓடுபுனல் சேர்ந்து அதை
ஆதரவாய்த் தாங்கி அசையும் மணியாற்றைப்
பாதிவிழி திறந்து பார்த்திருப்போம். ஓங்குகொடி
முந்திரியின் பச்சை முடைசல் உருவிக்
குகையி லிருந்துருகு நாவும் ஒலியின்
வகைவகையாம் வண்ணத்தை மாந்திடுவோம்.
தெய்வமலர்க்
காயாத் துணர்நேசவின் கீழே மரகதமாய்
ஓயாமல் விழருவி ஒண்பரதம் ஆழ்ந்திருப்போம்
புன்னை நிழலில் பொருந்தி, தொலைஉவரி
மின்னுவது கண்டுதிரை மோதுவது கேட்டிருப்
போம்.
காணவும் வேண்டாம் கடலை அதன்முனகல்
சேணிருந்து காதில்வந்து சேர்வதே இன்பமடா!
இன்பத்தின் எல்லை இனிமையிது.

[உவரி - கடல். சேணிருந்து - தூரத்தில் இருந்து.]

இந்த எல்லையில் உதயமாகும் முடிவு என்ன? அடுத்த வாரம் பார்ப்போம்.

(தொடரும்)

* இவர்களுடைய தாய்நாடு 'இதாகா' என்ற ஒரு சின்னஞ்சிறு தீவு.

மாலி என்பது ஹோமர் குறிப்பிடும் வெண்மலர், மந்திர சக்தி வாய்ந்தது.

# பற்களைச் சுத்தம் செய்ய உங்கள் டூத்பிரஷ் மிகவும் முக்கியமானது

டெக்

உபயோகியுங்கள்

—டூத்பிரஷில்

சிறந்தது!



- பிரத்தியேகமாக அமைக்கப்பெற்ற தலைப்பாகம்
- நீடித்து உழைக்கும் நைலான் முடிகள்
- உங்கள் பிடிக்கு அடக்கமான பிளாஸ்டிக் கைப்பிடி

சிறந்த டூத்பிரஷ்
வேண்டுமென்றால்,
வாங்குங்கள்!

# டெக்

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிமிடெட்

# எனக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் அவசியமா?

இளம் வயதிலேயே ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பற்றி சிந்திப்பது அவசியம். ஏனெனில் வருங்காலத்திற்குத் தேவையான பொருளை சேமிக்க அதிகப்படியான அவகாசமுள்ள ஒரு வயதான தகப்பனின் மரணத்தைவிட இளம் வயதில் மரணமடையும் ஒரு தகப்பனின் மரணம், குடும்பத்தின் பண நிலையை சீர்குலைத்துவிடும். (சற்று நிதானத்துடன் இதை யோஜியுங்கள்.)

சொற்ப வருவாயுள்ள ஒரு இளைஞனுக்கு குறைந்த பிரீமியமுள்ள ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் *ஹோல் லைப் பாலிஸி* தான். இத்திட்டத்தின்படி ஒருவன், 35 வருஷங்களுக்கோ, அல்லது 80 வயதுவரையோ, எது பிந்தி வருமோ, மிகக்குறைந்த பிரீமியங்கள் கட்டுகிறான். இன்ஷ்யூர் செய்த தொகை மரணத்தின் பொழுது ஒருவனுடைய நாமினிக்கோ அல்லது அஸைனிக்கோ வழங்கப்படும்.

இந்த வர்க்கத்திலுள்ள எல்லோராலும் விரும்பப்படும் மற்றொரு திட்டம் *லிமிடெட் பேமெண்ட்* ஹோல் லைப் பாலிஸியாகும். இதன் பெயருக்கேற்றுப் போல், இத்திட்டத்தின்படி, ஒரு சில குறிப்பிட்ட வருஷங்களுக்கு மட்டுமே, பிரீமியங்கள் செலுத்தப்பட வேண்டும். பிரீமியங்கள் கொடுக்கப்பட வேண்டிய கால அளவிற்கு முந்தியோ, பிந்தியோ மரணம் சம்பவிக்குமாயின், இன்ஷ்யூர் செய்துள்ள தொகை பைசல் செய்யப்படும்.

எவ்வளவுக்கெவ்வளவு சிறு வயதில் பாலிஸி எடுத்துக்கொள்ளப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு குறைந்த பிரீமியங்கள் கட்டினால் போதும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

*ஹோல் லைப் பாலிஸி*, மற்றும் உங்களுக்கு ஏற்றதான இதர திட்டங்களைப்பற்றிய முழு விபரங்களுக்கு இன்றே ஒரு லைப் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டைக் கண்டு ஆலோசியுங்கள்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

ASP/LIC 18

பிழைத்து விட்டான் யேகோர் திரேமோவ்!

யேகோர் திரேமோவை நான் வெகு நாட்களாகவே அறிவேன். அதாவது யுத்தத்துக்கு முன்பிருந்தே. அவன் பிள்ளைப் பிராயத்திலிருந்தே உணர்வு மிக்கவன்; இனிய நோக்கங்கள் படைத்தவன். தனது அன்னை மரியா போலிகார்ப்போனாவுக்கும் தந்தை யேகோர் யேகோரோவிச்சவுக்கும் ஆரம்ப காலத்திலிருந்தே அவன் மிக்க மரியாதை செலுத்தி வந்தான்; அவர்களிடம் மட்டற்ற மதிப்பும் வைத்திருந்தான்.

வோல்காவை அடுத்த ஒரு சிறு கிராமத்தில் இம்மூவரும் அடங்கிய ஒரு உலகம்—குடும்பம்—நடந்து வந்தது. ஆம், அவனுக்கு ஒரு காதலியும் அங்குதான் வாழ்ந்து வந்தாள்.

போர்க் காலங்களில் போரில் ஈடுபட்டிருக்கும் நேரங்களில் கூட ஒருவரை யொருவர் நெருங்கிச் சந்திக்கும் வாய்ப்பு கிட்டும் பொழுது, நாங்கள் முக்கியமாகத் தங்கள் தங்கள் மனைவிமார்களைப் பற்றியோ



# வெய்யிலும் நிழலும்

ருஷ்யக் கதை:
- அலெக்ஸேயி டால்ஸ்டாய் -
தமிழாக்கம்: ரா. வீ.

காதலி மார்களைப் பற்றியோ பிரமாதமாகப் பேசுவோம். சண்டை சிறிது நேரம் நின்று நாங்கள் உணவருந்த வந்தாலும், பள்ளத் தாக்கில், புகை கக்கும் விளக்கின் அடியிலே அமர்ந்து அதே சம்பாஷணையைத்தான் அதிக ஆர்வத்துடன் தொடருவோம். ஆனால் யேகோர் திரேமோவ் எங்களது இத்தகைய பேச்சுக்களில் கலந்து கொள்ள எப்போதுமே வெட்கப்படுவான். என்னோடு தனிமையாகச் சந்திக்கும் வாய்ப்பு கிட்டும் பொழுதெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் சங்கோசத்துடன் பேசுவான். அவன் பேச்சைக் கொண்டே அவன் காதலி ஒரு உயர்ந்த குலத்தவளாகவும் நற்குணங்கள் படைத்தவளாகவும் இருக்க வேண்டும் என்று நான் முடிவு கட்டினேன்.

அவள் அவனுக்கு வாக்களித்திருந்தாளாம். யேகோர் திரேமோவை ஆயுள் உள்ளளவும் மறக்க மாட்டாளாம். அவன் வருகைக்காகவே காத்திருப்பாளாம். அவன் வந்த பிறகு அவனையே மணம் புரிந்துகொள்ளுவாளாம். அவனைத் தவிர வேறு யாரையும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டாளாம். அடிபட்டு அங்கஹீனனாக வந்தாலும்கூட அவனைத் தவிர, தனக்கு வேறு தெய்வமில்லை என்று கூட அவள் சொல்லியிருந்தாளாம்.

யேகோர் திரேமோவ் ஒரு நல்ல போர் வீரன். அந்தப் பயங்கர விபத்து நேரும் வரை அவன் உயிரைக் கொடுத்துப் போராடினான். குர்ஸ்க் என்னும் இடத்துக்கருகே பெரிய குண்டு மழை பொழிந்து கொண்டிருந்தது. கோதுமை வயல்களினுள் ஒளிந்து மறைந்து அவன் தனது டாங்கியிலிருந்து எதிரிகளின் மீது குண்டு வீசிக்கொண்டிருந்தான். எதிரிகள் வீசிய ஒரு குண்டு அவன் டாங்கியின் மீது விழுந்து வெடித்தது. டாங்கியிலிருந்த இரு வீரர்கள் கொல்லப்பட்டனர். அடுத்த கணமே இன்னொரு குண்டு வந்து விழுந்தது. டாங்கியில் தீப்பற்றிக் கொண்டது. டிரைவர் சுவீலெவ் குதித்து வெளியேறினான். ஆனால் அவன் மறுபடியும் டாங்கியில் ஏறி மூர்ச்சையுற்றுக் கிடந்த லெப்டினென்ட் யேகோர் திரேமோவை எப்படியோ வெளியே இழுத்துப் போட்டான். யேகோர் திரேமோவின் உடையிலே பற்றியிருந்த தீயை அணைப்பதற்காக அவன் மண்ணை அள்ளிப் போட்டான். லெப்டினென்டின் தலை, முகம் உடல் ஆகியவற்றில் மண் அபிஷேகம் செய்தாற் போலாகிவிட்டது. பிறகு எப்படியோ பிறர் கண்களில் படாமல் யேகோர் திரேமோவை இழுத்துக் கொண்டு முதல் உதவி நிலையம் வரை கொண்டு சேர்த்தான்.

ஆம், யேகோர் திரேமோவ் உயிர் பிழைத்து விட்டான். அவன் கண்களின் ஒளி போய் விட்டது. முகம் எரிந்து கருகி, எலும்பு முதற் கொண்டு வெந்து விட்டது. ஒவ்வொன்றாக எத்தனையோ சஸ்திர சிகிச்சைகள் நடந்தேறின. எட்டு மாதங்கள் ஓடியபின் கடைசி முறையாகக் கட்டுகள் அவிழ்க்கப்பட்ட பொழுது நர்ஸ் ஒரு சிறு முகம் பார்க்கும் கண்ணாடியை அவனிடம் நீட்டினாள். அதில் தன் உருவத்தைப் பார்த்தவனுக்குத் தன்னையே அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. நர்ஸ் தன் முகத்தை மூடிக் கொண்டு அழவே தொடங்கி விட்டாள்.

ஆனால் யேகோர் திரேமோவ் தைரியமாகக் கண்ணாடியை அவளிடம் திருப்பிக் கொடுத்து



விட்டு, "எல்லாம் ஆண்டவன் கருணை. இதைக் காட்டிலும் முகம் கெட்டு இன்னும் குரூபமாகி யிருக்கலாம் அல்லவா? இதோடு விட்டதற்கு மகிழ்ச்சியே கொள்ள வேண்டும். இந்த முகத்தை வைத்துக் கொண்டு உயிர் வாழலாமே!" என்றான்.

ஆனால் அதற்கப்புறம் அவன் தன் முகத்தைப் பார்க்கக் கண்ணாடி கேட்கவில்லை. அடிக்கடி தன் முகத்தை மட்டும் கைகளினால் தடவிக் கொள்ளுவான், தனக்கு ஏற்பட்டிருக்கும் புது மாறுதலைப் பழக்கப்படுத்திக் கொள்ள விரும்புபவன் போல.

டாக்டர்கள் போர்முனைச் சேவைக்கு அவன் தகுதியற்றவன் என்று கூறி விடவே, அவன் நேரே ஜெனரலிடம் சென்றான். "தயவு செய்து என் ரெஜிமெண்டுக்குத் திரும்பிப் போக மட்டும் எனக்கு அநுமதி அளியுங்கள்!" என்று வேண்டினான்.

"தாங்கள் இப்பொழுது...." என்று ஜெனரல் ஏதோ சொல்ல வாய் எடுத்தார்.

மேலே பேச அவருக்கு இடம் கொடாமல் அவனே பேசினான்: "இல்லை, இல்லை. எனக்கு ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை. முகம் மட்டும் தான் சற்று விகாரமாகி விட்டது. ஆனால் போரிடுவதற்கு அதனால் ஒரு தொந்தரவும் உண்டாகாது!" என்றான்.

ஜெனரல் வெகு சிரமப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டார். "முதலில் தாங்கள் பூரண உடல் நலம் பெற்று வாருங்கள். அதற்காகத் தங்களுக்கு இருபது நாட்கள் விடுமுறை தரப்படுகிறது!" என்றார்.

யேகோர் திரேமோவ் வீட்டுக்குப் புறப்பட்டது மார்ச்சு மாதம். ஸ்டேஷனிலிருந்து தன் கிராமத்துக்கு அவன் நடந்தேதான் போகும்படியாயிற்று. பனி பாறையாகி விட்டிருந்தது. வழி 'சொத சொத'வென்று ஈரமாக இருந்தது. மனித சஞ்சாரமும் குறைவு. வேகமாக வீசும் குளிர்காற்றில் அவனது ராணுவக் கோட்டின் கீழ்ப்பாகம் பறக்கத் தொடங்கியது. காற்று அவன் காதுகளை அன்பாகத் தடவிக் கொடுத்துக் கொண்டே 'விர்'ரென்ற ஓசையுடன் ஓடிக்கொண்டிருந்தது.

யேகோர் திரேமோவ் மாலை நேரத்தில் வீட்டை அடைந்தான். இரவுக்கன்னி புவிக்கு இறங்கி வரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள். எதிர்த்தாற்போலவே நெடுநாள் பழக்கப்பட்ட கிணறு காணப்பட்டது. அதில் உயரமாகப் போடப்பட்டிருந்த சகடை யேற்றம் 'சர்' என்ற சப்தத்துடன் சுற்றிக் கொண்டிருந்தது.

கிணற்றிலிருந்து ஆறாவது வீடு அவனுடையது. கண நேரத்துக்குத் திடுதிப்பென்று நின்ற அவன், தன் இரு கைகளையும் கோட்டுப் பைக்குள் விட்டுக் கொண்டான். பிறகு தலையைத் தொங்கவிட்ட வண்ணமே வீட்டை நோக்கி நடந்தான். முழங்கால் வரை பனியில் புதைய அவன் ஜன்னலை அணுகி உள்ளே எட்டிப் பார்த்தான். அவனது தாயார் விளக்கின் மத்திமமான ஒளியில் உணவுப் பொருள்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். தனது அதே பழைய காலத்துப் போர்வையை அவள் அணிந்திருந்தாள். முன்னைக் காட்டிலும் இன்னும் சற்றுக் கம்பீரமாகக் காட்சி அளித்தாள். உடலும் எவ்வளவோ தளர்ந்து காணப்பட்டது.

சில கணங்கள் பேசாமல் பார்த்தவண்ணம் நின்ற அவன் திரும்பிச் சிறு தோட்டத்தின் வழியாக வராந்தாவை அடைந்தான். கதவைத் தட்டியதும், அன்னையின் அதிமுகமான குரல் கேட்டது: "யார் அது?"

"ருஷ்ய நாட்டின் படைவீரன்!"

அவன் மனம் படபடத்தது. உதவிக்கு வராந்தாவின் தூணைப் பிடித்துக் கொண்டான். தாயாரால் அவன் குரலைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏன், அவனுக்கே கூடத் தன் குரல் புதிதாகப் பட்டது. கரகரப்பான அழுத்தமான குரல் அல்லவா அவன் வாயிலிருந்து எழுந்தது!

தாயார் கதவைத் திறந்ததும், அவன், "நான் தங்கள் பிள்ளை ஸீனியர் லெப்டினெண்ட் யேகோர் இரேமோவிடமிருந்து வந்திருக்கிறேன். அவர் சுகமாகவே இருக்கிறார்!" என்றான்.

தாயார் அவன் கரங்களைப் பற்றிக்கொண்டு ஆவலும் உருக்கமும் ததும்பும் குரலில், "என் யேகோர் உயிரோடு இருக்கிறானா? தேக நலம் எதுவும் கெடாமல் சுகமாக இருக்கிறானா?" என்று கேட்டாள். பிறகு, "வாருங்கள், உள்ளே வாருங்கள்!" என்று அவன் கரம் பற்றிப் பரிவுடன் உள்ளே அழைத்துச் சென்றாள்.

உள்ளே சென்ற யேகோர் திரேமோவ் மேஜைக்கு அருகில் இருந்த பெஞ்சியில் உட்கார்ந்தான். அவன் கால்கள் தரைக்கு எட்டாத காலம் முதற்கொண்டு அவன் உட்கார்ந்து ஆண்டு வந்த பெஞ்சு அதுதான். அவன் தாயார் அவனைத் தூக்கி அதில் உட்கார வைத்து விடுவாள். அன்புடன் அவன் தலைமயிரைக் கோதிப் பின்னி விடுவாள்.

அவன் தன் தாயாரிடம் தன்னைப் பற்றியே சொல்லலானான்: 'தங்கள் பிள்ளைக்கு ஒரு கஷ்டமும் இல்லை. சுகமாக இருக்கிறார்.'




இவ்வாறு கூறியவன் சண்டைகளைப் பற்றியும் வர்ணித்தான்.

தாயார் அன்பினால் கலங்கும் உள்ளத்துடன், ''சண்டையென்றால் மிகப் பயங்கரமாக இருக்குமா?'' என்று கேட்டாள்.

''ஆம், அம்மா!'' அவன் அமைதியான குரலில் கூறினான்: ''மிகப் பயங்கரமாகத்தான் இருக்கும். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல அதில் சேரும் மக்கள் தங்களை அதற்குத் தக்கபடி பழக்கப் படுத்திக் கொண்டு விடுகிறார்கள்!'' என்றான்.

அப்பொழுதுதான் அவன் தந்தை உள்ளே நுழைந்தார். வயதின் வேலைப்பாடு அவர் உடலிலும் நன்கு தெரிந்தது. அவர் தாடி, மாவை அள்ளி வீசியது போல் வெளுத்திருந்தது. அவர் வாசற்படியில் தமது செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு உள்ளே வந்தார். அவரோடு கைகுலுக்கும் பொழுது தந்தையின் அகன்ற கைதான் அவனுக்கு எவ்வளவு பரிச்சயமுள்ளதாகத் தோன்றியது!

லெப்டினென்ட் எத்தனைக் கெத்தனை அறிமுகம் இல்லாதவன் போலப் பேசிக் கொண்டு போனானே, அத்தனைக்கத்தனை அவனுக்குத் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வது 'கடினமாகவே ஆகிவிட்டது. ''என்னை அடையாளம் தெரியவில்லையா, அம்மா? நான் உங்கள் பிள்ளையல்லவா, அப்பா? என் முகம் யுத்தத்தின் பயங்கரக் கொடுமையினால் வெந்து கருகி, இப்படிக் கெட்டுவிட்டது. இருந்தாலும் உங்களால் ஏன் என்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை?'' என்று கேட்கத் துடித்தது அவனது உள்ளம். ஆனால் தனது அத்தனை முயற்சிகளையும் பெரும்பாடுபட்டு அடக்கிக் கொண்டான்.

அன்று இரவு எல்லோரும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட்டார்கள். அவன் ஸ்பூனை எடுத்து வாயில் வைக்கும் பொழுதெல்லாம் அவன் தாயார் அவனையே பார்த்தாள்.

இரவு முழுவதும் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. புரண்டுபுரண்டு படுத்தான். ''தாய்க்குத் தன் தனயனைப் புரிந்து கொள்ள முடியாமல் எங்காவது போவது உண்டா?'' என்ற கேள்வி அவன் மூளையைச் சுற்றிச் சுற்றி விடாமல் வட்டமிட்டது.

காலையில் வீட்டுக் காரியங்கள் செய்யும் ஓசை கேட்டு அவன் எழுந்தான். அவன் உடைகள் துவைத்துக் காய்வதற்காகக் கொடியில் உலர்த்தப்பட்டிருந்தன. பூட்ஸ் சுத்தமாகத் துடைக்கப்பட்டுக் கதவருகில் வைக்கப்பட்டிருந்தது.

கணையடுப்புக்கருகில் படுத்திருந்த அவன் சட்டையை அணிந்த வாறே தாயாரிடம் சென்றான். ''உங்கள் ஊரில் காத்யா என்று பெயருள்ள பெண் இருக்கிறாளா? ஆந்திரேயி மாலிஷேவின் மகளாம்!'' என்றான்.

''ஆமாம். இருக்கிறாள். அவளைத் தாங்கள் பார்க்க விரும்புகிறீர்களா?''

''தங்கள் பிள்ளை அவளுக்குத் தமது நலனைத் தெரிவித்து வருமாறு சொல்லியிருக்கிறார்!''

தாயார் பக்கத்து வீட்டுச் சிறுமியை அனுப்பிக் காத்யாவை அழைத்து வரச் சொன்னாள். காத்யா ஓடோடியும் வந்தாள். அவளது நீண்ட கயல் விழிகள் பளிச்சென்று ஒளி வீசிக் கொண்டிருந்தன. கன்னங்களிலே அவளின் செழுமை படர்ந்திருந்தது. லெப்டினென்ட் திரேமாவ் மனத்துள்ளேயே புழுங்கிப் பெருமூச்செறிந்தான். அவனுக்குத் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கட்டுப்படுத்த முடியாது என்றே தோன்றி விட்டது.

## உங்களுக்குப் பிரியமானவருக்கு

# தகுந்த தீபாவளி

ஒரு 'கோடக்' காமிரா அனைவரும் விரும்பும் அன்பளிப்பாகும். அதைக்கொண்டு பல்லாண்டுகள் அற்புதமான படங்கள் எடுத்து மகிழலாம்! கோடக் கம்பெனியார் நேர்த்தியான காமிராக்களின் பலதரப்பட்ட ரகங்களை வழங்குகிறார்கள். அவைகளிலிருந்து நீங்கள் கொடுக்க விரும்புபவருக்கு ஏற்றதொரு காமிராவை எளிதில் தேர்ந்தெடுக்கலாம்.

கவர்ச்சிகரமானதும், எளிதில் உபயோகிக்கக்கூடியதுமான 'ப்ரௌனி' காமிராவை அன்பளிப்பாகப் பெற எந்த இளைஞனும் மிகுந்த குதூகலம் அடைவான். விலை ரூ. 18.75 லிருந்து மேற்கொண்ட விலைகளில் பல்வேறு ரகங்கள் உள்ளன! சற்று படம் எடுத்து பரிச்சயமானவர்களுக்கு f/6.3 லென்ஸும் வினாடிக்கு 1/50 வரை ஷட்டர் ஸ்பீடுமுள்ள மடக்கக்கூடிய ஸிக்ஸ்-20 கோடக் 'ஜூனியர்' II காமிரா ஏற்றது. விலை ரூ. 122.00 மட்டுமே. மற்றும் 8 மில்லி மீட்டர் ஹோம்-மூவி பிலிம்கள் எடுக்க 'ப்ரௌனி' மூவி டரெட் f/1.9 காமிரா மிகச் சிறந்தது. இதற்கு ஸ்டாண்டர்ட், வைட்-ஏங்கிள், டெலிபோட்டோ, இம்மூன்று லென்ஸுகள் உள்ளன. விலை ரூ. 660.00.

இவைகள் 'கோடக்' காமிராக்களில் சிலவை மட்டுமே. எந்த கோடக் வியாபாரியிடமும் இன்னும் எத்தனையோ ரகங்களைக் காணலாம்.

விலைகளில்
விற்பனை வரி
அடங்கவில்லை

K. 4474

## நல்ல தெளிவான படங்கள் எடுக்க 'கோடக்'

# அன்பளிப்பு...

## ஒரு கோடக் காமிரா







கோடக் லிமிடெட்
(இங்லேண்டில் இணைக்கப் பெற்றது.
கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு
வரையறுக்கப்பட்டது)
பம்பாய் – கல்கத்தா – டில்லி – மதராஸ்

**பிலிமையே எப்பொழுதும் உபயோகியுங்கள் !**

காத்யா ஓடிவந்த வேகத்தில் மூச்சு வாங்கியவாறே, "யேகோரிடமிருந்து தாங்கள் ஏதாவது தகவல் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

வெளிச்சம் வரும் திசையில் தன் முதுகைக் காட்டியவாறு யேகோர் எழுந்து நின்றான். 'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலை அசைத்தான். எத்தனையோ முயன்றும் அவன் வாயிலிருந்து வார்த்தைகள் எழும்பவில்லை.

"நான் இரவு பகல் எந்நேரமும் அவரையே எதிர்நோக்கிக் கொண்டிருப்பதாக யேகோரிடம் சொல்லுங்கள்!"

இவ்வாறு கூறியவாறே காத்யா அவனருகில் வந்து விட்டாள். அவன் முகத்தில் பார்வையைப் பதித்ததும், பயத்தால் அவளுக்குக் குலை நடுக்கம் எடுத்தது.

லெப்டினென்ட் அந்தக் கணமே திரும்பி விடுவது என்ற முடிவுக்கு வந்து விட்டான். அங்கு நின்று பேசிக் கொண்டிருந்த நேரத்தில் ஒரு தடவை கூட அவன் காத்யாவைப் பார்க்கவில்லை. தனது விகாரத் தோற்றத்தின் நிழல் கூடக் காத்யாவின் மலர்ந்த புஷ்பம்போன்ற முகத்தில் பட்டு, அதை வாடச் செய்யக் கூடாது என்ற பயமே அவனை அப்படிச் செய்யச் சொல்லியது போலும்.

யேகோர் திரேமோவ் திரும்பித் தன் ராணுவக் கூடத்தை அடைந்தபொழுது அவனுடைய தோழர்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன் அவனை வரவேற்றார்கள். ஆனால் யேகோரின் முகத்தில் அழிக்க முடியாத ஒரு சோகக் குறி ஏற்பட்டு விட்டது. அவன் எப்பொழுது பார்த்தாலும் மௌனமே உருவாக, வருத்தமே சிலையாக இருக்கலானான்.

ஆனால் இரண்டு வாரங்கள் சென்ற பிறகு அவனுக்கு வந்த கடிதம் அவனது வாழ்க்கைப் பாதையையே அடியோடு மாற்றி அமைத்து விட்டது. கடிதம் எழுதியிருந்தது அவனுடைய தாயார்தான்.

"அன்பான என் குழந்தாய்!

சமீபத்தில் ஒருவன் உன்னிடமிருந்து நற்செய்தி கொண்டு வந்திருந்தான். அவன் முகம் கன விகாரமாக இருந்தது. இருந்தாலும் அவன் மிக நல்ல பிள்ளையாகவும் கலகலப்பாகவும் இருந்தான். ஒரு வேளை அவன் இங்கே இன்னும் கொஞ்ச நாட்கள் தங்க விரும்பினானோ என்றுகூடத் தோன்றியது. ஆனால் மறுநாளே தன் பெட்டி படுக்கைகளையும் மூட்டை முடிச்சுகளையும் கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

அன்று முதல் எனக்கு இரவு நேரத்தில் தூக்கமே வருவதில்லை. என் ஒவ்வொரு மயிர்க் காம்பும் 'அவன் என் பிள்ளை, அவன் என் பிள்ளை' என்றே சொல்லிக் கொண்டிருக்கின்றது. இரவில் அவன் தூங்கிய பிறகு, அவன் கோட்டைப் பிரஷினால் சுத்தம் செய்தேன். அப்பொழுது என்னையும் மீறி 'இது என் மகனின் கோட்டு' என்று உரக்கக் கூவி விட்டேன். என் மூளை பிறழ்ந்து விட்டது என்று உன் தகப்பனார் சொல்கிறார். அது நீயாக இருந்தால், நீ உன்னை மறைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் அப்படி என்ன வந்து விட்டது? அந்தப் பையனின் முகம் அவனது தேச பக்திக்கும் வீரத்துக்கும் அழியாச் சின்னமாகக் காட்சி அளித்தது. அதை எண்ணி அவன் பெருமைபல்லவா கொள்ள வேண்டும்?—குழந்தாய்! விஷயம் உண்மையில் என்ன? உடனே எழுது. தாயுள்ளம் தன் தனயனைப் புரிந்து கொள்வதில் தவறு இழைக்காது என்ற முழு நம்பிக்கை எனக்கு இருக்கிறது."

யேகோர் திரேமோவ் அக்கடிதத்தை எனக்குக் காட்டினான். நான் அவனை அன்புடன் கடிந்து கொண்டேன்!

"ஒரு தவறு இழைத்தபின் மீண்டும் இன்னொரு தவறு இழைக்காதே. நண்பா, உடனே கடிதம் எழுதித் தாயாரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்!"

என் சொல்லுக்கு ஒரு மதிப்பு வைத்து அன்றே அவன் தன் தாயாருக்கு ஒரு கடிதம் எழுதினான்:

"என் மதிப்புக்குரிய தாயே! என்முட்டாள் தனத்தை மன்னித்து விடுங்கள். அன்று வந்தவன் வேறு யாரும் இல்லை. நானேதான்."

அதற்குப் பின் சில நாட்கள் கழித்து நாங்கள் வெண்ணிலவு பொழிந்து கொண்டிருக்கும் ஒரு மைதானத்தில் நின்று பேசிக் கொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு போர் வீரன் யேகோரிடம் ஓடிவந்து, "தோழரே, தங்களைப் பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள்!" என்றான்.

நாங்கள் உடனே புறப்பட்டுப் போனோம். நாங்கள் தங்கியிருந்த இடத்துக்குப் போனபொழுது யேகோர் மிகுந்த பரபரப்புற்று இருமத் தொடங்கினான். பிறகு என்னைப் பார்த்தவாறே அறைக்குள் நுழைந்தான். 'அம்மா! நான் இதோ இருக்கிறேன்!' என்று அவன் குரல் கொடுத்ததுதான் தாமதம்; தாயார் ஓடோடி வந்து அவனை அன்புறத் தழுவிக் கொண்டாள். அப்பொழுது அந்த அறையில் ஒரு யுவதி நிற்பதை நான் கண்டேன். அவளைப் போன்ற அழகியை நான் அதுவரை பார்த்ததில்லை.

யேகோர் தாயாரின் அன்புப் பிடியிலிருந்து விடுபட்டதும், அந்தப் பெண்ணின் அருகில் சென்று, "காத்யா, நீ எதற்காக இங்கு வந்தாய்? நீ எந்த யேகோருக்காகக் காலம் எல்லாம் காத்திருப்பதாகச் சொன்னாயோ, அவன் என்றைக்கோ இறந்து விட்டானே!" என்றான்.

காத்யா அவன் உதடுகளைத் தன் விரல்களால் மூடினாள். நான் உடனே அவ்விடத்தை விட்டு அகன்றேன். ஆனால் போகும் பொழுது காத்யாவின் உணர்ச்சியினால் மிகவும் தழுதழுத்துப் போன சொல் என் செவிகளிலே முட்டியது:

"அப்படிச் சொல்லாதீர்கள், யேகோர்! என்னைப் பொறுத்தவரையில் தாங்கள் எனக்கு எப்பொழுதுமே ஒரே மாதிரிதான். நான் தங்களை அன்றும் நேசித்தேன், இன்றும் நேசிக்கிறேன்; இனியும் நேசிப்பேன். கருணை கூர்ந்து என்னை இனியும் தூரத்தில் விலக்கி வைக்காதீர்கள்!"

சிறிது நேரம் கழித்து யேகோர் என்னிடம் வந்தபொழுது அவனது குரூபம் தாண்டவமாடிய விகாரமான முகத்திலும் ஒரு புதிய ஒளி வெகு கவர்ச்சிகரமாகப் பின்னிப் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 33. குபேரனாகி விட்டால்.......

"நெஞ்சு பொறுக்குதில்லையே — என்
நெஞ்சு பொறுக்குதில்லையே......"

"ஏனப்பா? என்ன அப்படிப்பட்ட கஷ்டம் உனக்கு?"

". . . . . . . . . . . . . இந்த
நிலைமை வந்த பிறகும்
உயிரோடிருத்தல் கண்."

"அடே, பைத்தியக்காரச் சுப்பா! நீ கவி பாடினது போதும், விஷயத்தைச் சொல்லு."

"அன்னக்கொடி கட்டிப் பறந்த
நம் நாட்டில்
அமெரிக்கக் கோதுமையும் அரிசியுமாய்
இன்று வந்து இறங்குவதும். . . ."

"அடேடேடே! நிறுத்து. நிறுத்து."

"நிறுத்தி விட்டேன். சகல சுதந்திரமும் நமக்கு உண்டு. ஆனால் உண்மையை ஒளிவு மறைவின்றிச் சொல்ல மட்டும் உரிமையில்லை."

"இப்பொழுது என்னடா உனக்கு இல்லாமல் போய் விட்டது. சொல்லித் தொலையேன், கேட்போம்."

"வடக்கு எல்லை நெல்லூர் — நம் நாட்டுக்குத் தெற்கு எல்லை நெல்வேலி."

"நீ ஒரு மகா மேதை! போடு சக்கை. பேஷ்! மேலே."

"இவ்விரண்டுக்கும் நடுவில் இருக்கும் இடம் நெற்களஞ்சியம் என்று அழைக்கப்படும் தஞ்சை. பஞ்சத்தில் அடிபட்டவர்களுக்குத் தஞ்சமளிக்கும் தஞ்சை."

"நீ என்ன சொல்கிறாயென்று விளங்கவில்லையே! இதையெல்லாம் யாராவது இல்லையென்றார்களா?"

"இதோ பாரப்பா! நேற்று வாங்கி வந்த அரிசி. களைந்து உலையிலிட்டேன். உலை நீர் தளதளவென்று கொதித்துக் கொண்டிருந்தது. அரிசியை அதிலிட்டதும். ஸ்ஸ்ஷ்...ஷ்...ஷ் என்று ஒரு சுழல். கொதிவரவே இல்லை. பிறகு "இதோ!" இந்தப் பொருள்தான் தீர்மானம். இது சோறுமில்லை, கஞ்சியுமில்லை, களியுமில்லை. இதிலுள்ள நீரை வார்த்தெடுக்கவும் வருவதில்லை. இதைச் சாப்பிடுவது எப்படி? பாத்திரத்திலிருந்து விழாது. எப்படியோ நக்கிப் பொக்கி வாயிலிட்டு விட்டோமோ...! அப்படியே வாய் ஒட்டிக் கொண்டு விடுகிறது. வாயை அசைக்க முடியாது. மெல்ல வேண்டியதில்லை. விழுங்கவும் முடியாமல் ஒட்டிக் கொள்கிறது, "ரீ—இன்—போர்ஸ்டு—காங்க்ரீட்" போல. இதைச் சாப்பிட்டால் வயிறு? என்னவாகும் ஐயோ-! இந்த நிலை வந்த பிறகும், மானங்கெட்ட இந்த உயிர், இந்த உடலை விடமாட்டேனென்று ஊசலாடிக் கொண்டிருக்கும் அற்பத்தனத்தைப் பார்த்தால்..."

"பார்த்தால்...?"

"என் நெஞ்சு பொறுக்குதில்லையே."

பாவம். உண்மைதான். விலைவாசிகள் எப்படியோ போகட்டும். ஒன்றுக்கு ஒன்பது விலை கொடுத்து வாங்கினாலும், கிடைக்கும் பொருள் இப்படியா இருக்க வேணும்!

இந்த நிலையில், சரீரத்தின் சகிப்புத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்வதும், அதைப் பெருக்கிக் கொள்வதும் ஒட்டுத் திண்ணையில் படுத்துள்ள கட்டைப் பிரம்மச்சாரி கண்ட பகற் கனவு போலத்தான்.

ஏதோ நம்மாலான முயற்சியைச் செய்வோம். சகிப்புத்தன்மையைக் குறைத்திடும் ஆகார விஹாரங்களைத் தவிர்க்கலாம். நமக்கு மிஞ்சின வரையிலுள்ளது. கிடைத்தபடி யாகட்டும். இதனால் ஏற்படும் சகிப்புத் தன்மை போதாமல் நோய் வாய்ப்பட நேரிடின் - அந்நோயும் 'ப்ளூ' ஜுரமாயிருப்பின் என்ன செய்வது என்பதுதானே கேள்வி.

இது குழந்தைகளுக்கா, சிறுவர்களுக்கா என்பதை யொட்டித்தான் தீர்மானிக்கத் தக்கது.

ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு நாலு முதல் ஆறு மாத்திரை வரையில் கஸ்தூர் யாதி குடிகா (கேரள யோகம்) என்றதைச் சில துளி தேன் விட்டுச் சந்தனக் கல்லில் நன்றாய் உரசி, 1-2 அவுன்ஸ் ஜீரக கஷாயத்தில் கரைத்து, ஒரு கோப்பையில் வைத்துக் கொண்டு, அவ்வப்போது ¼ டீ ஸ்பூன் அளவில் கலக்கி எடுத்துப் புகட்டி வரவும். இவ்விதம் ஒரு தரம் கூட்டிய மருந்தை இருபத்திநான்கு மணி நேரம் வைத்திருந்து கொடுக்கலாம். மறுநாளைக்கு இப்படியே புதியதாக மற்றுமொருதரம் கூட்டிக் கொள்ள வேணும். இதனிடையில் குங்குமப் பூவைத் தாய்ப் பாலிலோ—பசுவின் பாலிலோ உரசி நெற்றிக்குப் பற்றிட வேண்டும். டீஸ்பூனினால் மருந்தை ஒவ்வொருதரம் எடுக்கும்போதும் நன்றாய்க் கலக்கி எடுக்க வேண்டும். இல்லாவிட்டால் முக்கால்வாசி மருந்து மேல்பக்கம் தெளிந்து நிற்கும் கஷாயமாக இருந்து விடும். மாத்திரை எல்லாம் அடியில் நின்று கடைசியாகக் கொடுக்கும் 3—4 வேளைகளில் ஒன்றாக ஊட்டப்படும். இது




நல்லதா? ஆகவேதான் முன்கொள்ள எச்சரிக்கை.

மூன்று நான்கு வயதுக் குழந்தைகளானால் கஸ்தூர்யாதி குடிகையில் 8—10 மாத்திரைகளை மேற்சொன்ன விதத்தில் கொடுக்க வேண்டும். தலைக்குள்ள பற்று நீர்க்கோவை மாத்திரை [கல்கியில் வெளியாகியுள்ளது] யாகலாம். கஷாயத்தினிடையில் பவழ பஸ்மம் நெல்லிடையில் சிறிது துளசி ஸ்வரஸமும் தேனும் கூட்டிக் கொடுப்பது அதிகமாக உள்ள சளி, இருமல்களை உடனே சமனம் பண்ணும். ஜுரமும் குறையும்.

இம் மருந்துகளையே சற்று அதிக அளவில் 8-10 வயதுச் சிறுவர் வரையில் கொடுக்கலாம்.

அதற்கும் அதிக வயதானவருக்கெல்லாம் ஒரேவிதமான மருந்தைக் கொடுக்கலாம். ஆனால் மருந்தின் அளவு மட்டும் வயது, சரீரவன்மை, வியாதியின் கடுமை ஆகியவற்றை அனுசரித்துக் கூட்டியோ, குறைத்தோ கொடுக்க வேண்டும்.

ஓரளவாவது சளி, ஜலதோஷம், தலைவலி இருமல் இவை இல்லாது ப்ளூ இருக்க முடியாதென்று சொல்லி விடலாம். ஆகவே, முன்னொரு கட்டுரையில் சொன்ன தலைவலிப் பற்று. தாளீசாதி சூர்ணம் ஆகியவை ப்ளூவின் எல்லாத் தரத்திலும் எல்லா நிலையிலும் பயன்படுபவை.

மிளகு கஷாயம் என்பதை அறியாத பாரதப் பெண்ணே இருக்க முடியாது. இக் கஷாயத்தில் அரை அவுன்ஸ் முதல் இரண்டு அவுன்ஸ் வரையில் சிறிது சர்க்கரையுங் கூட்டி, தினம் இரண்டு வேளை முதலில் கொடுப்பது எல்லாவித ப்ளூவிலும் ஆரம்ப நிலையில் நல்லது. உடம்பு நன்றாக வியர்க்கும். உடம்பிலுள்ள கடுப்புவலி குறையும். ஜுரமும் தணியும்.

உடம்பிலுள்ள கடுப்புவலி முதலியவை இதனாலும் தணியாமலிருப்பின் பாரங்கியாதி கஷாயத்தைக் கொடுத்து வர வலியும் குறையும்; ஜுரமும் சமனமாகும். கண்டுபரங்கி, கோரைக்கிழங்கு, பற்பாடகம், சுக்கு, நிலவேம்பு, கோஷ்டம், திப்பலி, பூனைக்காலி வேர், சீந்தில் கொடி ஆகியவற்றின் கஷாயத்தில் 1-2 அவுன்ஸ் வீதம் தினமும் 2, 3 வேளை கொடுத்தால் சுகமாகும்.

ஜலதோஷம், சளி, இருமல்முதலியவை அவ்வளவாக இல்லாவிடினும் ஜுரம் மிகவும் கடுமையாகவும் தண்ணீர்த் தாகமும் இருக்கும் வகையான ப்ளூவில் ஷடங்க கஷாயம் மிகவும் பலன் தருவதாகும். கோரைக் கிழங்கு, சந்தனக் கட்டை, சுக்கு, குருவேர் (இதைத் தென்னாட்டில் வெட்டிவேர் என்பர்) பற்பாடகம், வெட்டிவேர் (இதைத் தென்னாட்டில் விளாமிச்சன் வேர் என்பர்) ஆகியவற்றைச் சம பாகத்தில் பெருந்தூளாக இடித்து வைத்துக் கொண்டு, அச்சூர்ணத்தில் ஒரு பலம் எடுத்து 16 அவுன்ஸ் ஜலம் விட்டு, 4 அவுன்ஸ் கஷாயமாகக் காய்ச்சி, மருந்தைக் கசக்கிப் பிழிந்து விட்டுக் கஷாயத்தை வடிகட்டி வேளைக்கு 1-2 அவுன்ஸ் வீதம் தினம் 2-6 வேளை சாப்பிடச் சுகமாகும்.

எப்படியானாலும் ஏழு நாட்களுக்குள் குணமாக்கிவிட இவை போதும். ஒருகால் அதற்குப் பிறகும் ஜுரம் நீடிக்குமானால் சின்னருஹாதி கஷாயத்தைக் கொடுக்கச் சுகமாகும். சீந்தில் கொடி, ஆடாதோடை வேர், நிலவேம்பு, பற்பாடகம், கோரைக் கிழங்கு, பூனைக் காஞ்சியின் வேர், சுக்கு ஆகியவற்றின் சம பாகத்தினால் மேற்சொன்ன விதம் தயாரித்த கஷாயந்தான் சின்னருஹாதி கஷாயம். வேளைக்கு 1-2 அவுன்ஸ் வீதம் தினம் 2-3 வேளை கொடுக்கவும்.

இதனிடையில் மலபந்தமும் இருக்குமானால் திராக்ஷைக் கஷாயத்தைக் குடித்து ஒன்றிரண்டு முறை மலத்தைப் போக்கிக் கொள்ளவும்.

'ப்ளூ' வந்தால் வரட்டும். மேற்சொன்ன மருந்துகள் இருப்பின் அதைப் பற்றிக் கவலை வேண்டாம். 'ப்ளூ'வுக்குப்பின் ஏற்படும் ஒரு பலஹீனம் இருக்கிறதே! அதுதான்படு மோசம். ஜுரமே பரவாயில்லை என்று எண்ண இடமளிக்கும். அதற்கென்ன செய்வது?

ஜுரமுள்ளபோது ஆகாரம் என்ன கொடுக்கலாம் என்று சொல்லவில்லையே...? அ...து.வா?...(தொடரும்)

# மாதர்குல திலகங்கள்

★

## ஸ்ரீமதி மேரி கிளப்வாலா ஜாதவ்



அநேக ஆண்டுகளுக்கு முன் பாலில் சர்க்கரை கலந்தது போலப் பர்ஷியா தேசத்திலிருந்து சில குடும்பங்கள் பாரதத்தில் வந்து குடியேறின. அவர்கள் அநேகமாக வடக்கேதான் தங்கினார்கள். ஆனால் சென்னை மாநகரப் பெண்களின் பாக்கியம் ஸ்ரீமதி மேரி கிளப்வாலா ஜாதவ் நம்மிடையே வந்து சேர்ந்தார்.

வட நாடு தென்னாடு என்றெல்லாம் வித்தியாசம் பேசுபவர்கள் ஸ்ரீமதி கிளப்வாலா ஜாதவின் தன்னலமற்ற தொண்டுகளைப் பார்த்தால் அந்த மனப்பான்மையை அகற்றி விடுவார்கள்.

அவருக்கு முக்கியமான ஒரு கொள்கை உண்டு. சமூக நலப்பணியுடன் எல்லை கட்டி நிறுத்திக் கொண்டு விடுவார். அரசியல் துறையில் அவர் போனதில்லை. எனவே அந்நிய ஆட்சி நடைபெற்ற போதும் அநேக பெரிய காரியங்களை நிர்வகித்துத் திறமையாக நடத்தி வருகிறார். அப்பொழுதும் பெண்களுக்குத் தொண்டு புரிந்திருக்கிறார்.

சிலர் சமூக நலப்பணிக்கென்றே பிறக்கிறார்கள். சிலர் அந்தப் பணியில் பிடித்துத் தள்ளப்படுகிறார்கள். ஸ்ரீமதி கிளப்வாலா ஜாதவ் அவர்கள் முதலில் சொன்ன இனத்தைச் சேர்ந்தவர்.

விசேஷமான பட்டங்கள் இல்லாவிட்டாலும் நன்றாகப் படித்தவர். அறிவாளி. குழந்தை உள்ளம் படைத்தவர். அந்தக் குணம் அவருடைய முகத்திலேயே பிரதிபலிக்கும். எல்லோரிடமும் அன்பாகப் பேசுவார். பகைமை, வஞ்சனை, கட்சிபேதம் முதலிய எந்தத் துர்க்குணங்களும் அவருக்குக் கிடையாது. தாராளமான மனப்போக்குடையவர். இவரிடம் பிற சமூகநல ஊழியரிடம் இல்லாத அநேக சிறப்பான குணங்கள் உண்டு.

இவர் சேவா சங்கத்தின் கௌரவ காரியதரிசி. செஞ்சிலுவைச் சங்கத்தின் நிர்வாக அங்கத்தினர். அந்தச் சங்கத்தின் மூலம் வெளியூர்களிலும், உள்ளூரிலும் அநேக சேவைகள் செய்து வருகிறார். மிகவும் முக்கியமான உணவுப் பொருளான பால் பொடியை நிறைய விநியோகம் செய்து வருகிறார்.

ஒரு சமயம், "நீங்கள் ஏன் மேடை மீது ஏறிப் பேசுவதில்லை?" என்று கேட்டேன்.

சிரித்துக் கொண்டே, "எனக்கு வேலை செய்யத்தான் தெரியுமே தவிர, பேசத் தெரியாது" என்றார். அவர் கூறியது முற்றிலும் உண்மை.

இவருடைய பணிகள் இன்னும் அநேகம் இருக்கின்றன. இளம் குற்றவாளிகள் விடுதி, அநாதை இல்லங்கள், குழந்தைகள் இல்லங்கள், க்ஷய ரோகநிவாரணம், சென்னை சமூகசேவைப் பள்ளி முதலிய ஸ்தாபனங்களுக்காகப் பெரும்பாலும் உழைக்கிறார். அநேக நல்ல காரியங்களுக்கு நிதி திரட்டி உதவி செய்திருக்கிறார்.

இன்று சென்னையில் எந்தப் பொதுக்கூட்டம் நடைபெற்றாலும், எந்தச் சங்கமானாலும் அவருடைய பங்கு அதில் பெரிதாக இருக்கும். வெளிநாட்டு அரசாங்க விருந்தினர்கள், கலைஞர்கள் முதலியவர்களை வரவேற்கும் குழுவினர் கூட்டத்தில் ஸ்ரீமதி கிளப்வாலா ஜாதவ் அவர்களின் பெயர் முதன்மையாக இருக்கும். அவர் இல்லாத பொதுக் காரியங்களே இல்லையென்று சொல்லலாம்.

அன்பைப் பெறவும், அன்பு செய்யவும் தகுதி வாய்ந்தவர். இந்தச் சகோதரிக்குச் சமீபத்தில் ஷெரீப் பதவி அளித்திருக்கிறார்கள். ஸ்ரீமதி ஜாதவ் எந்தப் பெரிய பதவி வகிக்கவும் பொருத்தமானவர். அதற்குத் தேவையான நடுநிலையில் நின்று பார்க்கும் உயர்ந்த குணம் அவரிடம் நிறைய இருக்கிறது.

பார்ஸி சமூகத்தைச் சேர்ந்த பெண்மணியான ஸ்ரீமதி கிளப்வாலா ஜாதவ் தென்னாட்டுச் சகோதரியாக மாறித் தமிழ் நாட்டுப் பெண் குலத்துக்கு அரும் பெரும் தொண்டாற்றி வருகிறார். அவர் பல காலம் வாழ்ந்து பெண் குலத்துக்குத் தொண்டாற்ற வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

— வசுமதி ராமசாமி.



திருப்பத்தூர் அட்வகேட் திரு டி. கே. சுப்பிரமணிய அய்யருடைய குமாரி விசாலாட்சிக்கும் பம்பாய் மத்திய ரயில்வே திரு கே. யக்ஞசாமி ஐயரின் புதல்வர் திரு சத்தியமூர்த்திக்கும் விவாகம் வெகு விமரிசையாக நடந்தேறியது.



திருப்பூர் சிபா ஸ்டாக்கிஸ்டு திரு சுப்பராஜு அவர்கள் குமாரி ராமதிலகத்துக்கும் மதுரை பி. சேதுராமராஜு அவர்கள் குமாரர் திரு எஸ். ஜனகிராம் பி.எஸ்ஸி.க்கும் திருப்பூரில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

# வாழ்க



திருவாரூர் காசுக்கடை திரு எம். ஏ. பரசுராம செட்டியார் குமாரர் திரு ராஜசேகரன் அவர்களுக்கும் திருமதி மீனாட்சிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



அகில இந்திய ரேடியோவில் தமிழில் செய்தி வாசிக்கும் திரு இசக்கிக்கும் மதுரை பாண்டியன் மில்லைச் சேர்ந்த திரு ராமையாப் பிள்ளையின் புதல்வி திருமதி சுப்புலக்ஷ்மிக்கும் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.



சென்னை அரசாங்க இரும்பு எஃகு வழங்கும் அலுவலர் திரு முத்து வெங்கடாசலம் அவர்களின் சகோதரர் திரு பி. முருகன் பி.ஏ..பி.எல். அவர்களுக்கும் திருமதி பாக்கியம் அவர்களுக்கும் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



திருவெண்காடு திரு ஆர். சேதுராமய்யர் அவர்களின் புதல்வி திருமதி சாவித்திரிக்கும் என்ஜினியர் திரு பி. வி. கிருஷ்ண மூர்த்திக்கும் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் திரு கே. வி. சுப்பிரமணியன், கிராண்ட் அட்வர்ட்டைஸிங் கம்பெனியைச் சேர்ந்த திரு குளத்து அவர்களின் சகோதரி திருமதி எஸ். லலிதாவைச் செப்டம்பர் 11-ந்தேதி மணந்துகொண்டார்.

# மணமக்கள்



ஓய்வு பெற்ற தக்ஷிண ரயில்வே ஜெனரல் மானேஜர் திரு கே. ஆர். ராமாநுஜத்தின் புதல்வி திருமதி சுந்தரிக்கும் திரு ஆராவமுதனின் புதல்வர் திரு பத்மநாபனுக்கும் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.



சிதம்பரம் கல்கி ஏஜண்ட் திரு சி. செ. கனகசபையின் குமாரி சிவகுமாரிக்கும் திருவாளர் குப்புசாமிக்கும் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடந்தது.



திருக்காட்டுப்பள்ளிக்கு அடுத்த நேமம் கிராமத்தில் எழுத்தாளர் திரு ஜீ. ராம கிருஷ்ணன் அவர்களுக்கும் திருமதி சுசீலாவுக்கும் சிறப்பாகத் திருமணம் நடை பெற்றது.



# ஜனநாயக காங்கிரஸ் மகாநாடு

தமிழகத்துக்கு உணர்ச்சி ஊட்டும் மதுரையில் அகில இந்திய ஜனநாயக காங்கிரஸ் கா.சீ.க. மகாநாடு நடைபெற்றது. செப்டம்பர் 28, 29 தேதிகளில் நடைபெற்ற இந்த மகாநாட்டுக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம். 1. ஜனநாயக காங்கிரஸ் மகாநாட்டுப் பந்தலின் தோற்றம் 2. காங்கிரஸ் ஜனநாயகக் கட்சியின் புதிய கொடியை மகாநாட்டினருக்கு அறிமுகப்படுத்துகிறார் திரு ஏ. கணேசன். 3. தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் சென்னை சர்க்காரால் கைது செய்யப்பட்டு சிறையில் வைக்கப்பட்டிருக்கும் திரு முத்துராமலிங்கத் தேவர் மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுகிறார். 4. திரு சசிவர்ணத்தேவர் எம்.எல்.ஏ. பேசும்பொழுது மேடையில் தலைவர்கள் ஆழ்ந்த சிந்தனையுடன் அமர்ந்திருக்கும் காட்சி.





"மங்களகரமான மஞ்சள்



மரகதப் பச்சை



முல்லை வெண்மை



பவழச் சிவப்பு

கண்ணைப் பறிக்கும் வர்ணங்கள்
அல்லது இலேசான நிறபேதங்கள், நீங்கள் எந்த
வர்ணத்தை விரும்பினாலும்—

குட்லாஸ் **நெரோலாக்** பெயின்டுகளையே
உபயோகியுங்கள்



குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் ப்ரைவேட் லிட்.

ஏஜண்டுகள்:






TOILET SOAP

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 15

## சந்தகரும் பழையாறை வீரர்களும்

பழையாறை வீரர்கள் பெருஞ்சிங்கனும் வில்வலனும் சுகேசி அளித்த பழங்களை அருந்தியபின், அரிஷ்டநேமி முனிவருக்குச் சமாதான வார்த்தைகள் சொல்லி விட்டு, தங்கள் குதிரைகளில் ஏறிக் கொண்டு காஞ்சீபுரத்தை நோக்கிப் பயணமானார்கள்.

நந்திபுர நகரத்து வீரர்கள் அந்தப் பெண்ணைப் பார்த்து, இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனியென்று தவறாக நினைத்து அவளைக் கடத்திக் கொண்டு செல்ல நினைத்ததுதான், அவர்களுக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அந்தப் பெண் சுகேசி, திருபுவனியல்ல என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டனர். இருப்பினும் அந்தப் பெண்ணின் வாழ்க்கையில் ஏதோ அந்தரங்கமான ரகசியம் அடங்கி யிருப்பதாகத்தான் அவர்கள் எண்ணினர். இல்லையென்றால் கலங்கமாலரையர் அந்தப் பெண்ணைக் கடத்திக் கொண்டு போக நினைப்பாரா?

அதோடு அவர்களுக்கு இன்னொரு விஷயமும்வியப்பையளித்தது. கோடீச்சுவரத்துச் சோதிடர் சந்தகரும் அவரோடு மற்றொரு வீரனும் வந்து கலங்கமாலரையரிடமிருந்து அந்தப் பெண்ணை மீட்டதாக அந்த ஜைன முனிவர் அரிஷ்டநேமி சொல்லியதுதான் அது.

சோதிடர் சந்தகரோடு வந்தவன் யார்? அவன் கங்க நாட்டைச் சேர்ந்தவன் என்று அரிஷ்டநேமி முனிவர் சொன்னார். கங்க நாட்டைச் சேர்ந்த ஒரு வீரனுக்கும் சோழ நாட்டைச் சேர்ந்த ஒரு சோதிடனுக்கும் எவ்விதம் தொடர்பு ஏற்பட்டது? அந்த வீரன் யார் என்று தெரிந்துகொள்ள வேண்டும் என்று அவர்கள் மிகவும் ஆவலோடு இருந்தார்கள்.

சில நாழிகை நேரத்தில் அவர்கள் காஞ்சீபுரத்தை அடைந்தார்கள். அவர்கள் சோழ நாட்டைச் சேர்ந்த போர் வீரர்கள் என்பதைக் காட்டிக் கொள்ளக்கூடாது என்பதற்காகத் தங்கள் உடைகளை மாற்றிக் கொண்டனர்.

பெருஞ்சிங்கனுக்கும் வில்வலனுக்கும் காஞ்சிமா நகரம் புதியதல்ல. இருவரும் பல வீதிகளையும் கடந்து மெதுவாகக் குதிரையில் போய்க் கொண்டிருந்தனர்.

விருந்தினர் விடுதியை நெருங்கியதும் பெருஞ்சிங்கன் தன் குதிரையை நிறுத்தினான்; வில்வலனும் குதிரையை நிறுத்தினான். இருவரும் கீழே இறங்கி விடுதி



குள் நுழைந்தனர். பெருஞ்சிங்கனுக்கு விருந்தினர் விடுதிக் காவலனை நன்கு தெரியும். அவன் மூலமாகச் சில விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்று நினைத்தான்.

பெருஞ்சிங்கனைக் கண்டதும் விடுதிக் காவலன் அன்போடு வரவேற்றான். பெருஞ்சிங்கனும் வில்வலனும் தங்கள் குதிரைகளைக் கொட்டிலில் கட்டி விட்டு, அவ் விடுதிக்குள் சென்றனர். அவர்களை அன்போடு உபசரித்த விடுதிக் காவலன் சோழ நாட்டில் தலை விரித்தாடும் பஞ்ச நிலையைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினான். பெருஞ்சிங்கன் பொதுவாகப் பேச்சை மாற்றிக் கோமேச்சுவரத்துச் சோதிடர் சந்தகர் அங்கே வந்ததுண்டா என்று விசாரித்தான்.

சோதிடர் சந்தகரின் பெயரைக் கேட்டதும் விடுதிக் காவலன் முகத்தில் ஒளி பிறந்தது.

''சோதிடர் சந்தகர்தானே? அவர் இங்கேதான் தங்கியிருக்கிறார். ஆனால் தினமும் அவர் வருகிற வேளையும் போகிறவேளையும் ஒரு கணக்கில் இல்லை. குளிக்கவும் சாப்பிடவும் எப்பொழுதாவது வருவார். அவருக்கு என்ன! அவர் ஒரு மகான். அவதார புருஷர்! அதில் சந்தேகமேயில்லை. அவர் சொல்லுக் ஒவ்வொரு சொல்லும் அப்படியே பலிக்கிறது. சோதிட சாஸ்திரத்தில் சந்தகரைப் போன்ற வல்லுநர் யாருமே கிடையாது என்று துணிந்து சொல்லலாம். அன்னை பராசக்திதான் அவர் வாக்கிலிருந்து பேசுகிறாள். இல்லாவிட்டால் பெரிய பெரிய பிரபுக்களும் மகாராஜாக்களும் அவரிடம் மதிப்பும் மரியாதையும் வைப்பார்களோ? கங்கநாட்டு இளவரசன் பிருதிவிபதி அவருடைய அந்தரங்க நண்பன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். அது மட்டுமா? எங்கள் சக்கரவர்த்தியின் சகோதரர் சிம்மவர்மர் அவருடைய ஆலோசனை இல்லாமல் எதுவும் செய்வதில்லையாம். அரண்மனை இசைக் கணிகை தேனார் மொழியாள் கூடச் சோதிடர் சந்தகரைத் தெய்வமாகவே பாவிக்கிறாளாம். இத்தகைய சோதிட வல்லுநரைப் பெற்றெடுத்த உங்கள் சோழ வள நாடு உண்மையாகவே பெரிய பாக்கியம் செய்திருக்கிறது!'' என்று ஒரே உற்சாகமாகப் பேசினான் விடுதிக் காவலன்.

*   *   *

விடுதிக் காவலனின் வார்த்தைகளிலிருந்து பெருஞ்சிங்கனும் வில்வலனும் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டனர். முக்கியமாக, சோதிடர் சந்தகரோடு நண்பனாயிருப்பவன் கங்கநாட்டு இளவரசன் பிருதிவிபதிதான் என்பதை உணர்ந்து கொண்டனர். சந்தகர் எவ்வித ஆபத்தும் இன்றிச் சுகமாயிருக்கிறார் என்பதையும் தெரிந்து கொண்டனர். அவர் ஏதோ ஒரு முக்கியமான காரியத்தைச் சாதிக்கத்தான் காஞ்சிபுரத்தில் தங்கியிருக்கிறார் என்பதையும் ஊகித்து அறிந்து கொண்டனர்.

''சந்தகர் இன்று எப்பொழுது வருவார்?'' என்று விடுதிக் காவலனைப் பார்த்துக் கேட்டான் பெருஞ்சிங்கன்.

''நான்தான் சொன்னேனே, அவர் வரும் வேளையைச் சொல்லவே முடியாதென்று. நீங்கள் அவசியம் அவரைச் சந்திக்க வேண்டுமோ?'' என்று கேட்டான் விடுதிக் காவலன்.

''ஆம்! முக்கியமாக அவரைச் சந்தித்து ஒரு சோதிடம் கேட்டாக வேண்டும். எங்கள் நாட்டில் ஒரு பெண் எங்கேயோ காணாமற் போய் விட்டாள். அவளைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்று கூறினான் பெருஞ்சிங்கன்.

''இவ்வளவுதானே? இது என்ன பிரமாதம்! ஒரு பிடி சோழியை எடுத்து வைத்துக் கொண்டு எண்ணிப் பார்த்து, 'இந்தத் திசையில் இந்த இடத்தில் இப்படி இருக்கிறாள்' என்று சொல்லி விடுவார். அந்த அதிசய மனிதர்!''

''நீங்கள் அவசியம் சோதிடரை பார்க்க வேண்டுமானால் இங்கேயிருந்து சாப்பாட்டை



முடித்துக்கொண்டு இங்கேயே இருங்கள். அவர் வந்ததும் நீங்கள் பார்க்கலாம்!''

விடுதிக் காவலன் சொன்னபடி அங்கேயே தங்கியிருந்து சோதிடரைப் பார்ப்பதென்று முடிவு செய்தனர், பெருஞ்சிங்கனும் வில்வலனும்.

அவர்களை விடுதிக்குள் அனுப்பிவிட்டு, விடுதிக் காவலன் அங்கேயே காத்துக்கொண்டிருந்தான்.

மறுகணம் சோதிடர் சந்தகர் விடுதிக்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் விடுதிக் காவலன் பரபரப்போடு எழுந்து வந்து, ''உங்களைத் தேடிக்கொண்டு உங்கள் நாட்டிலிருந்து இருவர் வந்திருக்கிறார்கள். அவர்களை ஸ்நானம் செய்து சாப்பிட்டு விட்டு விடுதியிலேயே தங்கியிருக்கச் சொல்லியிருக்கிறேன்!'' என்றான்.

சந்தகர் இதைக் கேட்டதும் திகைப்படைந்து விட்டார்.

''என்னைத் தேடிக் கொண்டு இருவர் வந்தார்களா? அவர்கள் யார், எதற்காக வந்திருக்கிறார்கள் என்று விசாரித்தீர்களா?''

''அவர்கள் யாரென்று எனக்குத் தெரியாது. அவர்கள் இங்கு வந்தது காணமற்போன ஒரு பெண்ணைப் பற்றிச் சோதிடம் கேட்பதற்காக என்பது அவர்கள் கூறித் தெரியும்.''

''சரி. நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள். காணமற் போன அந்தப் பெண்ணைப் பற்றி அவர்களிடம் நன்றாய் விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள். நான் மாலையில் வருவேன. அப்பொழுது என்னிடம் சொல்லுங்கள். நான் இன்று மாலையில் வருவேனென்பதை அவர்களிடம் சொல்ல வேண்டாம். நான் இன்று முழுதும் வரமாட்டேன் என்று சொல்லி அவர்களை இங்கிருந்து வெளியே அனுப்பிவிடுங்கள்!'' என்று கூறி விட்டுச் சந்தகர் வெளியே எங்கேயோ புறப்பட்டுப் போனார்.

பெருஞ்சிங்கனும் வில்வலனும் ஸ்நானம் செய்து சாப்பிட்டு விட்டுச் சந்தகரைக் காணும் ஆவலுடன் விடுதிக் காவலனிடம் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் விடுதிக் காவலன், ''நீங்கள் யாரோ ஒரு பெண் காணமற் போய் விட்டதாகவும், அவளைப் பற்றிச் சோதிடம் கேட்க விரும்புவதாகவும் சொன்னீர்களே, அந்தப் பெண் யார்? எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்றான்.

நந்திபுர நகர்க் காவலர் இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனி காணமற் போனதையும், அவள் இருந்த நிலையைப் பற்றியும், புத்தபிக்ஷுணிக் கோலத்தில் இருந்த அவளைத் தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டார் மகன் கோளாந்தகனுக்கு மணம் முடிக்க நிச்சயித்திருந்ததையும் விவரமாகக் கூறினான் பெருஞ்சிங்கன்.



"நீங்கள் குறிப்பிடும் பெண் இந்நகருக்கு வந்ததாக இதுவரையில் தெரியவில்லை. எந்த விஷயம் தெரிந்தாலும், அதைப் பற்றிய விவரம் இந்த விருந்தினர் விடுதிக்கு வராமல் இராது. என் காதில் விழாமலும் இருக்காது. ஆனால் இன்று காலையில் ஒரு செய்தி என் காதில் விழுந்தது. பல்லவ மன்னர் சபையில் இசைக் கணிகையாக இருந்து, புத்த பிக்ஷுணியாக மாறிய மாலவல்லி என்பவள் காவிரிப் பூம்பட்டினத்து புத்த விஹாரத்தில் நடந்த ஒரு கொலையில் சம்பந்தப்பட்டுத் தலைமறைவாக இருந்தாள் என்றும், அவள் இன்று காலை இந்நகருக்கு வந்து, புத்த தேரிப் பள்ளியில் அடைக்கலம் புகுந்து விட்டதாகவும் கேள்விப்பட்டேன்."



இதைக் கேட்டதும் பெருஞ் சிங்கனுக்கும் வில்லவனுக்கும் விடுதிக் காவலன் குறிப்பிடும் மாலவல்லிதான் திருபுவனியாயிருப்பாளோ என்ற ஐயம் உண்டாயிற்று. உடனே புத்தப்பள்ளிக்குச் சென்று பார்க்க ஆவல் கொண்டனர். தாங்கள் வெளியே சென்று வருவதாகச் சொல்லி, விடுதிக் காவலனிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றனர்.

அவர்களுக்குக் குதிரை மீதுசெல்வதைவிட நடந்து செல்வதே நல்லது என்று தோன்றியதால், காஞ்சிநகரத்து விசாலமான வீதிகளைப் பார்த்துக் கொண்டே புத்ததேரித் தெருவுக்குச் சென்றனர்.

அவர்கள் இருவரும் அந்தத் தெருவிலுள்ள புத்தப் பள்ளியின் வாசலை அடைந்தபோது அந்தப் பள்ளிக்குள்ளிருந்து சோதிடர் சந்தகர் வெளியே வந்தார். அவர்கள் இருவரையும் கண்ட சந்தகருக்கு, அவர்கள் சோழ நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது தெரிந்துவிட்டது. ஒருவேளை தம்மைத் தேடிக் கொண்டு விருந்தினர் விடுதிக்கு வந்தவர்களாக இருக்குமோ என்று ஐயம் கூட எழுந்தது.

"வாருங்கள். சோழ நாட்டிலிருந்து தானே வருகிறீர்கள்? நான்தான் சோதிடன் சந்தகன். இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனி எங்கே இருக்கிறாள் என்று சோதிடம் கேட்கத்தானே நீங்கள் என்னைத் தேடி வந்திருக்கிறீர்கள்?" என்று சந்தகர் அவர்களைப் பார்த்துக் கேட்டார்.

பெருஞ்சிங்கனும் வில்லவனும் ஆச்சரியத்தினால் அயர்ந்து போனார்கள். 'முன் பின் தெரியாதவர்களைப் பற்றி இத்தனை சரியாகச் சோதிடம் சொல்கிறாரே! இவர் பெரிய சோதிடர்தான்!' என்ற எண்ணம் அவர்கள் இருவர் உள்ளங்களிலும் பரவி அவர்களை மெய்சிலிர்க்க வைத்துவிட்டது.

சந்தகர் கண்களை மூடிச் சிறிது நேரம் யோசித்து விட்டு, "அவள் இருக்கும் இடத்தைச் சோதிடத்தின் மூலம் தெரிந்து கொண்டு விட முடியாது. அவள் எங்கேயிருக்க வேண்டுமோ அங்கே இருக்கிறாள். துறவுக் கோலம் பூண்ட ஒரு பெண்ணைக் குடும்ப வாழ்வில் இச்சை கொள்ளச் செய்வது எத்தகைய மூடத்தனம் என்று சொல்லுவது? அதிலும் அவளை ஒரு முரடனுக்கு மணம் செய்து வைக்க நினைப்பது மிகவும் பைத்தியக்காரத்தனம். அதுமட்டுமா? யாரோ ஒரு பெண்ணை, தங்கள் மகள் என்று சொல்லிக் கொண்டு அலைவது இன்னும் பெரிய விநோதம். மாலவல்லி திருபுவனி ஆகிவிட முடியுமா? உருவ ஒற்றுமையை வைத்துக் கொண்டு எத்தனை பெரிய சூழ்ச்சி செய்ய முயன்றிருக்கின்றனர்!" என்று மளமள வென்று பேசிக் கொண்டே போனார்.

பெருஞ்சிங்கனும் வில்லவனும் மந்திரத்தில் கட்டுண்ட நாகம் போல் சந்தகரின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அவருடைய பேச்சிலிருந்து, காணாமற்போன பெண் காஞ்சீபுரத்தில் அந்த புத்தப் பள்ளியில் இருக்கிறாள் என்று உணர்ந்து கொண்டனர். அந்தப் பெண் நந்திபுர நகரத்தை விட்டு யாருக்கும் தெரியாமல் காஞ்சீபுரத்துக்கு வந்ததற்குக் காரணம் சோதிடர் சந்தகராகத் தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தனர். அவருடைய பாதுகாப்பில் திருபுவனி இருப்பினும், அவர்கள் தங்கள் அரசருடைய உத்தரவைப் புறக்கணிக்க முடியுமா?

பெருஞ்சிங்கன் மிகவும் மரியாதை நிறைந்த குரலில், வணக்கத்துடன், "...எங்கள் மன்னர், காணாமற்போன திருபுவனியை எப்படியும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறார். நந்திபுரத்து வீரர்

களும் அவனைத் தேடுவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள் ...!'' என்றான்.

''யார் வேண்டுமானாலும் தேடிக் கொண்டு திரியட்டும். ஆனால் உங்கள் மன்னர் அந்தப் பெண்ணைத் தேடும் பணியில் ஈடுபட வேண்டாம். அவர் இப்பொழுது கவலை செலுத்த வேண்டிய விஷயம் வேறு இருக்கிறது. தஞ்சை மன்னர் முத்தரையர் கொடும்பாளூர்க் கோட்டையின்மீது படையெடுக்க நல்ல நாள் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று உங்கள் அரசரிடம் மிகவும் அந்தரங்கமாகச் சொல்லுங்கள். இடங்காக்கப்பிறந்தாரின் மகள் என்று தவறாக நினைக்கப்படும் மாலவல்லி என்னும் பெண்ணைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவளை அன்னை பராசக்தி எப்படியும் காப்பாற்றுவாள். அவள் இன்னும் சிரமப்பட வேண்டியிருக்கிறது. ஒருவர் வினையை இன்னொருவர் அநுபவிக்க முடியாது. வினையை வெல்லவும் முடியாது.

''ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்''

என்று தமிழ்மறை கூறுகிறதல்லவா?'' என்றார் சந்தகர் உறுதியான குரலில்.

''...இன்னொரு விஷயம்.,...சமீபத்தில் பூதுகர் இங்கு சிறை வைக்கப்பட்டிருந்தார் என்றும், பிறகு சிறையில் குரூரமாகக் கொலை செய்யப்பட்டாரென்றும் வதந்தி எங்கும் பரவியிருந்தது. இன்று நாங்கள் கேள்விப்பட்ட செய்தி வியப்பைத் தருவதாக இருக்கிறது. பூதுகர் சிறையிலிருந்து தப்பி விட்டார் என்று கேள்விப்பட்டோம். இவற்றுள் எது உண்மை?'' என்று கேட்டான் வில்வலன்.

''பூதுகர் சிறைப்பட்டால் அல்லவா அதிலிருந்து தப்ப முடியும்? அவர் சிறைப்பட்டதும் பொய். அதிலிருந்து தப்பியதும் பொய். இந்த வதந்திகள் யாவும் எதிரிகள் மக்களின் மனப்பான்மையை மாற்றுவதற்காகத் திரித்து விட்ட செய்திகள். தயவுசெய்து இதற்குமேல் பூதுகரைப் பற்றி எதுவும் என்னைக் கேட்க வேண்டாம். அவரைப் பற்றி நான் ஏதாவது சொன்னால் அது பகைவர்களுக்கு ஆதரவு தருவதாக முடியலாம். எனக்கோ பூதுகருக்கோ ஆபத்து என்ற தகவல்களையெல்லாம் நம்பவேண்டாம். எங்கள் கவலை முழுவதும் நாங்கள் பிறந்த மண்ணின் மீதே இருக்கிறது. எந்த நிலையிலும் நாங்கள் எங்கள் லட்சியத்தை மறந்துவிட மாட்டோம். பூதுகர் கொலை செய்யப்பட்டதாகவும், நான் சிறையில் அடைக்கப்பட்டதாகவும் எழுந்த வதந்தியால் நாட்டு மக்கள் எழுச்சி கொண்டதும் ஒரு நன்மைக்குத்தான். மக்கள் எழுச்சி பெற்ற இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளுவதுதான் நீங்கள் இப்பொழுது கவனம் செலுத்த வேண்டிய முதல் காரியம்'' என்றார் சந்தகர்.

பெருஞ்சிங்கன் மறுபடியும் சந்தகரை வணங்கி, ''தங்கள் உத்தரவுப்படியே எங்கள் அரசரிடம் சொல்லுகிறோம். தங்களிடம் இன்னொரு முக்கியமான விஷயம் சொல்லவேண்டும்!'' என்றான்.

''என்ன அது? எந்தச் செய்தியானாலும் இங்கே தைரியமாகச் சொல்லலாம்..!''

பெருஞ்சிங்கன் சோழ நாட்டிலிருந்து தாங்கள் வந்தபோது இடையே நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கூறி, அரிஷ்டநேமி முனிவர் விடுத்த வேண்டுகோளையும் சொன்னான்.

சந்தகர் சிறிது யோசித்து விட்டு, ''நீங்கள் இருவரும் போகும்போது அந்த முனிவரைக் கண்டு, 'நீங்கள் எவ்விதக் கவலையும் பட வேண்டாம். சோதிடர் சந்தகரும், கங்கநாட்டு வாலிபன் வீரவிடங்கனும் இன்னும் சில தினங்களில் அங்கு வருவார்கள்' என்று சொல்லுங்கள். இனி இங்கே உங்களுக்கு ஒரு வேலையும் இல்லை. நீங்கள் உடனே உங்கள் ஊருக்குப் போங்கள். நான் சொல்லியதெல்லாம் நினைவிருக்கிறதா?'' என்று கேட்டார்.

''நினைவில் இருக்கிறது. ஆனால் தாங்களும் எங்கள் மன்னருக்கு ஒரு ஓலை கொடுத்தால் நல்லது!'' என்றான் பெருஞ்சிங்கன்.

''என்னோடு விருந்தினர் விடுதிக்கு வாருங்கள். ஒரு ஓலை எழுதித் தருகிறேன்!'' என்று கூறிச் சந்தகர் புத்தப் பள்ளியிலிருந்து விருந்தினர் விடுதிக்குச் சென்றார். பெருஞ்சிங்கனும் வில்வலனும் அவரைத் தொடர்ந்து சென்றனர்.

சந்தகரோடு, காலையில் வந்த மனிதர்கள் இருவரும் வருவதைக் கண்டு விடுதிக் காவலன் ஆச்சரியமடைந்தான்.

சந்தகர் அவனிடம் சைகை காட்டி ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வரும்படி சொன்னார். உடனே அவன் அவைகளைக் கொண்டு வந்தான்.

சந்தகர் அந்த ஓலையில் வேகமாக எழுதிப் பெருஞ்சிங்கனிடம் கொடுத்து, ''இந்த ஓலையை மிகவும் ஜாக்கிரதையாக எடுத்துச் சென்று உங்கள் மன்னரிடம் சேர்ப்பிக்க வேண்டும்!'' என்று கூறி அதை அவன் கையில் கொடுத்தார்.

பெருஞ்சிங்கன் மிகவும் பணிவோடு ஓலையைக் கையில்வாங்கிக் கொண்டான். பிறகு வில்வலனும் பெருஞ்சிங்கனும் அவரை வணங்கி விட்டு, குதிரைகளில் ஏறிப் பழையாறையை நோக்கி விரைந்து சென்றனர். (தொடரும்)

சித்திரத் தொடர்கதை ③








# சோதிடப் புலி

-அக்ஷயம்-













உ-ம்! திருமணத்திற்கு அவங்களே தேதி வைத்து அனுப்பிட்டாங்க! முகூர்த்தத் தேதி மிகவும் நெருக்கத்தில் இருக்கிறதனால் காரியங்களை கொஞ்சம் சீக்கிரமாகச் செய்தாக வேணும்.




கெட்டி மேளம் கொட்ட, மாப்பிள்ளை அழைப்பு ஆரம்பமாகிறது.


நாளைக்கு மாப்பிள்ளை இந்தக்குதிரையில் தான் மணப்பந்தலுக்கு வருவார்!


திருமணத்தன்று காலையில்
மாப்பிள்ளை புறப்படத் தயார். குதிரையைக் கொண்டுவரச் சொல்.




குதிரையைக் காணோம்!
தொடரும்




## 28. மால்மாவின் கவலை!

ஒருநாள் ஒரு குறுகிய பாதை வழியாக மால்கோஷ் மெதுவாக நடந்து கொண்டிருந்தான். அந்தக் குறுகிய பாதை ஒரு ஆற்றின் கரையில் போய் முடிவடைந்தது. சாதாரணமாக, அந்தப் ஆற்றில் தண்ணீர் இல்லாவிட்டால், ஜனங்கள் ஆற்றில் குறுக்கே இறங்கிப் போவதற்கு அந்தக் குறுகிய பாதையை உபயோகிப்பார்கள். ஆற்றில் தண்ணீர் இருக்கும் பொழுது ஆற்றைக் கடப்பதற்குப் பரிசலில் ஏறுபவர்களும், இறங்குபவர்களும் அந்தப் பாதையை உபயோகிப்பதுண்டு. அந்தக் குறுகிய பாதை ஆற்றின் கரையில் முடிவடையும் இடத்துக்குச் சற்றுச் சமீபத்தில் தான் பரிசல் துறையும் இருந்தது. ஆற்றில் அப்போது கரை புரண்டு வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. மால்கோஷுக்கு ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டால் என்ன? அல்லது தண்ணீரே இல்லாமல் வறண்டு இருந்தால் என்ன! மால்கோஷ் அந்தக் குறுகிய பாதையில் நடந்து செல்லும்பொழுது அந்தப் பாதையில் இருந்த இரண்டு நாய்கள், பைத்தியக்காரனைப் போல விகாரத் தோற்றத்துடன் இருந்த மால்கோஷைப் பார்த்துக் குரைத்துக்கொண்டே இருந்தன. 'ஆ! ஆ!' என்று சொல்லிப் பார்த்தான். அந்த நாய்கள் அவனைப் பார்த்துக் குரைத்துக் கொண்டே ஆற்றின் கரைப் பக்கம் போய்க்கொண்டிருந்தனவே தவிரக் குரைப்பதை மட்டும் நிறுத்தவில்லை.

நாய்களின் மீது கற்களை எடுத்து விசித் துரத்தலாம் என்று எண்ணி மால்கோஷ் சுற்று முற்றும் பார்த்தான். மால்கோஷின் கண்களுக்கு ஒன்றும் அகப்படவில்லை. பிறகு சற்று யோசித்தான். அவசரம் அவசரமாகத் தனது பையிலிருந்த மாயப்பந்தை எடுத்தான். நாயைத் துரத்தும் நோக்கத்துடன் அந்தப் பந்தை நாயின் மீது விட்டெறிந்தான்.

மால்கோஷ் எறிந்த பந்து ஆற்றில் போய் விழுந்தது. ஆற்றில் விழுந்ததை மால்கோஷ் கவனித்தான். அப்படிக் கவனித்தாலும் அந்த மாயப் பந்து இரண்டாவது முறையாகத் தண்ணீரில் விழுந்தால் அதனிடத்தில் உள்ள சக்தி போய் விடும் என்பதை எப்படி அறிவான்? ஆனால் அந்தப் பந்து இல்லாவிட்டால் தினந்தோறும் அவன் சாப்பாட்டுக்குத் திண்டாட வேண்டியது என்பது மாத்திரம் அவனுக்குத் தெரியும். பைத்தியமாக இருந்தாலும் சரி, அல்லது முடவனாக இருந்தாலும் சரி பசி யாரை விடும்?

பந்தைத் தேடிக் கொண்டு கரையில் ஏறி ஆற்று வெள்ளத்தில் பார்த்தான். அவன் கண்களுக்குத் தெரிந்த வரையில் அகப்படவில்லை. நதிக்கரையோடு வெகு தூரம் ஆறு ஓடுகிற பக்கமாக ஓடிப் பார்த்தான். அகப்படவில்லை. ஆற்றங்கரைக்குப் பக்கத்தில் நாய்கள் நின்ற இடத்தில் தேடினான். ஒன்றும் பிரயோசனப்படவில்லை. துக்கமே சில காலம் தெரியாமல் இருந்த அவன் துக்கமடைந்தான். ஒன்றும் தோன்றாமல் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துத் தூங்கினான். மறு நாள் காலையில் எழுந்திருந்த உடன் அவனுக்குப் பசி ஏற்பட்டது! 'என் பந்து போய் விட்டதே. நான் இனிமேல் சாப்பாட்டுக்கு என்ன செய்வேன்!' என்று நினைத்து வருந்தினான். வேளாவேளைக்குச் சாப்பாடு கிடைத்த பொழுது ஒருவருடன் பேசாமல் தனியாகப் போய் கொண்டிருந்






தான். ஆனால் இனிமேல் அப்படி இருக்க முடியுமா? வயிற்றுப் பசிக் கொடுமை அல்லவா? யாரைப் பார்த்தாலும் பிச்சை கேட்க ஆரம்பித்தான். "ஐயா! காசு கொடுங்கள் வயிற்றைப் பசிக்கிறது" என்று தெருவில் இருப்பவர்களை யெல்லாம் கேட்டுக் கொண்டே போய்க் கொண்டிருந்தான். கிடைக்கும் காசை வைத்துக் கொண்டு தின் பண்டங்களை வாங்கி அன்றுடப் பசியைத் தணித்துக் கொள்ளுவான். காசு, பணம், பசி என்ற வார்த்தைகள் தான் அவன் வாயினின்று வந்த வார்த்தைகள்.

* * *

மால்கோஷின் தகப்பனாரான பிரபல மந்திரவாதி மால்மா தம் பிள்ளையும், பெண்ணும் தம்மை விட்டுச் சுற்றுப் பிரயாணம் செய்வதற்கு வெளியே சென்றது முதல் சரியாக இரவில் தூங்குவதே இல்லை. ஆனால் மால்கோஷ், கலாவின் நடவடிக்கைகளை மாத்திரம் அடிக்கடி தம்மிடத்தில் இரகசிய அறையில் உள்ள பூகோள உருண்டையைப் போல் வடிவம் கொண்ட பளிங்குக் கண்ணாடி உருண்டையின் உதவியினால் கவனித்துக் கொண்டுவந்தார். எடுத்த காரியங்களிலெல்லாம் மால்கோஷ் வெற்றி பெற்று வந்து கொண்டிருந்ததைப் பார்த்து மிகவும் சந்தோஷம் அடைந்தார். சமீபத்தில் கலாவும், மால்கோஷும் பறக்கும் ஜமக்காளத்தில் வீடு நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்துச் சந்தோஷம் அடைந்தார். ஆனால் அவனை அப்படிப் பார்த்த நாளைக் கணக்கிட்டும் பார்த்தால் மால்கோஷும், கலாவும் வீட்டை எப்பொழுதோ அடைந்திருக்க வேண்டுமே! அவர்கள் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மால்மா அவர்கள் வராமல் போகவே மனம் சஞ்சலமடைந்தார். அவர்களுக்கு ஏதாவது ஆபத்து வந்து விட்டதோ என்ற கவலை வேறு அவருக்கு உண்டாயிற்று.

உடனே அவசரம் அவசரமாகத் தமது இரகசிய அறைக்குச் சென்றார். துணியினால் மூடப்பட்டிருந்த பளிங்குக் கண்ணாடி உருண்டையைத் தம் எதிரில் வைத்துக் கொண்டார். மூடப்பட்டிருந்த துணியை எடுத்து விட்டு, கலாவும், மால்கோஷும் எங்கிருக்கிறார்கள் என்பதைக் காண ஏதோ மந்திரங்களை உச்சரித்துப் பளிங்கு உருண்டையைத் தமது கைகளினால் ஒரு முறை தடவினார். உருண்டையில் பளிச்சென்று ஒரு வெளிச்சம் தெரிந்தது. மால்மா உற்று நோக்கினார். பிறகு அடர்ந்த காட்டைப் போல ஒரு இடம் இலேசாக முதலில் தெரிந்தது. பிறகு கலா மரத்தின் அடியில் நின்று கொண்டிருப்பது தோன்றியது. ஒரு மரத்திலே அவள் கட்டப்பட்டிருப்பதைப் பார்த்தார். அவளுடைய வாயும் கட்டப்பட்டிருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டார். முதலில் மால்மாவின் கண்களுக்கு வேடர்கள் நிற்பது சரியாகத் தெரியவில்லை. பிறகு கண்களில் ஒரு வித பூதக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு பார்த்த பிறகு தான் தெரிந்தது. வேடர்கள் கலாவுக்குத் தீங்கு புரியும் எண்ணத்தில் நின்று கொண்டிருக்கிறார்கள் என்றும் தெரிந்து கொண்டார். அதுவுமல்லாமல் வேடர்கள் கையிலே ஜமக்காளமும், முத்து மாலையும் பையும் இருப்பதைப் பார்த்து, "அடாடா! கலாவைக் கட்டிப் போட்டதும் அல்லாமல் மந்திர ஜமக்காளத்தையும் அல்லவா எடுத்துக் கொண்டு விட்டார்கள்! இப்பொழுது எப்படி அவள் தப்ப முடியும்? மால்கோஷ் இப்பொழுது எங்கே இருக்கிறான்? அவன் அவளைப் பிரிந்து விட்



டான் போலிருக்கிறதே!'' என்று சொல்லிக் கொண்டே பளிங்கு உருண்டையை ஏதோ மந்திரங்கள் சொல்லிக் கொண்டே தடவினர். பூலோக உருண்டையிலுள்ள வெளிச்சம் குறைந்தது. பிறகு சில விநாடிக்குள் மறுபடியும் வெளிச்சம் உண்டாயிற்று. மால்மா பளிங்கு உருண்டையைக் கூர்ந்து கவனித்தார். நடுத் தெருவிலே ஒருவன் வந்து கொண்டிருப்பதைக் கவனித்தார். இவனு மால்கோஷ்! இல்லே, இல்லே. அவன் அணிந்து கொண்டிருக்கும் ஜிப்பாவும், பைஜாமாவும், அழுக்குப் படிந்து கிழிந்தல்லவா போயிருக்கிறது! தலேமயிர் கலேந்திருக்கிறது. அவனுக்கு எதிராக யாரோ ஒருவன் வந்து கொண்டிருக்கிறன். அவனே நிறுத்தி இவன் ஏதோ பிச்சை கேட்கிறது போல அல்லவா கேட்கிறன்? அவன் கொடுக்காமலே போகிறனே!''

பிச்சை கேட்டவன் மால்கோஷ்தானு என்று மிகவும் கவனித்துப் பார்த்தார் மால்மா. ''அதற்குச் சந்தேகமில்லே. அவனே நான் கலாவுடன் சேர்ந்து சில நாட்களுக்கு முன் தான் பார்த்தேன். அதற்குள் இப்படிப் போய் விட்டானே!'' என்று வருந்தினர்.

''மால்கோஷ் பிச்சை கேட்டுக் கொண்டு அலேந்து திரிவதைப் பார்த்தால் அவனிடத்தில் நான் கொடுத்திருந்த மாயப் பந்து இப்பொழுது அவன் கைவசம் இல்லே யென்று தெரிகிறது. கலாவிடமிருந்து பறக்கும் ஜமக்காளத்தை வேடர்கள் எடுத்துக் கொண்டு விட்டார்கள். மால்கோஷிடம் பந்தைக் காணவில்லே. இருவரும் ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாமல் பிரிந்து விட்டார்கள். கலா அகப்பட்டுக் கொண்டு தவிக்கும் அடர்ந்த காட்டுக்கும் மால்கோஷ் பிச்சை கேட்டுக் கொண்டு அலேந்து திரிந்து கொண்டிருக்கும் இடத்துக்கும் வெகுதூரம் இருக்கும். இனிமேல் இவர்கள் எப்படி ஒன்று சேர முடியும்? அப்படிச் சேர்ந்தாலும் இவர்களிடத்திலிருந்து மாயப் பந்தும் பறக்கும் ஜமக்காளமும் பறி போய் விட்டன. அவைகள் இல்லாமல் என் நிபந்தனைகளின் படி என்னைப் பார்க்க அவர்கள் வர முடியாது. எனது அன்பான கலா யாரும் உதவி புரிய முடியாத ஒரு காட்டிலே வேடர்கள் கைகளில் சிக்குண்டு மரத்தில் கட்டப் பட்டிருக்கிறள். எனது செல்வப் புதல்வன் மால்கோஷ். அவனுக்கு ஏராளமான செல்வங்கள் இருந்தாலும் இப்பொழுது தன் வயிற்றை வளர்க்க ஒரு பிச்சைக்காரனைப்போல அலேந்து திரிகிறன். அவர்களுக்குத் துன்பங்கள் எல்லாம் யாரால் வந்தது? என்னுல்தான். அதற்குச் சந்தேகமில்லே. நான் என் குழந்தைகளுக்கு இட்டிருக்கும் நிபந்தனைகள் ஒரு தகப்பனர் அவனது குழந்தைகளுக்கு இடும் நிபந்தனைகளா? ஒருநாளும் இல்லே. இதோ இப்பொழுதே சென்று அவர்களே வீட்டுக்கு அழைத்து வந்து விடுகிறேன்!'' என்று தாம் உட்கார்ந்த நாற்காலியிலிருந்து எழுந்து நின்றார் மால்மா.

பிறகு சற்று நிதானமாக யோசித்தார். ''என் குழந்தைகளின் மேல் உள்ள பாசத்தால் ஏதேதோ உளறி விட்டேனே. நான் எடுத்துக் கொண்ட காரியத்திலிருந்து பின் வாங்குவதா? அவர்களுக்கு என்ன ஆபத்து நேரிட்டாலும் அதிலிருந்து விலகிக் கொள்ளப் பிரயத்தனப் பட வேண்டும் என்று தானே குழந்தைகளுக்குச் சொல்லி அனுப்பினேன்! அப்படி இருக்கும் பொழுது நான் அவர்களிடம் போய் அவர்களுக்கு ஏன் உதவி செய்ய வேண்டும்? அவர்களாகவே உதவி தேடிக் கொள்ள வேண்டியது தான்!'' என்று தீர்மானமாக ஒரு முடிவுக்கு வந்தார்.

அப்புறம் மால்மா பளிங்கு உருண்டையைத் துணியினுல் மறைத்து வைத்து விட்டு, தம் பூஜை அறைக்குச் சென்று குழந்தைகளின் நன்மை குறித்துத் தியானத்தில் ஆழ்ந்தார். (தொடரும்)

# கால்கேட் குளோரோபில் ஈறுகளை பலப்படுத்துகிறது



**வைத்திய சோதனை நிரூபிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை முறை தவறாமல் தேய்த்தால் குளோரோபிலின் நற்பலன்கள் உங்களுக்கு கிட்டுகின்றன. ஒவ்வொரு முறை கால்கேட் குளோரோபில் உபயோகிக்கும் போதும்,

- ஈறுகளைப் பலப்படுத்துகிறது!
- வாய்நாற்றத்தை அதி தீவிரமாக ஒழிக்கிறது!
- சொத்தையாக்கும் கிருமிகளை வாயினின்று ஒழிக்கிறது!

குழந்தைகள் அதன் அதி மதுரமான சுவையை விரும்புகின்றன!







இதோ! பெரிய எகானமி சைஸில் கிடைக்கிறது!

* நீரில் கரையும் குளோரோபிலின் சேர்ந்தது.

CTPA/G/6



# குளிர்ச்சியையும் சுக க்ஷவரத்தின் வழுவழுப்பையும் அளிப்பது

# ஐஸி கூல்

## க்ஷவரத்திற்குப் பின் உபயோகிக்கும் லோஷன்

முகக்ஷவரம் செய்துகொண்ட பின், ஐஸி-கூல் லோஷனை உபயோகியுங்கள். நீங்கள் குளிர்ச்சியையும் புத்துணர்ச்சியையும் பெறுவீர்கள். ஐஸி-கூல் லோஷன்—சிறு கத்தி காயங்களை ஆற்றுகிறது. மேலும், இது புருஷர்களுக்கான லாவண்டர் மணமுள்ளது.

எல்லா இடங்களிலும் கிடைக்கும்.

**PEARLINE PARIS PRIVATE LTD.**
P. O. Box 493, Bombay-1.

சிறிய சைஸ் பாட்டில் ரூ. 3/- | பெரிய சைஸ் பாட்டில் ரூ. 5/- - உள்ளூர் வரி அன்றி

# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீமத் கம்பராமாயணம்—சுந்தரகாண்டம்

இமயமலையினாலும் கங்கை நதியினாலும் பெரும் புகழ் பெற்று உயர்ந்து விளங்கும் நம் பாரத நாடு, பழம் பெரும் காவியமான ராமாயணத்தினாலும் உயர்ந்து விளங்குகிறது. ஆதி கவியான வால்மீகி முனிவரால் வட மொழியில் இயற்றப்பட்ட வால்மீகி ராமாயணம், கவிச்சக்கரவர்த்தி கம்பரால் அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் இயற்றப்பட்டுத் தமிழகத்துக்குச் சிறப்பைத் தந்தது: சொல் நயமும், பொருள் நயமும், கவிதை நயமும் கொண்டு கம்பர் வாக்கு ராமாயண காவியத்துக்கே ஒரு தனிப் பெருமையைத் தேடித் தந்தது.

கம்பராமாயணப் பகுதிகளில் எந்தக் காண்டம் இனிமையானது என்று கூற முயல்வது, கற்கண்டுக் கட்டியில் எந்தப் பகுதி அதிக ருசியானது என்று ஆராயப் புகுவதை யொக்கும். ஆயினும், கதைப் பகுதியை ஒட்டிச் சில காண்டங்கள் பல்லோராலும் விரும்பிப் பாராட்டப்படுகின்றன. அவற்றுள் சுந்தர காண்டம் முதன்மையானது. ராவணனால் எடுத்துச் செல்லப்பட்ட சீதாபிராட்டியை அநுமான் கண்டு நல்ல சேதியைச் சொல்லி உயிர் துறக்காமல் காப்பாற்றிய உத்தமமான கதையைக் கூறுவது சுந்தர காண்டம்.

அருந் தமிழ் இலக்கியங்களை அச்சு உருவில் ஆக்கித் தந்த பெருமை வாய்ந்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள், தம் வாழ்நாளெல்லாம் அரும் பாடுபட்டுக் கம்பராமாயண ஏடுகளையும் பல புலவர்களின் இல்லங்களிலிருந்து சேகரித்து வந்தார்கள். அவற்றையும் அச்சுப் பதிப்பு ராமாயண நூல்களையும் ஒப்பிட்டு, சிறந்த பாடங்களைக் காண்பதில் பல ஆண்டுகளைச் செலவிட்டிருக்கிறார்கள். அவ்வாராய்ச்சிக் காலங்களில் அவர்கள் அவ்வப்பொழுது கண்ட முடிவுகளையும் கருத்துக்களையும் வழக்கம் போல் தம் கைப்புத்தகங்களிலும், தனிக் குறிப்புப் புத்தகங்களிலும் குறித்து வைத்தார்கள். அவற்றையெல்லாம் தொகுத்து வைத்துக் கொண்டு அடையாறு, டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தார் இந்தச் சிறந்த பதிப்பை வெளியிட்டிருக்கின்றனர்.

சொல்லாழமும் பொருளாழமும் கொண்டு இணையற்ற காவிய நூலாக விளங்கும் கம்பராமாயணக் கவிதைகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை. அவற்றைப் படிக்கும் தமிழ் ஆர்வம் உடையோர் யாவரும் பொருள் தெரிந்து கொள்ளலாமாயினும் நுட்பமான கவிகளின் பொருளையும், கவியின் சமத்காரத்தையும் தெரிந்து கொள்வதற்கு ஒரு நல்ல உரைநூல் இன்றியமையாததாகும்.

தமிழ் இலக்கியங்களின் இன்பத்தை நுகர்ந்து சுவைக்க விரும்புகிறவர்களுக்கு இத்தகைய ஆதார பூர்வமும், ஆராய்ச்சித் திறனும் கொண்ட நூல்கள் மிகமிக அவசியம்.

கிடைக்குமிடம்: டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையம், அடையாறு, சென்னை—20; விலை: ரூ. 12.

## சத்திய விஜயம்

ராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களும், பாகவதம் முதலிய பதினெண் புராணங்களும் வேதசாரத்தை, வேதத்தின் உட்கருத்தை விளக்கும் உதவி நூல்கள் என்பதை இவ்வாசிரியர் தெளிவாக விளக்குகிறார். மேற்கூறிய இதிகாசங்களையும், புராணங்களையும் பாரத நாட்டுச் சரித்திரத் தொடர்புடையனவாகக் கூறுதல் சரியல்ல என்ற வாதத்தைப் பல இடங்களில் வலியுறுத்தி யிருக்கிறார். தம்முடைய கருத்துக்களுக்கு ஆதாரமாகச் சகல உபநிஷத்துக்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக் காட்டி நூலை விரிவாக எழுதியிருக்கிறார். இதிகாச புராணங்களைப் பற்றிய உட்கருத்துக்களை அறிந்து கொள்ளும் ஆர்வம் உள்ளவர்களுக்கு இந்நூல் அத்தகைய ஆர்வத்தை வளர்ப்பதாயிருக்கும். எழுதியவர்: கே. கோபாலகிருஷ்ணய்யர், ரிடையர்டு போஸ்டுமாஸ்டர், வத்தலகுண்டு, மதுரை ஜில்லா; விலை: ரூ. 1-00.

## கல்யாணப் பேச்சு

வாழ்க்கையிலே நிகழும் பல நிகழ்ச்சிகளையும் அவரவர்கள் தங்கள் தங்கள் மனோதர்மத்துக்கு ஏற்றவாறு பல கோணங்களில் பார்க்கிறார்கள். அதே நிகழ்ச்சியை ஒரு கதாசிரியனின் கண் கொண்டு காணும் பொழுது, அதிசயிக்கத் தக்க ஒரு சிருஷ்டியே உருவாகி விடுகிறது. இந்தச் சாதாரண சம்பவத்தை எப்படி இவ்வளவு அழகாக உருவாக்கி விட்டான் ஆசிரியன் என்று வியப்புறுகிறோம். அதுவும் எழுத்தாளர் கொனஷ்டை பார்க்கும் கோணமே தனி. அதனால் தான் அவர் தமிழ் எழுத்துலகிலே ஒரு தனி இடம் பெற்றிருக்கிறார். அவர் நிகழ்ச்சிகளைப் பார்ப்பதும் ஒரு கொனஷ்டைத் தனமாகவே இருக்கும்.

இலேசாகக் குத்தலும் ஹாஸ்யமும் ததும்பச் சமூகத்தைச் சித்திரிக்கும் அவரது பாணி, படிப்போரின் மனத்திலே புல்லரிப்பை உண்டு பண்ணும்.

'கல்யாணப்பேச்சு' என்னும் இந்தக் கதைத் தொகுதியிலே பதினொன்று கதைகள் இடம் பெற்றிருக்கின்றன. 'கல்யாணப் பேச்சு' என்னும் கதையிலே அவரது கற்பனைச் செறிவையும் 'யார் பயந்தாங்கொள்ளி!' என்னும் கதையிலே கிண்டல் கலந்த அவரது ஹாஸ்யத்தையும் 'வசீகரணம்' என்னும் கதையிலே அவருக்கே இயல்பான கொனஷ்டைத் தன்மையையும் காணலாம். ஈசுவர லீலை, சந்நியாசி போன்ற கதைகளும் அவரது கதை சொல்லும் திறனுக்கு எடுத்துக் காட்டாக விளங்குபவை. மிக மிகச் சாதாரண சம்பவங்களும் கொனஷ்டையின் கைபட்டு மெருகு ஏறியிருப்பதை இக் கதைத் தொகுதியில் காணலாம்.

ஆசிரியர்: 'கொனஷ்டை' பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை—4. விலை ரூ. 2-25.

# காந்தி கதை



(சென்ற வாரத் தொடர்ச்சி)

## வேலை நிறுத்தம்

சென்னையில் காந்திஜி தங்கினராம்
சேலத்து ராஜாஜி வீட்டினிலே.
அன்றுதான் ஹர்த்தால் நடத்திடவே
அண்ணல் முடிவுமே செய்தனராம்.

அண்ணல் குறித்த தேதியிலே
ஹர்த்தால் நடந்தது தேசமெங்கும்.
சின்னஞ் சிறிய ஊர்களிலும்
தீவிரமாக நடந்ததுவாம்.

எவரும் கடையைத் திறக்கவில்லை.
எந்தத் தொழிலும் நடக்கவில்லை.
விவரம் அறிந்ததும் வெள்ளையர்கள்
வியந்து மிரள லாயினராம்.

'ஐயோ ஆபத்து ஆபத்'தென
ஆங்கில சர்க்கார் காந்திஜியின்
கையில் விலங்கு மாட்டினராம்.
கடுஞ்சிறை தன்னில் வைத்தனராம்.

## பஞ்சாப் படுகொலை

வெளிபோல் அஹிம்சை காப்பவராம்
மேலான காந்தி சிறைப்படவே
ஜாலியன் வாலா பாக்கினிலே
ஜனங்கள் கூடிப் பேசினராம்.

ஆணுடன் பெண்டு பிள்ளைகளும்
அலற அலறச் சுட்டுவிட்டான்;
நானூறு பேரைக் கொன்றுவிட்டான்
டயர்எனும் கொடிய பாதகனும்!

இந்தக் கொடுமையைக் கேட்டதுமே
இரத்தம் கொதித்தனர் மக்க
ளெல்லாம்
வெந்தது காந்தியின் உள்ளமுமே.
மிக்க துயரம் அடைந்தனராம்.

## ஒத்துழையாமை இயக்கம்

ஒத்துழை யாமை இயக்கமுமே
உத்தமர் காந்தி துவக்கிடவே
எத்தனை பேர்களோ ஒத்துழைத்து
இயக்கம் வென்றிடச் செய்தனராம்.

பட்டம் பதவி துறந்தனராம்.
பள்ளியை மாணவர் விட்டனராம்.
சட்ட சபைக்கும் போகாமல்
சாந்தமாய்க் காரியம் செய்தனராம்.

அறப்போர் செய்த அண்ணலினை
அன்பே உருவாம் காந்தியினை
சிறையில் அடைத்து வைத்தனராம்.
திரும்ப வெளியில் விட்டனராம்.

அழ. வள்ளியப்பா





## முன்னேற்றத் திட்டம்

சிறையி லிருந்து வந்ததுமே
தேச நலத்தினை எண்ணிஎண்ணி
அருமை யான திட்டமெல்லாம்
ஐயன் காந்தி வகுத்தனராம்.

ஹிந்து முஸ்லிம் ஒன்றுபட்டால்
இந்தியா தேசம் சிறக்குமென்றார்
என்றுமே நாட்டில் தீண்டாமை
இருக்கக் கூடா தென்றுரைத்தார்.

ராட்டையில் நூற்று ஏழைகளின்
வாட்டம் போக்கிட வேண்டுமென்றார்.
நாட்டிலே கள்ளை ஒழித்திடவும்
கூட்டம் போட்டுப் பேசிவந்தார்.

## எளிய வாழ்க்கை

குல்லாய் சட்டை ஏதுமின்றிக்
குட்டைத் துணியுடன் காந்தியுமே
எல்லா இடங்களும் சென்றிடுவார் ;
எளியவ ராக இருந்திடுவார்.

கடலை ஆட்டுப் பாலுடனே
காய்ந்த பழங்களை உண்டு வந்தார்.
உடலில் ஏதும் வியாதிஎன்றால்
ஊசி,மருந்துகள் வேண்டாமென்பார்.

## இந்து முஸ்லிம் சண்டை

என்னதான் காந்தி கூறிவந்தும்
இந்து முஸ்லிம் சண்டையிடக்
கண்டுமே காந்தி வருந்தினராம்.
கலகம் தன்னை நிறுத்திடவே.

உண்ணா விரதம் இருந்துவந்தார்.
ஒன்றோ இரண்டோ நாட்களல்ல ;
எண்ணி இருபத் தொருநாட்கள்!
எங்கும் அமைதி நிலவியதாம்.




## உப்பு சத்தியாக்கிரகம்

'உப்பில் லாத பண்டம் யாவும்
குப்பை சேரும்' என்றனர்.
உரைத்த பேச்சு உண்மை யென்றே
உணர்கி றோமே தினமுமே.
உப்புக் காய்ச்சி எடுப்ப தற்கே
உரிமை எவர்க்கும் இல்லையாம்.
அப்போ துள்ள சட்டம் இதுவாம்
ஆங்கி லேயர் போட்டனர்.

தண்டி என்னும் ஊரை நோக்கித்
தளர்ந்த வயதில் காந்திஜி
எண்ணில் லாத தொண்டர் சூழ
இரவும் பகலும் நடந்தனர்.
தண்டி தன்னில் உப்பெ டுத்துச்
சட்டம் தன்னை மீறினர்.
சாந்த மூர்த்தி யோடு பலரைத்
தடுத்துச் சிறையில் போட்டனர்.



இந்த விதமாய்க் காந்தி மகான்
இயக்கம் பலவும் நடத்தியே
இருந்து வந்தார் சிறையி னுள்ளே.
எத்த னேயோ தடவைகள்!
இந்தி யர்கள் நலத்தி னேயே
எண்ணி எண்ணிச் சிறையிலும்
இரவு பகல் தவமி ருந்தார்.
எவ்வ ளவோ கஷ்டமாம்!

## வெள்ளேயனே வெளியேறு

இரண்டாம் உலகப் போரினிலே—நம்
இந்திய நாட்டையும் சேர்த்ததனே
விரும்ப வில்லேயே காந்திமகான்—உடன்
மிக்க கடுமையாய்த் தாக்கினரே.

வெள்ளேயர் வெற்றி பெற்றிடவே—நம்
வீரர் உயிரைக் கொடுப்பதுவோ?
உள்ளம் கொதித்தனர் இந்தியர்கள்
—எல்லா
ஊரிலும் கூட்டம் போட்டனராம்.
தொல்லேகள் தீரவே வெள்ளேய ராட்சி
தொலேந்திடக் காந்தி விரும்பினராம்.
''வெள்ளேய னேவெளி யேறு''என்றார்
—உடன்
மிரண்டு போயினர் வெள்ளேயர்கள்.

வீறுடன் மக்களும் கூறினரே—உடன்
'வெள்ளேயனே வெளியேறு' என்றே.
தீரராம் காந்தியை முன்போலே—சர்க்கார்
சிறையில் வைத்து மகிழ்ந்தனரே.

## கஸ்தூரிபாய் மரணம்

கணவனே தெய்வம் என்றுதொழும்
—அன்னே
கஸ்தூரி பாயும் காந்தியுடன்
துணேயாய்ச் சிறைக்குச் சென்றனராம்
—அங்கு
துன்பம் மிகவும் அடைந்தனராம்.
சிறையி லிருந்திடும் போதினிலே-பெருந்
தியாகி கஸ்தூரி இறந்தனராம்.
பொறுமை மிகவும் நிறைந்தவராம்-நல்ல
பொன்போல் குணங்கள் மிகுந்தவராம்

சிறையினில் காந்தி இருக்கையிலே—அவர்
திரும்ப விரதம் இருந்தனராம்.
இருபத் தொருநாள் உண்ணுமல்—அவர்
ஈசன் அருளால் பிழைத்தனராம்!

## சுதந்திர உதயம்

'வெள்ளே யனேவெளி யேறு'என்றே
—மக்கள்
வீதிகள் எங்கும் முழக்கினராம்.
பள்ளியில் சென்று படித்துவரும்— சிறு
பாலரும் கூடவே சேர்ந்தனராம்.

குண்டாந் தடிக்கும் அஞ்சவில்லே—என்ன
குண்டுகள் பட்டும் ஓடவில்லே.
'இன்றே எங்களின் நாட்டைவிட்டு-நீங்கள்
ஏறுவீர் கப்பலில்' என்றனராம்.
''வந்த வழியிலே சென்றிடுவோம்—வேறு
வழியில்லே. மக்கள் விழித்துவிட்டார்''
என்ற முடிவுக்கு வந்தனராம்— நம்மை
இருநூறு ஆண்டுகள் ஆண்டவர்கள்.



அருமைத் தலைவர்கள் கைகளிலே-பெரும்
ஆட்சிப் பொறுப்பினை ஒப்படைத்தே
திரும்பியே ஊருக்குச் சென்றனராம்
—இந்தத்
தேசம் மகிழ்ந்திடச் செய்தனராம்.

## அஹிம்சையின் வெற்றி

குண்டு துப்பாக்கி ஏதுமில்லை
கோரமாய் யுத்தம் புரியவில்லை.
அண்ணல் காந்தி காட்டிவந்த
அறவழி தன்னில் வெற்றிபெற்றோம்.

கத்திகள் ஏதும் வீசவில்லை.
காத்திடக் கேடயம் கையிலில்லை.
யுத்த களத்திலும் நிற்கவில்லை.
உத்தமன் வழியில் வெற்றிபெற்றோம்.

சாந்தப் போரில் வெற்றிபெற்றோம்.
சத்தியப் போரில் வெற்றிபெற்றோம்.
காந்தி மகானும் அன்புவழி
காட்டிய தாலே வெற்றிபெற்றோம்.

## வகுப்புக் கலகம்

ஆயுதம் எதுவும் இல்லாமல்
அந்நிய ரிடத்தில் வெற்றிபெற்றும்
ஆயுதங் கொண்டே உள்நாட்டில்
அண்ணனும் தம்பியும் சண்டை
யிட்டார்.

'இந்துவும் நாங்களும் ஒன்றாக
இணங்கி வாழ முடியாது.
சொந்தமாய் நாடு வேண்டு'மெனத்
தொடர்ந்து முஸ்லிம் லீக்உரைக்க

இந்திய நாட்டைப் பிளந்துவிட்டார்.
இரண்டு துண்டாய்ச் செய்துவிட்டார்.
சொந்தமாய் நாடு கிடைத்தபின்னும்
தொல்லைகள் மட்டும் நிற்கவில்லை.

மனிதரை மனிதர் குத்துவதும்
வாளாலே வெட்டிச் சாய்ப்பதுவும்
புனிதன் காந்தி கேட்டதுமே
புழுவாய்த் துடித்து விட்டனராம்.

வங்காளம் பீகார் மாகாணம்
மக்கள் கலகம் அடங்கிடவே
அங்கெலாம் காந்தி நடந்தனராம்
அல்லும் பகலும் அலைந்தனராம்.

ஊரில் கலகம் அடங்கிடவே
உயிரைக் கூட மதியாமல்
தீரமாய் வெறியர் மத்தியிலே
சென்றே அன்பைப் பரப்பினராம்.

தள்ளா வயதில் கோலூன்றித்
தளர்நடை போட்டுக் காந்திமகான்
பொல்லா வெறியர் மத்தியிலே
புகுந்து அன்பால் அடக்கினராம்.

## ஜோதி மறைந்தது!

என்றுமே மாலை வேளைகளில்
ஜெ எங்குதான் காந்தி இருந்திடினும்
ஒன்றாய்க் கூடிப் பிரார்த்தனைகள்
உள்ளம் உருக நடத்திடுவார்.

அன்று மாலை டில்லியிலே
ஐந்து மணிசுமார் வேளையிலே
அன்புச் சுடராம் காந்தியுமே
ஆண்டவ னைத்தொழ வந்தனராம்.

அந்தச் சமயம் காந்திஜியின்
அருகில் ஒருவன் மெல்லவந்தான்.
வந்தவன் ரிவால் வாரெடுத்தே
மாந்தருள் தெய்வம் எனப்போற்றும்

காந்தியை ஐயோ, சுட்டுவிட்டான்!
கல்மனக் காரக் கயவனவன்.
சாந்தம் தவழும் முகத்துடனே
சாய்ந்தனர் 'ஹேராம்' என்று
சொல்லி.

உலகம் போற்றும் உத்தமரை
ஊருக்கு நித்தம் உழைத்தவரை
கலகம் வேண்டாம் என்றவரைக்
கயவன் சுட்டுக் கொன்றுவிட்டான்!

ஐயன் மறைந்தது கேட்டதுமே
அதிர்ச்சி யுற்றனர் மக்களெல்லாம்.
கையைக் கசக்கித் திகைத்தனராம்.
கண்ணீர் விட்டுக் கதறினராம்.

'தேசப் பிதாவை இழந்தோ'மெனச்
சித்தம் கலங்கினர் இந்தியர்கள்.
ஆசிய ஜோதி மறைந்ததென
அகில உலகம் அழுததுவாம்.

## கண்ணன் சொல்லுவான்:

காந்தி கதையைக் கேட்டே — அண்ணா
கண்ணீர் சொரிந்து விட்டேன்.
மாந்த ருக்குள் தெய்வம் — அவர்
வழியைப் போற்றி நடப்பேன்.

'சிறந்த மனிதர் என்றே — எட்டுத்
திசையும் போற்றும் காந்தி
பிறந்தார் நமது நாட்டில்' — என்று
பெருமை நானும் அடைவேன்.

உண்மை அஹிம்சை இரண்டும் — அவர்
உயர்ந்த கொள்கை யாகும்.
கண்ணைப் போல அவற்றை — நானும்
கருதிக் காத்து வருவேன்.

நமது நாட்டு அரசை — இன்று
நாமே ஆளச் செய்தார்.
இமயம் குமரி போலே — புகழ்
என்றும் வாழச் செய்வேன்.



# மக்ளீன்ஸ் *இப்போது* பற்களை முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது!




மகத்தான ஓர் செய்தி! மக்ளீன்ஸ் தயாரிப்பில் இப்போது வியக்கத்தக்கதோர் புதிய பொருள் சேர்க்கப்படுவதால் அதை உபயோகித்து பற்களைச் சுத்தம்செய்யும்பொழுது பற்கள் முன்னைவிட அதிவெண்மையாகவும் சுத்தமாகவும் விளங்குவதுடன் நல்ல ஆரோக்கியத்தைக் குறிக்கின்றது. நீங்களும் மக்ளீன் பற்பசையை உபயோகித்து உங்கள் பற்கள் எவ்வளவு வெண்மையாக விளங்குகின்றன என்று கவனியுங்கள்.

## மக்ளீனால் வெண்மையாக்கப்பட்ட பற்கள்

## ஆரோக்கியமானதுமட்டுமல்லாமல் பற் சிதைவினின்றும் காப்பாற்றப்படுகின்றன

மக்ளீன்ஸ் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யுங்கள். முதலில் குளுமையும் புதுமை மணம் கமழுவதையும் உணர்வீர்கள். பின்பு பற்கள் முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்யப்பட்டிருப்பதை குறிக்கின்றது. உங்களுடைய பற்களின்மேல் படர்ந்திருக்கும் வழுவழுப்பான அசுத்தத்தில் 'லைப்பாயிட்ஸ்' என்று கூறப்படும் அசுத்தம் கலந்திருக்கிறது இந்த 'லைப்பாயிட்ஸ்' முறையே சரிவர அகற்றப்படா விட்டால் அமிலங்கள் பற்களின் இனாமலை அரித்து, பற்கள் சிதைவடைகின்றன. 'லைப்பாயிட்ஸ்'லை அறவே அகற்ற, இதை கரையச் செய்வதுதான் சரியான வழி. மக்ளீன்ஸ் பற்பசை ஒன்றில் மட்டுமே 'லைப்பாயிட்'லை கரைக்கக்கூடிய விசேஷ பொருள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது 'லைப்பாயிட்லை' மிருதுவாக, அபாயமின்றி. சீக்கிரத்தில் கரைத்து அப்புறப்படுத்துகிறது. இதுவே பற் சிதைவினின்றும் பற்களைத் தவிர்ப்பதற்கான சிறந்த மார்க்கம்.

சுத்தமான, வெண்ணிற, ஆரோக்கிய பற்களை அடைய தினந்தோறும் காலையிலும் இரவிலும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யுங்கள்.

**மக்ளீன்ஸ் பற்களை அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது**




MIY 43 TAM




திருடர்கள் நடமாட்டம் அதிகரித்து விட்டது. இது போலீஸ் இலாகா விடும் எச்சரிக்கை இல்லை. நான் குறிப்பிடுவது சினிமா உலகிலே ஏற்பட்டுள்ள பற்பலவிதமான திருடர்களின் நடமாட்டத்தைத்தான்.

'' பக்காத் திருடன் '' வந்தது தெரியாமல் வந்து போனான். ''நீலமலைத் திருடன்'' இப்போது அட்டகாசம் செய்து வருகிறான். ''ஒருநாள் திருட''னும், ''பாக்தாத் திருட''னும் நடமாட்டத்துக்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றனர்.

ஆனால் இந்தத் திருடர்களைக் கண்டு யாருமே பயப்பட வேண்டிய அவசியமில்லை; காரணம், அவர்கள் திருடர்களா யிருந்தாலும், கதாநாயகர்களாயிருப்பதாலோ என்னவோ நல்லவர்களாகவே உள்ளனர்.

கொடியோனான நாகப்பன், குடும்பச் சொத்து முழுவதையும் தான் ஒருவனே அடைய வேண்டும் என்ற தீய ஆசை கொள்கிறான். அதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் தன் அண்ணன் மருதப்பன், அவன் மகன், தன் தமக்கை லட்சுமி, அவளுடைய பெண் ஆக எல்லோரையும் கொல்லத் திட்டமிடுகிறான். இதை அறிந்த அவர்கள், குழந்தைகளுடன் உயிர் தப்ப ஊரை விட்டே ஓடுகின்றனர். நடுவில் ஏற்படும் சந்தர்ப்பங்கள் காரணமாக மூலைக்கு ஒருவராகச் சிதைந்து போகிறது அந்தக் குடும்பம். மருதப்பன் நீலமலைத் திருடனாக மாறுகிறான். காணாமற் போன அவன் மகனும் வாலிபனாக வளர்ந்து, தன் தந்தை என்று தெரியாமலே, மருதப்பனின் அன்புக்குப் பாத்திரமாகிறான். மருதப்பன் அவனை நீலமலைத் திருடனாக்குகிறான்.

மரகதம் என்ற பெயரில் வளர்ந்து வரும் லட்சுமியின் மகளுக்கும் நீலமலைத் திருடனுக்கும், அவர்களுக்குள் ஏற்கெனவே உள்ள உறவு தெரியாமலே காதல் ஏற்படுகிறது. வில்லன் நாகப்பன் அவர்கள் காதலில் குறுக்கிடுகிறான். இறுதியில் உண்மைக் காதலுக்கு வெற்றி ஏற்படுகிறது. சிதறுண்ட குடும்பம் ஒன்று சேருகிறது. இது தான் '' நீலமலைத் திருடன் '' படத்தின் கதை.

கதையிலே நிறைய ஓட்டைகள் இருக்கின்றன. நீராவிப் படகுகளையும், 'பாண்ட்' அணிந்து நாகரிகமாகக் காட்சி அளிக்கும் நாரீமணிகளையும் படத்தில் பார்க்கும்போது இந்த நூற்றாண்டில் நடக்கும் கதையாகவே படுகிறது. அப்படியிருக்க, நாகப்பன் செய்யும் அட்டூழியங்களைக் கண்டிக்கப் போலீஸ் கோஷ்டி ஏன் வரவில்லை? மருதப்பன் தன் தம்பியின் சதித்திட்டத்தைப் போலீஸாரிடம் கூறி அவனை அடக்கியிருக்கலாம்; அதைவிட்டு ஊரைவிட்டே ஓடுவது என்பது இந்தக் காலத்தில் நடக்கக்கூடியது இல்லை. அப்படி ஓடினவன் தன் சொத்துக்களை யெல்லாம் பெறுவதற்கு வழக்கு மன்றத்தை நாடியிருக்கலாம். அதை விடுத்து அவனும் ஒரு கொள்ளைக்காரனாக மாறுவது விந்தையிலும் விந்தையாகத்தான் இருக்கிறது.

வசனம்ஒரு இடத்திலேனும் 'ஓகோ' என்று சொல்லும்படியில்லை. மட்டரகமாக இல்லை என்று வேண்டுமானால் சொல்லலாம்.

மொத்தம் எட்டு பாட்டுக்கள் இருக்கின்றன. 'சத்தியமே லட்சியமாய்' என்று தொடங்கும் மருதகாசி எழுதியுள்ள ஒரு பாட்டைத் தவிர வேறு எதிலும் சிறந்த கருத்து காணப்படவில்லை. 'வெற்றிலை பாக்கு கண்ணாம்பு' என்ற ராமையாதாஸ் இயற்றியுள்ள பாட்டும் மருதகாசியின் '' ஒண்ணுக்கு ரெண்டாச்சு'' என்ற பாட்டும் தமாஷாக இருக்கின்றன. பாட்டுக்கள் எல்லாமே இனிமையாகப் பாடப்பட்டிருக்கின்றன. முக்கியமாக, 'சத்தியமே' என்ற டி. எம். சௌந்திரராஜன் பாடியுள்ள பாட்டு பல முறை கேட்டாலும் தெவிட்டவில்லை. ''ஒண்ணுக்கு ரெண்டாச்சு'' பாட்டு ஏற்கெனவே பிரபலமான ஒரு பாட்டை ஞாபகப்படுத்துகிறது. எனினும் ரஸிக்க முடிகிறது.

நீலமலைத் திருடனாக ரஞ்சன் நடித்திருக்கிறார். நடிக்கிறார் என்று சொல்லுவதைவிட நீலமலைத் திருடனாக வருகிறார் என்று சொல்வதுதான் பொருந்தும். கதாபாத்திரத்துக்குப் பொருத்தமான தோற்றம் இருக்கிறது. பிரமாத சர்க்கஸ் வேலைகளெல்லாம் காட்டிச் சண்டை போடுகிறார். ஆனால் அவர் வாயைத் திறந்து விட்டால் போச்சு. பேச்சில் அழுத்தமோ உணர்ச்சியோ ஜீவனோ ஒன்றுமே இல்லை. காதல் மொழி பேசும் கட்டம், வில்லனிடம் வீராவேசமாகப் பேசும் போது, எங்கும் ஒரே மாதிரி யிருக்கிறது அவர் நடிப்பு, பேச்சு யாவும். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் இன்னும் 'ரிஸ்ய சிருங்கர்' ரஞ்சனாகவேதான் அவர் காட்சி யளிக்கிறார். நாட்டுப் புறத்தானாக வேஷம் தாங்கி வந்து அவர் நன்றாக ஆடியிருக்கிறார்.

வில்லன் நாகப்பனாக வீரப்பா நன்றாகவே நடித்திருக்கிறார். என்றாலும், கடகட என்று பேய் போல் அடிக்கடி சிரிப்பதையும், அடித்தொண்டையிலிருந்து கத்துவதையும் அவர் பெரிதும் குறைத்துக் கொள்ள வேண்டும். அவர் வில்லனாக வந்து இறுதியில் கதாநாயகன் கத்திக்குப் பலியாவது தான் வழக்கம்; இந்தப் படத்தில் ஒரு மாறுதல் வில்லன் வீரப்பா தன் தவறை உணர்ந்து மன்னிப்புப் பெற்று மடிந்து விடுகிறார்.

பாலய்யாவுக்கு இந்தப் படத்தில் அதிகமாக வேலை இல்லை. எம்.கே. ராதாவும், சகாதேவனும் முறையே தங்கப்பனாகவும், மருதப்பனாகவும் உணர்ச்சியுடன் நடித்திருக்கிறார்கள்.

**கா**தலி மரகதமாக அஞ்சலி தேவி காதல் கட்டங்களைப் போலவே, மற்றக் கட்டங்களிலும் சிறப்பாக நடித்திருக்கிறார். லட்சுமி தன் சொந்தத் தாய் என்று தெரிந்து கொள்ளும் கட்டத்தில் இவர் நடிப்பு ரொம்பப் பிரமாதம். கண்ணாம்பா, தான் ஒரு சிறந்த நடிகை என்பதை இந்தப் படத்திலும் நிரூபித்திருக்கிறார். வில்லனிடம் வாதாடும் கட்டத்தில் இவர் நடிப்பின் திறன் நன்கு வெளிப்படுகிறது.

இனிமேல் தங்கவேலு ஈ. வி. சரோஜா ஜோடிக்குத் திரை உலகில் நல்ல கிராக்கி ஏற்பட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நீலமலைத் திருடனில் இந்த இருவரும் முந்திய படங்களை விடச் சிறப்பாக ஆடிப்பாடி, நடித்துள்ளனர்.

ஏற்கெனவே சில படங்களில் கேலிக்கூத்து அடித்தது போல் இல்லாமல் கதாநாயகன் உண்மையாகவே புலியுடனும் சிங்கத்துடனும் சண்டை போடும் காட்சியை, மயிர்க் கூச்செறியும் முறையில் படமாக்கி யிருக்கிறார்கள்; பல ரமணீயமான இயற்கைக் காட்சிகளை இப்படத்தில் காண முடிகிறது. டைகர் என்ற நாயும் ஜூக்பால் என்ற குதிரையும் செய்யும் வேலைகள் நன்றாக இருக்கின்றன. ஆனால் ஒன்றிரண்டு இடங்கள் தவிர, மற்றப்படி நாயின் செய்கைகளைப் பிரமாதம் என்று கூற முடியாது. ''எங்கள் வீட்டு மகாலட்சுமி''யில் வந்த நாயின் செய்கைகளைப் பார்க்காதவர்கள் வேண்டுமானால், இப்படத்தில் வரும் டைகரைப் பாராட்டக் கூடும்.—ஜாம்பவான்



# நேசம் மறக்கவில்லை!

எஸ். விஜயராகவன்

இரவு பத்து மணி இருக்கும்.

ஊரே அடங்கிக் கொண்டிருந்த அவ்வேளையில் 'டீ'க்காக உடை அணிந்துகொண்டு கையில் குடையுடன் வெளிக் கிளம்பினான் நடராஜன். அவன் பிழைப்பு அப்படி. மின்சார விநியோக இலாகாவில் 'என்ஜினீயர்' வேலை என்றால் இரவென்றும் பகலென்றும் பார்க்க முடியுமா? நடராஜன் தனது காரியாலயத்துக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருந்தான். இரவு பதினோரு மணி முதல், காலை ஆறுமணி வரை அவனுக்கு இரவு 'டியூட்டி'!

வீட்டை விட்டுத் தெருவில் இறங்கியதுமே, வானம் முழுவதும் மேகங்கள் திரண்டு கவிந்திருப்பதைக் காண்கையில், நடராஜனின் அடி மனம் 'சூள்' கொட்டியது. காற்றும் மழையும் வந்து விட்டால் அங்கங்கே நகரத்தில் மின்விளக்குகள் அணைந்து விடும்; மின்சார ஓட்டம் தடைப்பட்டு விட்டதாகப் புகார்ச் செய்திகள் வந்த வண்ணம் இருக்கும். அவற்றையெல்லாம் கவனிப்பது எவ்வளவு சிரமம்? எனவே, சீக்கிரமே 'பவர்ஹவு'ஸை அடைய வேண்டுமென்ற ஆவல் உந்த, வேகமாகச் சாலையை அடைந்த அவன், ஒருவேளை கடைசிப் பஸ்ஸையாவது பிடிக்கலாமே என்ற எண்ணத்தில் அங்கிருந்த பஸ் ஸ்டாப்பில் 'க்யூ' வரிசையில் நின்றான். ஆனால், அவனுக்கு முன்னால் ஐந்தாறு பேர்கள்!

ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் கடைசிப் பஸ்ஸும் வந்தது. என்ன துரதிருஷ்டம்? அதில் முதல் இருவர்களுக்கு மட்டுமே இடம் இருந்தது. இருப்பினும் மூன்றும் மனிதர் விடாப்பிடியாகத் தாமும் போக வேண்டுமென்று கண்டக்டரிடம் வாதாடிக் கொண்டிருக்கையில், ''அத்தான்...!'' என்று ஒரு பெண் குரல் எங்கிருந்தோ அசரீரி போல் எழுந்தது.

அழைத்தது யார் என்று தெரியாவிடினும் நடராஜனுக்குப் பழக்கப்பட்ட குரலாக ஒலித்தது அது. எப்போதோ கேட்டுக் கேட்டு அநுபவித்த குரல்; தேன் குரல்! ஆவலுடன் நடராஜன் வெளியே நின்றபடியே பஸ்ஸுக்குள் பார்வையை ஓட்டினான். அங்கே ஜன்னல் அருகே அமர்ந்திருந்த ஒரு அழகிய பெண்மணி மறுபடியும், ''அத்தான்!'' என்று குழைந்தவாறு நடராஜனைப் பார்த்துப் புன்னகை பூத்தாள். அவள் கண்களிலே அலாதியான ஒரு புது ஒளி, அன்பு ஒளி!

''கனகம்! நீயா...?'' என்று வியப்புடன் ஜன்னலருகே விரைந்தான் நடராஜன்.

''ஆமாம்.... அத்தான்! சௌக்கியமாக இருக்கிறீர்களா...? பார்த்து எத்தனை நாட்களாகி விட்டன?'' அன்பைக் குழைத்துக் கேள்விகளாக வீசினாள் கனகம்.

''சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல், கனகம்? ஏதோ இருக்கிறேன்...ஆமாம்...நீ எப்போது சென்னைக்கு வந்தாய்...?''

கனகம் ஏதோ பதில் சொல்லத் தன் செவ்விதழ்களைக் கூட்டினாள். அதற்குள், 'ரைட்!' கொடுத்து விட்டான் கண்டக்டர்.

பஸ் நகர்ந்துவிட்டது. சிறிது தூரம் கூடவே ஓடிய நடராஜன், ''பவர் ஹவுஸில் எனக்கு என்ஜினீயர் வேலை; ஸைடோஜி சந்து ஆறும் நம்பர் வீடு'' என்று கூவினான் உரத்த குரலில்.

அது கனகத்தின் காதுகளில் விழுந்ததோ இல்லையோ, பஸ் பறந்து விட்டது; அத்துடன் என்றோ பிரிந்து, இன்று எதேச்சையாகக் காணக்கிடைத்த கனகமும் சென்று விட்டாள்!

நடராஜன் மேலே நடந்தான்.

அப்போது அவன் தன்னை மறந்து மெய் சிலிர்த்துப் போனதில் அதிசயமில்லை. ஆறு வருஷங்களுக்கு முன் நடந்த அந்த வாழ்க்கை நாடகங்கள் காலத்திரைக்குப் பின் கனவு போல் ஆகிவிட்டாலும் இப்போது கனகத்தை மீண்டும் பார்க்கையில் நீறு பூத்த நெருப்பை ஊதிவிட்ட மாதிரியல்லவா கனிந்து பளிச்சிட்டுக் கொண்டிருக்கிறது?

★

அச்சமயம் நடராஜனுக்கு வயசு இருபத்திநாலுதான். சென்னைக் காலேஜில் 'என்ஜினீயரிங்' பட்டம் பெற்றுக் கொண்டு சொந்த ஊர் திரும்பிய நடராஜன் எதிர்வீட்டிலே வாளிப்பாக வளர்ந்து நின்ற கனகத்தைக் காண நேர்ந்தது அவன் தவறல்ல. அப்போது அவள்தான் எவ்வளவு அழகாக இருந்தாள்! மாலைக் கதிரொளி போன்ற பொன் மேனி; மயக்கும் கரு விழிகள், நெஞ்சைக் கிறங்க வைக்கும் நிமிர்ந்த மார்பகங்கள்; துடியிடையில் பின்னல் நெளிந்தாட, மான் குட்டிபோல் துள்ளி விளையாடிய வண்ணம் எவ்வளவு தடவை அவள் நடராஜனின் வீட்டுக்கு ஓடி வருவாள்!

இவர்களுடைய இளமையின் இன்ப உறவாடலிலே காதல் பூ பூத்தது; பிறகு அது மலர்ந்து மணம் வீசவும் ஆரம்பித்தது. ஆனால் அது ஏனோ உலகுக்குப் பொறுக்கவில்லை; பிடிக்கவுமில்லை. உலகத்தைச் சொல்வானேன்? நடராஜனின் தந்தையே அதை அநுமதிக்கவில்லையே!

காரணம், காசு, காசு, காசுதான்! கனகம் ஒரு ஏழைப்பெண்; அந்தஸ்தற்ற ஒரு ஆரம்பப் பாடசாலை ஆசிரியரின் மகள். இவனுக்கும், ஊரிலேயே செல்வரான பண்ணையாரின் மகன் நடராஜனுக்கும் ஏணி வைத்தாலும் எப்படி உறவு எட்டும்! வழக்கமான, ஆனால் அர்த்தமற்ற இந்தக் காரணத்துக்காகத் தன் காதலைத் தீய்க்க முயன்ற தந்தையின் அநீதியை எதிர்த்து எவ்வளவோ போராடியும் கூடத் தோல்வியே கண்ட நடராஜனுக்கு ஆத்திரம் எரிமலையாய்ப் பொங்கியது.

யோசித்து, யோசித்து மூளையைக் குட்டையாய்க் குழப்பிக் கொண்ட நடராஜன் ஆத்திரத்தின் அடிப்படையிலே திடீரென்று ஒரு அவசர முடிவுக்கு வந்தான். அதைச் செயலாக்கும் எண்ணத்துடன் அன்று மாலையே கனகத்தைத் தனிமையிலும் சந்தித்தான்.

''கனகம்! அப்பாவே இடையூறாக இருக்கிறார் என்பதற்காக நான் விட்டுவிடப் போவதில்லை; நம் பிரச்னைக்கு நான் ஒரு வழி கண்டுபிடித்து விட்டேன்!'' என்றான் உறுதியுடன்.

'' நானும் தான்!'' என்றாள் கனகம், சோர்ந்து தொங்கிய முகத்துடன்.

# இருமலின் மூலகாரணத்தை அகற்றுங்கள்






# ஸிரோலின் சாப்பிடுங்கள்

குடும்பத்தினர் யாவருக்கும் ஏற்ற ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு இருமலுக்குக் காரணமான தீங்கிழைக்கும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது.

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
வோல்டாஸ் லிமிடெட்

''உன் வழி என்ன, கனகம், சொல்லேன்!'' ஆவலுடன் அவள் கண்களுக்குள் உற்று நோக்கினான் நடராஜன்.

''இனிமேல் நாம் ஒருவரையொருவர் இப்படிச் சந்திக்கக் கூடாது. நம் அதிருஷ்டம் அவ்வளவு தான் என்று தோல்வியைத் தைரியமாக ஏற்க வேண்டும்! கண் நிறைந்த அழகும், கை நிறைந்த செல்வமும், அறிவு துளும்பும் உள்ளமும் உடைய உங்களுக்கு, படிப்பும் பணமும் உள்ள ஒரு பேரழகி மனைவியாக வர வேண்டுமென்று தங்கள் தகப்பனார் விரும்புவது நியாயம் தானே? நான் கொடுத்து வைக்காதவள்; அதிக ஆசைப்பட்டு விட்டேன்...!'' கனகத்தின் வார்த்தைகள் விசும்பலாக வெடித்தன.

''ச்சே...அசடு! என்னை யார் என்று நினைத்து விட்டாய்? இதோ பார், கனகம்! நான் முடிவு செய்து விட்டேன்; எனக்குப் படிப்பும் இருக்கிறது, இளமையும் இருக்கிறது. நாமிருவரும் கூழோ கஞ்சியோ குடித்து வயிறு வளர்க்கும் அளவுக்கு என்னால் சம்பாதிக்க முடியும்! இன்றிரவே ரகசியமாகக் கிளம்பு; ஒருவருக்கும் சொல்லாமல் பம்பாய்க்கோ கல்கத்தாவுக்கோ ஓடி—''

''நான் கோழை அல்ல. ஆனாலும் நான் வர மாட்டேன்!''

நடராஜனுக்குக் கோபத்தினால் மூக்கின் நுனியில் சிவந்தது. ''சரி...சரி,...உன் நியாயத்தோடு நீயும் குட்டிச்சுவராகப் போ!'' என்று வார்த்தைகளை உமிழ்ந்துவிட்டு, 'விர்' ரென்று வீடு திரும்பி விட்டான் நடராஜன்.

பிறகு என்ன? தன் முயற்சியில் தோல்வியைக் கண்டுவிட்ட நடராஜனுக்கு, அவ்வூரில் இருக்கவே பிடிக்கவில்லை. மறுநாளே சென்னைக்குக் கிளம்பி விட்டான் தனியாக. அங்கே மின்சார இலாகாவில் உத்தியோகம் கிடைத்தது. இடையில் வேறு கல்யாணத்துக்காகத் தந்தையின் நிர்ப்பந்தம் அதிகமாயிற்று. இறுதியில் செங்கமலம் என்ற பெண் நடராஜனின் கையைப் பிடித்தாள். ஆனால் அவள் பேரில் குற்றமென்ன? இன்று நடராஜனை இன்பமாக வாழ வைத்துத் தானும் வாழ்ந்து, இரு செல்வங்களுக்குத் தாயாகி விட்ட பெண் தெய்வம் அவள்!

இருப்பினும், இப்போது ஆறு வருஷங்களுக்குப் பிறகு கனகத்தைத் திடீரென்று பார்க்கையில் நடராஜனின் வாழ்க்கைக்கே கருவூலமான அக்கேள்வி எழத்தான் செய்தது. அன்று மட்டும் கனகம் ஒரு வார்த்தை 'சரி' என்று கூறி அவனுடன் புறப்பட்டிருந்தால்...?

கெடுத்து விட்டாளே பேதை!



சிந்தித்துக் கொண்டே நடக்கையில் தூரம் சென்றதே தெரியவில்லை. 'பவர் ஹவுஸ்' விளக்கின் ஒளி அவன் கண்களைக் கூசுகையில் தான், ஆபீசை அடைந்து விட்ட உணர்வு வந்தது நடராஜனுக்கு. வேகமாக உள்ளே நுழைந்ததும் கோட்டைக் கழற்றி நாற்காலியில் மாட்டிவிட்டு மேசை அறையில் உட்கார்ந்தான்.

பிறகு ஆபீஸ் அலுவல் அவனை ஆட்கொண்டது. நகரின் பல பகுதிகளில் பலத்த புயலுடன் மழை பெய்ததின் காரணமாக மின்சாரம் தடைப்பட்டு விட்ட தகவல்கள் வந்த வண்ணம் இருந்தன. அங்கெல்லாம் ஆட்களை அனுப்பி ஆவன செய்யுமாறு உத்தரவிட்ட நடராஜன், சற்றுச் சிரமசாந்தியாகக் கால்களை நீட்டிக் கொண்டு நாற்காலியில் சாய்ந்தான்.

''ஸார், கேட்டீர்களா அநியாயத்தை?'' என்று

அலறிக் கொண்டு உள்ளே வந்தார் அவருடைய உதவியாளர் பாலு.

“என்ன ஸார் நேர்ந்து விட்டது?”

“நான் வேலைக்கு வரும் வழியில் கேள்விப் பட்டேன். மவுண்ட் ரோடு ‘ஹானஸ்டி ஜுவெல்லரி’ என்ற நகைக்கடையைச் சாத்தும் சமயத்தில், யாரோ இரு திருடர்கள் கையில் கத்தியுடன் உள்ளே புகுந்து, முதலாளியைத் தாக்கி வீழ்த்தி விட்டு, நகைகளையும் எடுத்துக் கொண்டு ஓடி விட்டார்களாம்! அவர்களைப் பிடிப்பதற்காக மவுண்ட்ரோடு முதல் சென்ட்ரல் வரை எங்கும் போலீஸ் காவல் வியூகமிட்டிருக்கிறது!” என்று அவன் நண்பன் கூறிவிட்டுப் போய் விட்டான்.

பாலு போனதும், நடராஜன் மறுபடியும் நிம்மதியாக நாற்காலியில் சாய்ந்தான். ஆனால் மறுவிநாடியே டெலிபோன் மணி கண கணத்தது. ரிஸீவரைக் கையில் எடுத்து, “மின்சார என்ஜினீயர் நடராஜன் பேசுகிறேன்” என்றான்.

“அத்தான், நான்தான் கனகம்!” என்று பதில் வந்தது.

“கனகமா? இதென்ன அர்த்த ராத்திரியில்...?” என்றான்.

“அத்தான், ஒரு பெரிய ஆபத்தில் இருக்கிறேன்; உங்கள் உதவி வேணும்!”

“என்ன உதவி கனகம்!”

“என் கணவருக்குத் திருச்சியில் வேலை போய் விட்டதால், சென்னையிலுள்ள அவருடைய பால்ய நண்பர்கள் அழைத்ததின் பேரில் நாங்கள் சென்ற வாரம்தான் இங்கு வந்தோம். ஆனால் அந்த நண்பர்கள் உண்மையில் ஆதி நாட்களில் இருந்தது போல் அவ்வளவு நல்லவர்களாக இல்லை. மிகவும் உரு மாறி ஏதோ சதிச செயல்களில் ஈடுபடுபவர்கள் என்றும், அதற்கு உதவிக்காகத்தான் இவரை நம்பகமாக வரவழைத்திருக்கிறார்கள் என்றும் இப்போதுதான் தெரிகிறது. இன்றிரவு விஷயத்தைச் சொல்லாமல் இவரை ஏமாற்றி மவுண்ட் ரோட்டுக்கு அழைத்துச் சென்று, அங்கே தெருவில் கண்காணிப்புக்காக நிறுத்தி விட்டு, அந்த ‘நண்பர்கள்’ நகைக் கடையில் புகுந்திருக்கிறார்கள். உடனே என் கணவருக்கு நிலைமை புரிந்து விடவே, பயந்து போய் வீட்டுக்கு ஓடி வந்து விட்டார்! கேளுங்கள்: உண்மையில் இவர் இவ்வழக்கில் சம்பந்தப்படவில்லையாயினும், இப்போது நாங்கள் இருப்பது அக்கயவர்களின் வீட்டில்தானே? திருடிய நண்பர்களும் கூட இங்கே சீக்கிரமே திரும்பக் கூடும். இந்த நிலையில் போலீஸார் எங்களை அங்கே கண்டால் சந்தேகிக்க மாட்டார்களா? அதனால் கொடுந் துயரங்கள் விளையுமே!”



“நிச்சயமாக விளையும், கனகம்! உடனே அங்கிருந்து நீங்கள் கிளம்பி விடுங்கள்; மறுநாளே ஊருக்கும் போய்விடுங்கள்!”

“ஆனால் எப்படி இந்த இடத்தை விட்டுக் கிளம்புவது? சென்டிரல் முதல் மவுண்டு ரோடு வரையில் எங்கும் ஒரே போலீஸ் மயம்! அவர்களை மீறி ஒருவரும் செல்ல முடியாது. ஆயிரம் கேள்விகள் கேட்பார்கள். நாங்கள் ஊருக்குப் புதுசு என்றால் நிச்சயம் அவர்கள் சந்தேகிப்பார்கள்!”

“அதற்காக...?”

“நீங்கள் மின்சார என்ஜினீயர் என்று சொன்னீர்கள் அல்லவா? சரியாகப் பன்னிரண்டு மணிக்கு இந்தப் பகுதியில் உள்ள விளக்குகளை மட்டும் ஐந்து நிமிஷத்துக்கு அணைத்து விடுங்கள். அந்த இருட்டில் நாங்கள் எப்படியாவது இங்கிருந்து சென்று விடுகிறோம்!”



“என்னது? அது குற்றமாகுமே? எனக்குக் கடமை, பொறுப்பு ஒன்றுமே இல்லையா? அவற்றிலிருந்து நான் வழுவலாமா?”

“அத்தான்! எனக்காக — என் மீதுள்ள உங்கள் அன்புக்காக — இதைச் செய்ய மாட்டீர்களா? உங்கள் நெஞ்சிலே என் மீது பிறந்திருந்த நேசம் மறந்து விட்டதா? நீங்கள் இதைச் செய்து தானாக வேண்டும்; நம் அன்பின் மீது ஆணை!”

“கனகம்!”

“பேச நேரமில்லை; உங்களையே நம்பியிருக்கிறேன்!” ‘ணங்’ என்று மறு புறத்திலே ஓசை: நடராஜன் பதில்

பேசுவதற்குள் கனகம் டெலிபோனைக் கீழே வைத்து விட்டாள்!

திகைத்துச் சிலையாகிவிட்ட நடராஜனின் கையிலிருந்த டெலிபோனும் மேசைக்கு நழுவியது. நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தான். இரவு மணி சரியாகப் பதினொன்றே முக்கால்! இன்னும் பதினைந்து நிமிஷங்களுக்குள் அவன் ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும்! இழந்து விட்ட காதலுக்குப் பாத்திரமாகிய கனகத்துக்கு உதவுவதற்காகக் கடமை தவறி அவன் விளக்குகளை அணைக்கலாமா, கூடாதா?

நடராஜனுக்கு உடல் முழுதும் 'குப்' என்று வியர்த்தது. மனத்தில் எழுந்த போராட்டத்தைத் தாங்க முடியாமல் மண்டையெல்லாம் வலி. எவ் வழியும் செல்ல முடியாத இக்கட்டான நிலையில் நின்ற நடராஜன் பார்வையை உயர்த்தினான். பன்னிரண்டு அடிக்க இன்னும் இரண்டே நிமிஷங்கள்தாம்!

நிசப்தமான அறையில் 'டக்...டக்' என்ற கடிகாரத் துடிப்பு மட்டும் இடைவிடாது ஒலித்துக் கொண்டிருந்தது. அதன் ஒவ்வொரு துடிப்பும் அவனை அந்தப் பிரச்னையின் முடிவை நோக்கி வேகமாக விரட்டிக் கொண்டிருந்தது. மெல்ல எழுந்து 'ஸ்விட்சு போர்டு'க்கு முன்னே வந்து நின்றான் நடராஜன். அங்கே மவுண்ட்ரோடு பகுதிக்காகத் தனியாக ஒரு விசைப்பித்தான் இருந்தது. அதைச் சற்று அழுத்தினால் போதும்; அங்கே விளக்குகள் யாவும் அணைந்து விடும்!

விசைப்பித்தானை அழுத்தும் முயற்சியில் பல தடவைகள் அவன் வலக்கை பித்தானைத் தொட்டது; ஆயினும் மறுகணமே அவனை யறியாமல் அனல் தீண்டியது போல் எப்படியோ கையை இழுத்துக் கொண்டான். மீண்டும் கை நீளும், பின் இழுக்கும். இப்படியே இருக்கையில் கடிகாரம் 'டங்... டங்...' என்று பன்னிரண்டும் அடிக்க ஆரம்பித்து விட்டது!

நடராஜன் கையை எழுப்பினான். ஆனால் அது எழும்பியதா...? இல்லை. எங்கிருந்தோ திடீரென்று வந்த கடமை உணர்ச்சி, பிரயாசையுடன் எழும்பிய கையை உறுதியாகத் தடுத்து நிறுத்திவிட்டது. மணி பன்னிரண்டு அடித்து ஓய்ந்தும்கூட அவன் பித்தானை அழுத்தவில்லை!

ஆனால் மனப் போராட்டத்தின் எல்லையில் நின்ற அவனுக்குத் தலை ராட்டினம்போல் சுழன்றது; கண்கள் ஒருமிக்க இருண்டன; மார்பைப் பிடித்துக் கொண்ட அவன் உடல் தள்ளாடக் கீழே சாய்ந்து விட்டான்!

★

நினைவு திரும்பி நடராஜன் கண்களைத் திறக்கையில், தன் வீட்டுக் கட்டிலிலே படுத்திருப்பதை உணர்ந்து வியந்தான். காலை வெய்யில் கூடம் வரை எட்டியிருந்தது. அவன் எப்போது, எப்படி வீட்டுக்கு வந்தான்?

''என்னங்க...? என்ன செய்யுது? வேலையிலே இருக்கச்சே மயங்கி விழுந்துட்டீங்களாமே?'' என்றாள், எதிரே துயரே வடிவமாக நின்ற மனைவி செங்கமலம்.

''ஒன்னுமில்லே செங்கமலம்; இப்போ எல்லாம் சௌகரியமா இருக்கு!''

''என்னவோ, அந்தச் சித்தி விநாயகர்தான் என் வயித்திலே பாலை வார்த்திருக்காரு. ராத்திரி உங்க சீப் என்ஜினீயர் ஐயாவே காரிலே கொண்டாந்து விட்டாங்க. டாக்டரும் பார்த்துவிட்டு, பயமில்லேன்னாரு; ஏங்க...கொஞ்சம் காப்பி தரட்டுமா?''

''கொண்டு வா, செங்கமலம்!''

மனைவி உள்ளே போனதும், நடராஜனின் மனசு மீண்டும் சஞ்சலத்தில் ஆழ்ந்தது. 'பாவம், கனகம் என்ன ஆனாளோ? அவளுக்கு உதவி செய்யாமல் ஏமாற்றி விட்டேனே?' என்று அலமந்து போனான் அவன்.

அதே சமயம் வாசற் கதவு 'கிரீச்'சிட்டது. நடராஜன் பார்வையைத் திருப்பினான். என்ன அதிசயம்! எதிரே கனகம், கூடவே ஒரு ஆண் துணையோடு நின்று கொண்டிருந்தாள்.

''அத்தான், இவங்கதான் என் வீட்டுக்காரர். இப்பொழுதே எட்டு மணிப் பாசஞ்சரிலே நல்லபடியாக நாங்கள் ஊருக்குப் போகிறோம். போகுமுன் உங்களைப் பார்க்க வேணும்னு வந்திருக்கோம்!'' என்றாள் கனகம் குதூகலத்துடன்.

''ஆமாம், மிஸ்டர் நடராஜன்! உங்களைப் பற்றிக் கனகம் ரொம்பவும் சொல்லியிருக்கிறாள். நேற்றிரவு நீங்கள் செய்த உதவியை நாங்கள் என்றும் மறக்க முடியாது! அதனால் தான் அவகாசமில்லாத நிலையிலும் ஓடோடி வந்தோம்!'' என்றார் கனகத்தின் கணவர்.

''நான் உதவி செய்தேனா?'' குரல் தடுமாறிய நடராஜனுக்கு விஷயம் புரியவில்லை.

''நீங்கள் விளக்குகளை ஐந்துக்குப் பத்து நிமிஷங்களாகவே அணைக்கவில்லையா? அதைத்தான் சொல்கிறோம். அப்போது நாங்கள் அவ்விட்டை விட்டுத் தப்பியும் வந்துவிட்டோம். இன்று காலை அந்தக் கள்ள 'நண்பர்'களும் பிடிபட்டு விட்டார்கள்; நல்ல வேளையாக அவர்கள் எங்கள் வீட்டுக்காரரை வீணுக்கு இழுத்து விடவில்லை!''

''அது சரி, கனகம்! ஆனால் விளக்குகளை நான் அணைக்கவே இல்லையே,...!'' என்றான் நடராஜன் குரல் தடுமாற.

''நீங்கள் ஆபீசுக்குப் பயந்து கொண்டு பொய் சொன்னால் நான் நம்புவேனா? எனக்குத் தெரியாதா அத்தான், உங்களுக்கு என் மீதிருந்த நேசம் மறக்கவில்லை என்று...?'' முத்து உதிரச் சிரித்தாள் கனகம்.

இதென்ன கூத்து? செய்யாத உதவிக்கு நன்றியை எப்படி ஏற்பது?

ஆனால் கனகம் மட்டும், அவன்மீதுள்ள நேசம் காரணமாக அதை நம்பாமலேயே தான் விடைபெற்றுச் சென்றாள்.

அந்த அன்பு உருவம் கண்ணுக்கு மறையும் வரையில் உற்று நோக்கிய நடராஜனின் கண்களில் நீர் துளித்தது. அவன் அணைக்காமலேயே விளக்குகள் அணைந்ததின் மர்ம ரகசியம் அவனுக்குப் புரியவில்லை. நியாயம் இருக்கும் இடத்தில், தெய்வசகாயம்தானே கிடைத்திருக்கிறது. தான் செய்யாத உதவியைக் கனகத்துக்கு எப்படியோ அளித்து, அவனைக் காப்பாற்றிய விந்தை, அவனுடைய இஷ்ட தெய்வமாகிய சித்திவிநாயகரின் அருங் கருணைதான் என்ற முடிவுக்கு வந்தான் நடராஜன்.


பற்கள்
சொத்தை
யாவதை
தடுக்க
ஆக்டிவ்
க்ளோரோபில்
சேர்ந்த அற்புத
மான பச்சை
'கோலினஸ்'
டூத்பேஸ்ட்
★ பற்களை சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது
★ பற்களைச் சுத்தமாயும் பிரகாசத்துடனும் வைக்கிறது
★ வாய் நாற்றத்தை அகற்றுகிறது
★ ஈறுகளுக்குப் பலமளிக்கிறது
'கோலினஸ்'
நுரை
தனிச் சிறப்பு வாய்ந்தது
ஜெப்ரி மானேர்ஸ் அண்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட்
ரிஜிஸ்தர் செய்து கொண்டு உபயோகிப்பவர்கள்



# குறைவிலே நிறைவு

பூர்ணம் விசுவநாதன்

"டும், டும், டும்...."

கொட்டு முழக்கத்துக்கும், வேத கோஷத்துக்கும் நடுவே என் 'சின்னக் குட்டி' பத்மஜாவின் மென் கழுத்தில் மாங்கலியம் ஏறியது. 'குப்' என்று கண்ணீர்க் கவரொன்று எழும்பி வந்து என் பார்வையை மறைத்தது. மிதமிஞ்சிய ஆனந்தத்தின் விளைவால் தோன்றிய அந்தக் கண்ணீர்ப் பெருக்கை யாரும் பார்ப்பதற்கு முன்பே சமாளித்துக் கொண்டேன். ஒருகணத்துக்குத்தான் எனக்கு இந்த நிலைமை நீடித்திருக்க வேண்டும். ஆனால் ஒரு கணத்துக்குள் இருபது வருஷ காலத்து நிகழ்ச்சிகள் மோதியடித்துக் கொண்டு வந்து என்னுடைய மனத்தை நிரப்பி விட்டன.

★

**ப**த்மஜா என் இரண்டாவது பெண். தாயைக் குஷிப்படுத்திக் கொண்டு பிறந்தவள் அவள். அவள் மூலம் கசிலாவுக்குப் பிரசவ வேதனையே ஏற்படவில்லை. முதல் பெண் உமா பிறந்தபோது கசிலா மணிக் கணக்காகப்பட்ட சிரமத்தை இப்போது நினைத்தாலும் நடுங்குகிறது. அந்தக் கஷ்டத்துக்கு ஈடு செய்வதுபோல் பத்மஜா படுத்த நிமிஷத்தில் பிறந்தாள். உமா பிறந்தவுடன் கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்துக்குக் குரலையே வெளியே காட்டாமல் வம்பு செய்து விட்டாள்: நர்ஸ் நெடுநேரம் 'சொடேர் சொடேர்' என்று அடித்துஉமாவை அழப் பண்ண முயன்றதும், 'ஐயோ! என் செல்வப் பெண்ணை ஒரு நர்ஸ் இப்படி அடிக்கிறாளே' என்ற வேதனையுடன் நான் அழுததும், என்னை நெடுநேரம் அழ விட்டுப் பிறகு உமா கதறியதும்—என்றைக்கும் பசுமை மங்காத நினைவுகள். ஆனால் பத்மஜா பிறந்த மறு நிமிஷமே தன் குரலின் வன்மையைக் காட்டி விட்டாள். 'ஓ, இந்த இடத்தில் அழ வேண்டும் போலிருக்கிறதே' என்று நினைவுப் படுத்திக் கொண்டு ஒரு நடிகையின் பொறுப்புடன் அவள் அழுவது மாதிரி தோன்றியது. அருமையான பெண்!

நர்ஸ் அவளைக் கொண்டு வந்து காட்டினாள். சரியான 'கட்டுக்குட்டு'! உடம்பின் ஒவ்வோர் அணுவிலும் அழுத்தம் பொதிந்திருந்தது. தலை நிறையக் கரு மயிர். இருட்டை வெறுப்பென்று பழித்துக் காட்டும் கருவிழிகள். புது ரோஜா மலர் போன்ற வாய். அப்புறம் மூக்கு...? இங்கே என் கவிதைக் கற்பனை நின்று போய், நிஜக் கற்பனை துவங்கியது. மூக்கு எங்கே? அந்த ஒரு குறை என் நெஞ்சில் பெரும் பள்ளமாகத் தோண்டி விட்டது.

கசிலா இரண்டு வாரம் கழித்து, "எப்படியிருக்கிறாள் நம்ம சின்னக் குட்டி?" என்றாள்.

''அருமையான பெண்தான்; ஆனால் அந்த மூக்கு...'' என்று இழுத்தேன்.

சுசீலா பக்கென்று சிரித்தாள். ''சரியாய்ப் போயிற்று. பிறந்தவுடனே மூக்கைப் பற்றிக் கவலைப்படுகிறீர்களே! இன்னும் எவ்வளவு மாறுதல்களைக் காணப் போகிறோம்! ஒரே மாதத்தில் மூக்கு வளர்ந்து விடாதா?''

எனக்கு ஒரு மாதிரி குடமிளகாய் மூக்கு; சுசீலாவுக்கும் பெரிய மூக்குத்தான். இரண்டு மூக்குகளுக்கிடையேயுள்ள வித்தியாசத்தின் அளவுக்குக்கூடப் பத்மஜாவின் மூக்கு பெரிதாக இல்லாதது எனக்கு ஏமாற்றமாகவும் வியப்பாகவும் இருந்தது.

சுசீலா 'ஒரு மாதத்தில்' என்று சொன்னாள்? ஒரு வருஷமாகியும் பத்மஜாவின் மூக்கில் எவ்வித மாறுதலையும்—எவ்வித முற்போக்கையும்—காணவில்லை. உண்மையில் அது நாளுக்கு நாள் பின்னே தள்ளிச் செல்வதாகத் தோன்றியது. என் மதிமயக்கம் தானோ, என்னவோ தெரியாது. ஆனால் அந்த ஒரே ஆண்டுக்குள் பத்மஜாவின் தலைமயிர் இன்னும் அடர்த்தியாக, இன்னும் கரியதாக வளர்ந்தது. கரிய விழிகளின் கருமையும் ஆழமும் பன்மடங்காயின. அந்த விழிகளில் வார்த்தையால் வர்ணிக்க முடியாத அபூர்வமானதொரு சஞ்சலமும் சேர்ந்து கொண்டது. அந்தச்] சஞ்சலப் பார்வை எங்கிருந்து வந்தது? கண்களில் எப்போதும் மெல்லிய நீர்த் திரை ஒன்று படர்ந்திருப்பது போல் இருக்கும். துணியால் துடைத்து அகற்றி விடலாம் என்று தோன்றும்; ஆனால் துடைத்தால் போகவே போகாது. என் ஏக்கத்தின் எதிரொலியை நான் அந்த நீர்த் திரையில் கண்டேன்...அப்புறம், அந்த ரோஜா உதடுகள்; எப்போதும் 'லிப்ஸ்டிக்' போட்டதுபோல் சிவப்பு. ஆனால் எந்த லிப்ஸ்டிக்கிலும் இல்லாத நிறக் கவர்ச்சி. இயற்கை போட்டு விட்ட 'மேக் அப்' அது. எல்லா அம்சங்களிலும், ஒவ்வொரு நாளும் ஒரு புது மாதிரி



ஒளியும், அழகும் தோன்றிக்கொண்டிருந்தன. அந்த மூக்கின் வடிவத்திலும், அளவிலும் மட்டும் மாறுதல் ஏதும் இல்லை. என் கவலை நாளுக்கு நாள் அதிகமாயிற்று.

''நீங்கள் என்ன, கவலைப்படுவதற்கென்று தேடித் தேடி இந்தக் காரணத்தைக் கண்டு பிடித்தீர்களா? குழந்தை வளர்ந்தால் மூக்கும் தானாகச் சரியாகிறது. பார்த்துக் கொண்டே யிருங்கள்: அவள் அப்படியே 'டால்' வீசி மயக்கப் போகிறாள்....''—இவ்விதம் என்னென்னவோ பேசிச் சுசீலா தினப்படி எனக்குத் தைரியம் சொல்லி வந்தாள்.

சதைப் பிடிப்புக்கு எல்லாப் பெண் குழந்தைகளும் பத்மஜாவைப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவள் உடலில்தான் எவ்வளவு உறுதி! பிறந்த நிமிஷத்திலிருந்தே ஓடியாடி என்னென்னவோ செய்வதற்கு அவள் துடித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. கையில் தாங்கலாகத் தூக்கிக் கொண்டால் ஒரு துள்ளுத் துள்ளிப் பிடியிலிருந்து நழுவி விடுவாள். அவள் கைக் குழந்தையாயிருந்த போது அவளைத் தூக்குவதற்கே நான் மிகவும் பயப்படுவேன்.

பத்மஜாவுக்குக் 'கால் முளைத்த' நாளிலிருந்து எங்களுடைய கால்களுக்கும் சரியான வேலை. இரவில் அளவற்ற நிம்மதியுடன் தூங்கும் அவள், காலையில் எழுந்திருக்கும் போதே துள்ளிக் கொண்டு எழுந்திருப்பாள். அந்தத் துள்ளலும், துடிப்பும் நாள் முழுதும் நீடிக்கும். உமா ஒரு சாதுப் பெண். அவளுக்கு எதிலும் மிதமான பழக்கங்கள் தான் உண்டு. ஓடுவதற்கும், சாடுவதற்கும் அவள் தன்னையறியாமலே ஒருவித நேரக் கணக்கைப் பின்பற்றி வந்தாள். பாக்கி நேரத்தில் அவள் பாட்டுக்கு ஒரு பக்கம் உட்கார்ந்து பத்மஜாவின் விளையாட்டுக்களைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருப்பாள். பத்மஜா அசல் கோமாளி. இரண்டாவது வயதிலேயே வித்தைக்காரன் குழந்தைகள் மாதிரி, கர்ணம் போட்டுக் காண்பித்தாள். அதில்தான் எவ்வளவு லாகவம்! அவள் உடம்பை எப்போது இவ்வளவு வசக்கி வைத்தாளோ! ''இந்தப் பெண்ணை, ஒன்று, ஸர்க்கஸில் சேர்க்க வேண்டும். இல்லாவிட்டால் பட்டாளத்தில்தான் சேர்க்க வேண்டும். இப்போதே கையில் வித்தையை வைத்துக் கொண்டு திண்டாடுகிறாளே!'' என்று நாங்கள் பேசிக் கொள்ளுவோம்.

எனக்கு ஆரம்ப முதலே ஒருவித 'அசட்டு எண்ணம் இருந்து வந்தது, பத்மஜா படித்துச் சுயேச்சையாக வேலை பார்ப்பாளே தவிர, மண வாழ்க்கையில் புகுந்து கொள்ள மாட்டாளென்று. அதற்கேற்றாற் போல் அவளும் இரண்டு வயது முதலே சொல்வதையெல்லாம் கற்றுக் கொண்டு விடுவாள். மூன்றாவது வயதில் அவளை 'மாண்டிஸோரி' ஸ்கூல் ஒன்றில் உமாவோடு சேர்த்தோம். முதல் நாளன்றே எவ்வளவு உற்சாகத்தோடு குதித்துக் கொண்டு ஓடினாள், தெரியுமா? ''இதோ எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு திரும்பி வந்து விடுகிறேன்'' என்று அவசரமாய் ஓடுவது போலிருந்தது. அந்த முதல் நாளிலிருந்தே ஒவ்வொரு நாளும் புதிது புதிதாய்

அவள் கற்று வந்த விஷயங்களுக்குக் கணக்கே இடையாது. உமா படிப்பில் மிதமான சிறப்போடுதான் முன்னேறி வந்தாள். மட்டம் என்பதில்லை யென்றாலும் பத்மஜா மாதிரி வராது. உமா தென்றல் என்றால் பத்மஜா சரியான ஆடிக் காற்று. அவளுடைய உடலில் இருந்த பரபரப்பு மனத்திலும் இருந்தது. பரீட்சைக்குப் படிப்பவள், மணிக்கணக்காகப் புத்தகங்களில் மூழ்கியிருப்பாள்; அந்தச் சமயத்திலெல்லாம் கண்ணோ மனமோ வேறு பக்கம் திரும்பாது.

அடுத்த வீட்டில் சியாமளி என்று ஒரு பெண் வந்து சேர்ந்தாள். உமாவைவிட நாலைந்து வயது பெரியவள். அவளுடைய அப்பா பெரிய உத்தியோகஸ்தர். பெண்ணைக் கான்வெண்டில் படிக்க வைத்திருந்தார். தினமும் காலை ஏழு மணிக்குப் பள்ளிக்கூட பஸ் ஒன்று வந்து வீட்டெதிரே நின்று 'பாம் பாம்' என்று கத்தும். மறு நிமிஷம் சியாமளி 'டிப்டாப்'பான உடையுடன் பந்து போல் துள்ளிக் கொண்டே வந்து ஏறிக் கொள்வாள். உமா—பத்மஜா ஜோடிக்கு ஒன்பது மணிக்குத்தான் பள்ளிக்கூடம். சியாமளி தினமும் பள்ளிக்கூட பஸ்ஸில் ஏறிப் போவதை இருவரும் பொறாமையுடன் பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

''எங்களையும் அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடு, அப்பா. நாங்களும் சியாமளி அக்கா மாதிரி....'' என்று இருவரும் தங்கள் விருப்பத்தை வெளியிடுவார்கள்.

சியாமளி பள்ளிக்குப் போகும் ஜோரை நானும் கமலாவும்கூட வாசலில் நின்று கவனிப்பதுண்டு.

நாலு நாட்களுக்கப்புறம் மாலையில் நான் ஆபீஸிலிருந்து திரும்பியபோது கமலா அபூர்வமான உற்சாகத்தோடு என்னை வரவேற்றாள்.

''உங்களுக்குத் தெரியுமா ஒரு விஷயம்?''

''என்ன?''

''சியாமளிக்கும் பத்மஜா மாதிரிதான் சப்பை மூக்காக இருந்ததாம். அப்புறம் நாளாக ஆகச் சரியாகிப் பன்னிரண்டாவது வயதில் நேராகி விட்டதாம்.''

என் காதுகளையே நம்ப முடியவில்லை. ''ஆ, அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே! அந்த மாதிரி மூக்கு எல்லாக் குழந்தைகளுக்கும் இருந்து விட்டால், அப்புறம் உலகத்தில் மூக்கைப் பற்றின கவலையே இடையாது. அந்த மாதிரி மூக்கு இருந்து, தினமும் ஜலதோஷம் வந்தால்கூடப் பரவாயில்லை'' என்று கூறிச் சிரித்தேன்.

''அதனால்தான் சொல்கிறேன்: இனிமேலாவது பத்மஜாவைப் பற்றிக் கவலைப் படாமல் உற்சாகமா யிருப்பதற்கு வழி பாருங்கள்.''

மெய்யாகவே எனக்குக் கவலை தீர்ந்து விட்டது. அன்று முதல் புது உற்சாகம் ஒன்று என் மனத்தில் இடம் பெற்றது.

சியாமளிக்குச் சிறுவயது முதலே நாட்டியம் கற்றுக் கொடுத்து வந்தார்கள் என்று ஒரு நாள் தெரிந்தது. அன்றைக்கே உமாவையும், பத்மஜாவையும் நடன வகுப்பில் சேர்த்தேன். இதற்கு முன்பாக, சியாமளியின் 'கான்வெண்'டிலேயே இருவரையும் சேர்த்து விட்டேன். பள்ளிக்கூட பஸ் எங்கள் வீட்டு வாசலிலும்

வந்து நிற்க ஆரம்பித்தது. அந்தப் பெருமையே தனிமாதிரிதான்!

அந்த வருஷத்துக் கோடையில், சியாமளியும், அவளுடைய பெற்றோரும் எங்கோ உல்லாசப் பிரயாணம் போனார்கள். போனவர்கள் அடுத்த வீட்டுக்குத் திரும்பி வரவில்லை. சியாமளியின் அப்பாவுக்கு லீவின் போதே வேறு ஊருக்கு மாற்றலாகி விட்டது. அவருடைய உறவுப் பையன் ஒருவன் வந்து அடுத்த வீட்டைக் காலி செய்து கொண்டு திரும்பிப் போனான்.

பத்மஜாவைப் பற்றி என் மனத்தில் நம்பிக்கை ஊட்டத்தான் சியாமளி அடுத்த வீட்டுக்கு வந்து சென்றாளோ? வேறு என்ன விதத்தில் இதற்கு விளக்கம் சொல்ல முடியும்?

ஆனால்....

சியாமளியின் பன்னிரண்டாவது வயதைப் பத்மஜா அடைந்த பின்பும், அவளுடைய மூக்கு விஷயத்தில் எவ்வித முன்னேற்றத்தையும் காணாமல் நான் தவித்துப் போனேன். சியாமளிக்குப் பொருந்தினது பத்மஜாவுக்குப் பொருந்தாமல் போகுமா? உண்மையில் பத்மஜாவின் மூக்கில் ஏற்பட்டிருந்த ஒரு மாறுதல் என் மனத்துன்பத்தை அதிகமாக்கத்தான் செய்தது: இந்தப் பன்னிரண்டு வருஷ காலத்தில் அந்த மூக்கு, என் பிரார்த்தனையைத் தவறாகப் புரிந்துகொண்டு, சற்றே மேல் பக்கம் தூக்கினாற்போல் ஆகிவிட்டது. முன்பிருந்த சப்பை மூக்குத்தான்; ஆனால் நுனிமட்டும் ஒருமாதிரி மேல்நோக்கித் திரும்பிக் கொண்டது. மாறுதலை வேண்டித் தவமிருந்த நான், பத்மஜாவின் பழைய மூக்கே திரும்பி வந்து விடாதா என்று பிரார்த்திக்கத் துவங்கி விட்டேன்.

தாயுள்ளம் விசித்திரமானதுதான். நான் இவ்வளவு தவித்தேனே! சுசீலா கவலையற்றிருந்தாள். பத்மஜாவுக்கு எவ்விதக் குறையும் இருப்பதாக அவள் நினைக்கவில்லை. அவள் கவலைப்படாமலிருந்தது என் கவலையை அதிகமாக்கியது. என் கவலையை வெளியே சொல்லிக் கொண்ட போதெல்லாம் சுசீலா என்னைக் கேலி செய்யவும் ஆரம்பித்தாள். இது காரணமாய் நான் என் வேதனையை மனதுக்குள்ளேயே வைத்து மருக வேண்டியதாயிற்று. பழைய எண்ணம் மட்டும் என் மனத்தில் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. பத்மஜா மண வாழ்க்கையில் அகப்படாமல் வேலை பார்க்கத்தான் போகிறாள் என்று நிச்சயமாய் எண்ணினேன்.

உமாவின் கல்யாணம் நடந்தபோது பத்மஜா பட்டப் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தாள். ஒரு வருஷம்தான் பாக்கியிருந்தது. "படிப்பு முடிந்தவுடன் நேரடியாய் ஒரு வேலைக்குத்தான் போகப் போகிறேன், அப்பா. உமா அக்கா கல்யாணம் செய்து கொண்டு மண வாழ்க்கை நடத்தப் போகிறாள். இன்னொரு வாழ்க்கையும் இருக்கத்தான் செய்கிறது என்பதை நான் காட்டுகிறேனே!" என்றாள்.

"பட்டம் வாங்கி மண வாழ்க்கை நடத்துவது மேலா, உத்தியோக வாழ்க்கை நடத்துவது மேலா என்பதைப் பார்க்கலாம்" என்று அவள் சவால் விட்டுக் கொண்டிருந்

BY 100 (a)



பின்னியின் **காட்ஸ்வால்**

உங்கள் சருமத்திற்கு சமசீதோஷ்ண நிலையளிக்கும் அதிசயத் துணி!

"கண்மணிகளே, நீங்கள் மென்மையும் அழகும் கலந்த
காட்ஸ்வால் அணிந்திருப்பதால்
எவ்வளவு அழகாயிருக்கிறீர்கள்!"



**காட்ஸ்வால்**
**விசேஷ மதிப்புடையது :**

அது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது.

நீடித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

அது எல்லா குழந்தைகளுக்கும் ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாது.

சீதோஷ்ண நிலையில் ஏற்படும் திடீர் மாறுதல்களிலிருந்து பாதுகாக்கிறது.

அது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்த பருவகாலத்துக்கும் ஏற்றது.

காட்ஸ்வால் சுருங்காதென உத்தரவாதம். காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

பலவித கலர்களிலும் டிஸைன்களிலும் கிடைப்பதால் உங்களுக்கு வேண்டிய ரகத்தைத் தேர்ந்தெடுக்கலாம்.




**இலவசம்**

படங்களடங்கிய பின்னியின்
காட்ஸ்வால் புஸ்தகம் 13 நயே பைசே
ஸ்டாம்பு அனுப்பியும். டிபார்ட்
மெண்ட Y., தபால் பை 2701
சென்னை - 6.

**காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை! அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள்.**

தி பங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் லிட்.
மானேஜிங் ஏஜெண்டுகள் : பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட்.

தான். என் மனத்தை அறிந்து கொண்டுதான் அப்படிச் சொன்னாளா, இல்லாவிடில் இயல்பாக அவள் திட்டமே அப்படித்தான் இருந்ததா, எனக்குத் தெரியாது. ஆனால் அவளுடைய படிப்பு வேகத்தைக் கொண்டு பார்த்த போது அது இயல்பான விருப்பம் என்றே எனக்குப் பட்டது. படிப்பில் அவள் பிரகாசித்த விதம், அவளுடைய வருங்காலம் பற்றிப் பலவிதமான கனவுகளை என் மனத்தில் புகுத்திக் கொண்டிருந்தது.

உமா கணவன் வீட்டுக்குச் சென்று தனி வாழ்க்கை நடத்த ஆரம்பித்து ஆறேழு மாதம் ஆகியிருந்தது. பத்மஜா பட்டப் பரீட்சை எழுதி முடித்து விட்ட மறுநாள்....

நன்றாய் ஞாபகம் இருக்கிறது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. பிற்பகல் வேளை. நான் மாடி அறையில் உட்கார்ந்து புத்தகம் ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தேன். கமலா, கீழே ஏதோ வேலையாயிருந்தாள். பத்மஜா சாப்பாட்டுக்கப்புறம் வெளியே எங்கேயோ போயிருந்தாள். பரீட்சையெல்லாம் முடிந்ததும், ஒருநாள் முழுதும் தூங்கி, அதுவரை கண் விழித்ததற்கு ஈடு செய்து கொள்ளாமல் பரீட்சை முடித்துவிட்ட உற்சாகத்தைத் தோழிகளுடன் பகிர்ந்துகொள்ள ஓடியிருந்தாள். என் கண்கள் வெறுமனே புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனவேயன்றி மனம் எப்படி எப்படியோ சுழன்று சுழன்று திரும்பத் திரும்பப் பத்மஜாவைப் பற்றிய எண்ணங்களிலேயே சிக்கிக் கொண்டது.

பட்டப் பரீட்சையை அவள் நான் எதிர்பார்த்திருந்த அளவுக்குப் பிரமாதமாக எழுதவில்லை. அவள் என்னிடம் சொல்லித்தான் எனக்கு இது தெரியும். ''இப்படிச் செய்து விட்டாயே,பத்மஜா!'' என்று நான் சொன்னதற்கு. அவள் அலுப்புடன், ''என்னப்பா, படிப்பும், பட்டமும்தானா முக்கியம்?'' என்று பதில் கொடுத்தது எனக்குப் பெரிதும் ஏமாற்றமாயிருந்தது. என் நெடுநாளையத் திட்டம் குலைந்துவிடும் போலிருந்தது.

மாடியறை ஜன்னல் வழியே வீதியைப் பார்த்தேன். பத்மஜா ஒய்யாரநடைபோட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தாள். எவ்வளவு அழகான உடலமைப்பு! நாட்டியம் கற்றுக் கொண்டவளல்லவா? நடையில் ஓர் அபூர்வ நளினம் இருந்தது. உடலின் ஒவ்வோர் அசைவிலும் கட்டுக்கடங்காத சக்தி வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. உலகத்தையே அலட்சியம் செய்யும் ஒருவித மிடுக்கும், திமிரும் அவளுடைய பார்வையிலும், செய்கையிலும் பொதிந்திருப்பது போல் எனக்குத் தோன்றியது. அத்தனை சௌந்தரியத்துக்கும் நடுவே அந்த மூக்கு ஒரு பெரிய களங்கமாக என் கண்களுக்குப் பட்டது. அழகான பொம்மை ஒன்றைச் செய்து, வேண்டுமென்றே அந்த அற்புதமான பொம்மையில் ஒரு சிதைவையும் புகுத்திவிட்ட மாதிரி இருந்தது.

மேலே வந்தவள் என்னிடம் ஒன்றும் பேசவில்லை. மொட்டை மாடிப் பக்கம் போவதாகப் போக்குக் காட்டிவிட்டு மறுபடியும் அறைக்குள்ளேயே வந்தாள். மேஜைமேல் ஏற்கெனவே ஒழுங்காக அடுக்கி வைத்திருந்த புத்தகங்களையும், காகிதங்களையும் ஒருதடவை சீர்குலைத்துவிட்டு மறுபடியும் ஒன்றாக அடுக்கி



குழந்தை:—பரீட்சை சமயத்தில் ரொம்ப அதிகமா தலையில் எண்ணெய் போடாதே, அம்மா! என்ன படிச்சாலும் தலையில் நிக்க மாட்டேன்கிறது......வழுக்கி வழுக்கிக் கீழே விழுந்து விடுகிறது.

வைக்க ஆரம்பித்தாள். வியப்புடன் நிமிர்ந்து பார்த்தேன். அர்த்தமில்லாத காரியம் ஒன்றில் ஈடுபட்டிருந்த அவளிடம் ஒருவிதப் பரபரப்பு தென்பட்டது. அவளுடைய உடம்பு சற்றே நடுங்கிக் கொண்டிருந்ததையும் கண்டேன். பத்மஜாவுக்கு என்ன வந்துவிட்டது?

பத்மஜா எனக்கு மிக அருகில் வந்து விட்டவள், திடீரென்று மனதை மாற்றிக் கொண்டு திரும்பிச் சென்று மறுபடியும் ஜன்னல் அருகில் நின்றவாறு வெளியே பார்க்க ஆரம்பித்தாள். நான் தலை நிமிர்ந்தேன். மனம் திக்கென்றது. பத்மஜாவின் உடல் வெடவெடவென்று தெளிவாக நடுங்கிக் கொண்டிருந்தது. உற்றுப் பார்த்தேன். வேறு பக்கம் திரும்பியிருந்த போதிலும், அவள் அழுது கொண்டிருந்தாள் என்பது தெரிந்தது. ஐயோ, இதென்ன போராட்டம்!

அதற்குமேல் எனக்குப் பொறுக்கவில்லை: எழுந்து நின்று ''பத்மஜா!'' என்று கூப்பிட வாயெடுத்தேன். அந்த வார்த்தை என் வாயிலிருந்து வெளி வந்துவிட்டதா என்பது கூடத் தெரியாது. பத்மஜா அதற்குள் ''அப்பா!'' என்று கதறிக் கொண்டு ஓடி வந்து என் கைகள் இரண்டையும்பிடித்து இழுத்து, அவற்றில் முகம் புதைத்துக் கொண்டு 'ஓ' வென்று அழுதாள். எனக்கு ஒன்றுமே புரியாவிட்டாலும் சற்று நேரம் அவளை அப்படியே அழும்படி விட்டேன். பரீட்சை சரியாக எழுதாதது அவள் மனத்தை இவ்வளவு பாதிக்க வேண்டுமா? ''வாழ்க்கையில் படிப்பும், பட்டமும் தானா முக்கியம்?'' என்று அவளே சொல்லியிருந்தாளே! இப்போது என்ன ஆயிற்று?

''பத்மஜாக் கண்ணு, ஏன் அழுகிறாய்? சொல்ல மாட்டாயா?'' என்று பரிதாபமாகக் கேட்டேன், கடைசியில்.

பத்மஜா தலை நிமிர்ந்தாள். உணர்ச்சியை அடக்கி வைத்ததால் முகமெல்லாம் கன்றிப் போயிருந்தது; அந்தக் கொஞ்சநேர அழுகையால் அவளுடைய கண்கள் பொங்கினாற் போலிருந்தன. (இத்தனைக்கு நடுவிலும் அந்த மூக்கு விசித்திரமாகத் தோற்றம் கொடுத்தது.) "அப்பா! நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அவள் என்னுடைய காலில் விழ வந்தாள். அப்படியே அவளைப் பிடித்து நிறுத்தினேன்.

"பத்மஜா! என்னென்னமோ பேசுகிறாய். என்னென்னமோ செய்கிறாய். உன் மனத்தில் இருப்பது என்ன? சொல்ல மாட்டாயா?" என்று கேட்டேன்.

சொன்னாள்....

அவள் சொன்ன ஒவ்வொரு தகவலும் என்னைத் திகைக்க வைத்தது. என் சொந்தப் பெண்ணைப் பற்றி எனக்குத் தெரிந்தது இவ்வளவுதானா? எல்லாம் தெரிந்து, பொறுப்பு உணர்ந்தவன் போல் அவளுடைய வருங் காலத்துக்குத் தானாக ஒரு திட்டம் போட்டு வைத்திருந்தேனே, எத்தகைய முட்டாள் நான்!

என் திட்டம் கிடக்கிறது!...அவள் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் என் காதில் அமுதமாய் வந்து பாய்ந்தது. விம்மலுக்கு நடுவே அவள் முழு விவரங்களையும் சொல்லி முடித்தவுடன் கட்டுக்கடங்காத மகிழ்ச்சியுடன் துள்ளி எழுந்தேன். "பத்மஜாக்குட்டி! அவன் யாரென்று சொல்லு; நான் இப்போதே போய்ப் பார்க்கிறேன்" என்று சொன்னேன்.

பத்மஜா இந்தத் தடவை ஆனந்த மிகுதியால் என் காலைத் திடீரென்று கட்டிக்கொண்டு விட்டாள். "உங்களுக்கு அந்தச் சிரமம் வைப்பதற்கு அவர் தயாராயில்லை அப்பா. தெருத் திருப்பத்தில்தான் நிற்கிறார். நான் அழைத்து வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, என் பதிலைக்கூட எதிர்பாராமல் கதவைத் திறந்து கொண்டு கீழே ஓடினாள்.

இனியும் நின்று கொண்டிருந்தால் திகைப்பு என்னைக் கீழே சாய்த்து விடும்போலிருந்தது. அப்படியே உட்கார்ந்தேன். பத்மஜாவின் வார்த்தைகள் என் காதில் இன்னமும் ஒலித்துக் கொண்டிருந்தன....திடீரென்று சுசிலா என் எதிரே வந்து நின்றாள்.

"என்ன நடந்தது இங்கே? விம்மலும், அலறலும் கேட்டன. திடீரென்று 'சின்னக்குட்டி' வெளியே ஓடுகிறாளே!" என்றாள்.

பத்மஜா சொன்னதை யெல்லாம் சுசிலாவிடம் கூறினேன்: முடிவில் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருக, "யார் அது?" என்று கேட்டாள் சுசிலா.

"அது நம் இருவருக்கும் சேர்ந்தாற்போலத்தான் தெரிய வேண்டும். நீ இங்கேயே இரு. போய் விடாதே" என்றேன்.

'தடதட' வென்று நாலு பாதங்கள் மாடிப்படி ஏறிவரும் சத்தம் கேட்டது. காலடிச் சத்தம் நடுவில் நின்று போயிற்று. திடீரென்று மறுபடியும் இரண்டு பாதங்கள் மட்டும் ஏறி வந்தன. முதலில் பத்மஜா உள்ளே வந்து, பின்புறம் திரும்பிப் பார்த்து, "தயக்கம் வேண்டாம், தாராளமாக வரலாம்" என்று சொன்னாள். இரண்டு விநாடி நிசப்தமாயிருந்தது. அந்த இரண்டு விநாடி நேரத்துக்கும் காலவரம்பே கிடையாது; பல வருஷங்கள் சேர்ந்தாற்போல் காத்துக் கிடப்பது போல்தோன்றியது. மறுபடியும் 'தடதடதட' வென்று மூன்று தடவைகள் சத்தம் கேட்டது. மூன்றே எட்டில் ஸ்ரீதரன் ஏறிவந்து பத்மஜாவின் அருகில் நின்றவாறு எங்கள் இருவரையும் பார்த்து வணங்கினான்.

ஸ்ரீதரன்! என் உயிர்த்தோழன் ராமமூர்த்தியின் மகன் ஸ்ரீதரனா பத்மஜாவின் காதலன்? ஊர் இளைஞர்களுக்கே ஆதர்சமாக விளங்கிய ஸ்ரீதரன் என்னும் அழகனா பத்மஜாவின் காதலன்? மேல் படிப்புக்காக அவன் அமெரிக்கா செல்லப் போவதாகக் கேள்விப்பட்டுச் சமீபத்தில் நான் அவனுக்கு வாழ்த்துக் கூறிய போதும் இதைப் பற்றி அவன் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே...!

கல்யாணம் முடிந்தது. நான் பத்மஜாவிடம் கேட்டேன்: "என்ன பத்மஜா! பட்டதாரிப் பெண் ஒருத்தி மணவாழ்க்கை நடத்துவது மேலா? உத்தியோக வாழ்க்கை நடத்துவது மேலா?"

பத்மஜா, பாவம்! அதற்குப் பதில்சொல்லக் கூட அவளுக்கு நேரமில்லை. ஸ்ரீதரனுடன் தானும் அமெரிக்காவுக்குப் புறப்பட்டுச் செல்வதற்கு ஆயத்தம் செய்வதில் மூழ்கியிருந்தாள். "என்னுடன் பத்மஜாவும் வந்தால்தான் எனக்குப் படிப்பு ஓடும்" என்று ஸ்ரீதரன் உறுதியாய்ச் சொல்லி விட்டான்.

பத்மஜாவின் மூக்கு, கல்யாணத்துக்கு அப்புறம் மேலும் விசித்திரமாகி விட்டதாக என் கண்களுக்குப் பட்டது.

ஸ்ரீதரனும், பத்மஜாவும் அமெரிக்கா போய்ச் சேர்ந்த ஒரு வாரத்துக்கெல்லாம் ஒரு கவர் வந்தது; இரண்டு பேரும் ஆளுக்கொரு கடிதம் எழுதி வைத்திருந்தார்கள். நாங்கள் பெற்றோரல்லவா? முதலில் பத்மஜாவின் கடிதத்தைப் படித்துப் பார்த்தோம். அது எவ்வளவு தவறான காரியம்! பத்மஜாவின் கடிதத்தைப் படிக்கும் நேரத்துக்கு ஸ்ரீதரனின் கடிதத்தைக் காக்கப் போட்டது எவ்வளவு பெரிய தவறு!

என் வாழ்க்கையில் எனக்கேற்பட்ட மிகப் பெரிய திகைப்புக்குக் காரணமான சில வார்த்தைகள் ஸ்ரீதரனின் கடிதத்தில் இருந்தன.

"...மாமா! பத்மஜா எல்லா அம்சங்களிலுமே ஒரு பெரிய பொக்கிஷம்தான். ஆனால் அவளிடம் எனக்கு மிக அதிகமாய்ப் பிடித்த அம்சம் ஒன்று உண்டென்றால், அது அவளுடைய அருமையான மூக்குதான். என் காதலுக்கு அடிப்படை அதுதான். இந்த மாதிரி கவர்ச்சிகரமான மூக்கு வேறு யாருக்குமே கிடையாது என்று சொல்லுவேன். அதுவும், கவிந்தாற்போல் வந்துவிட்டு, நுனியில் இலேசாக மேலே தூக்கியிருக்கிறதே..."

என் மூக்கை அறுத்து விட்டானே, போக்கிரிப் பயல்!...ஹூம், எனக்கும், அவனுக்கும் இருபத்தைந்து வயது வித்தியாசம் தான்; இந்தச் சில வருஷங்களுக்குள் மனித மூக்கைப் பற்றின கருத்து இவ்வளவு மாறி விட்டதா? வேடிக்கை தான்!

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

*தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

டால்க் பவுடர்

EC/G/3A

---

SG/2578

## *அவருடைய சிகரெட்*






# சிஸர்ஸ்



நினைத்துப் பார்த்தால் அது ஒரு கனவு போல் எனக்குத் தோன்றுகிறது. 'நினைக்க வேண்டிய அவசியம்? நினைக்காமலே இருந்து விட்டால் என்ன ?'

இருக்க முடியவில்லையே! நான் என்ன செய்வேன் ? உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில் உள்ள நிறைவாகுமோ? உள்ளம் நினைவுகளில் பொங்கும் போதெல்லாம் அந்த அழகிய முகம் திரைச் சீலையில் எழுதித் தொங்கவிட்ட ஓவியம் போல் தென்படுகிறதே? அந்த ஓவியத்தை நான் எப்படி அழிப்பேன் ? நினைவில் அரும்பு கட்டி மலரும் அந்த மலரை எப்படிக் கசக்குவேன் ? நெஞ்சே பொறு! உனக்கு மறுபடியும் அவள் கதையை நினைவூட்டுகிறேன். எண்ணங்களால் என்னைக் கொல்லாதே. நான் நிரபராதி, எளியவன், பலவீனன், தனியன். என்னை விட்டு விடு. நீ கேட்பதை நான் ஒளிக்காமல் சொல்லி விடுகிறேன். நான் ஏன் எதிலும் பற்றில்லாமல்; எதுவும் என்னைப் பற்ற விடாமல், கவலையற்று, சுகமற்று, ஏகாங்கியாகத் திரிந்து கொண்டிருக்கிறேனென்று நீ கேட்கிறாய்! கடந்த பதினைந்து ஆண்டுகளாக இதயத்தை அழுத்திக் கொண்டிருக்கும் அந்த நினைவுச் சுமையைச் சற்றே கீழே இறக்கி வைக்கிறேன். சரிதானே ? கேள் !

* * *

அவளைச் சந்திக்க நேர்ந்தது ஒரு விநோதமான கதை போல் நினைவில் தங்கியிருக்கிறது. நிலாம்பூர் மலைப் பகுதியில் யானைகளைப் பிடித்துப் பழக்கும் ஒரு கம்பெனியில் வேலை பார்த்து வந்தேன். அப்போது எனக்கு இருபத்து மூன்று வயது. மலை வாழ்வும், விறுவிறுப்பும் நிறைந்த யானை பிடிக்கும் தொழிலும் மனத்துக்குப் பிடித்தவையாய் அமைந்திருந்தன. உடன் வேலை பார்த்தவர்கள் எல்லோரும் மலையாளிகள். அளவற்ற அன்புடன் என்னிடம் பழகினார்கள். கம்பெனிக் கட்டடங்களுக்கு அருகிலுள்ள அறையொன்று நான் இருப்பதற்காகக் கொடுக்கப்பட்டிருந்தது. தனி ஆளாக இருந்தாலும், குடும்பங்களோடு வசித்து வந்த மலை நாட்டு நண்பர்களின் உதவி வேண்டியபோதெல்லாம் குறைவின்றிக் கிடைத்து வந்தது. பல நூறு மைல்களுக்கு அப்பால் பெற்றோர்களையும், வீட்டையும், பிறந்த மண்ணையும் விட்டு விட்டுப் பிழைப்பதற்காக இங்கே வந்து இப்படிக் காட்டிலும் மலையிலும் அலைகிறோமே என்ற உணர்ச்சி ஏற்படவே இல்லை. சொந்த ஊரில் சொந்த மனிதர்களுக்கு இடையே வசிப்பதைப் போலவே இருந்தது.

அப்போது கோயம்புத்தூருக்கு அருகிலுள்ள பேரூர்ச் சிவன் கோவிலுக்கு ஒரு யானை பிடித்துக் கொடுக்க ஒப்புக் கொண்டிருந்தோம். கோவிலுக்கு யானை வாங்கி விடுவதாகப் பிரார்த்தித்துக்கொண்டிருந்த செல்வச் சீமான் முன் தொகை மூவாயிரம் ரூபாய் கொடுத்து, பிடிக்க வேண்டிய யானையின் வயது, உயரம் முதலிய விவரங்களைச் சொல்லி அனுப்பியிருந்தார். கோவிலுக்காக யானை பிடித்துக் கொள்ளுவதற்குக் காட்டிலாகா அனுமதியும் கிடைத்து விட்டது. குஞ்சுக் குட்டன், நாராயணன் நம்பியார், முரளீதர குருப், நான் ஆகிய நால்வரும் வேறு சில ஆட்களும் யானையை, ஒரு வாரத்துக்குள் பிடித்துக் கொடுத்து விடுவதென்று ஏற்பாடுகளைத் தொடங்கினோம். மலையில் யானைகள் அதிகமாகப் பழகும் அடர்ந்த பகுதி ஒன்றில் எப்போதும் போல் வழக்கமாக ஒரு பெரிய குழி வெட்டப்பட்டது. ஆழம், அகலம், உயரம் எல்லாம் யானை விழுவதற்கேற்பப் பொருத்தமாக அமைக்கப்பட்ட அந்தக் குழியின் மேல் மெல்லிய மூங்கில் தட்டியால் மூடினோம். மண்ணைப் பரப்பிப் பார்ப்பதற்குத் தரை போல் தோன்றும்படி செய்தபின் கரும்புக் கழிகளும், உடைத்த தேங்காய்களும், தழைகளும் அதன்மேல் பரப்பப்பட்டன. நாங்கள் குறிப்பிட்டிருந்த ஒரு வார அவகாசத்தில் இந்தப் பூர்வாங்க வேலைகள் முடிவதற்கே இரண்டு நாட்கள் கழிந்து விட்டன. பொய்க் குழியின் வடக்கே மேட்டில் உயர்ந்த

மரக்கிளைகளின் நடுவே ஒரு பரண் கட்டியிருந்தோம். எஞ்சியிருக்கும் ஐந்து நாட்கள்தாம் பயங்கரமும், கடுமையும் கவனமும் நிறைந்தவை. நாங்கள் நான்கு பேரும் ஒருவர் மாற்றி ஒருவர் இரவு - பகல் பாராமல் பரணில் இருந்தாக வேண்டும். கரணம் தப்பினால் மரணம் என்கிறமாதிரி நிலை அது. பகலில் இரண்டு பேர்கள், இரவில் இரண்டு பேர்கள் என்று முறை வைத்துக் கொண்டு நாட்களைக் கழித்தோம். பேரூர்ச் சிவபெருமானுக்கு யானையைச் சீக்கிரமாகத் தருவித்துக்கொள்ள வேண்டுமென்று திருவுள்ளமில்லையோ, அல்லது நாங்கள் பறித்து வைத்திருந்த பொய்க் குழி வழியே யானைகள் வரவில்லை என்பதனாலோ, நான்கு நாட்கள் வரை எதிர்பார்த்தபடி எதுவும் நிகழவில்லை. கரும்புக் கழிகளும், குழிமேல் பரப்பியிருந்த பிற தழைகளும் வாடிக்கொண்டு வந்தன. ஐந்தாம் நாள் பகலிலும் யானை வரவில்லை. 'நாங்கள் திட்டமிட்டிருந்தபடி ஏழு நாட்களில் காரியத்தை முடிக்க இயலாமல் போய் விடுமோ?'— என்று திகைத்தோம். எதற்கும் அன்று ஐந்தாம் நாள் இரவையும் பார்த்து விடுவதென்று முடிவாயிற்று. அன்றிரவு பரணிலிருந்து குழியைக்கண்காணிக்கும் பொறுப்பை நானும் முரளீதர குருப்பும் மேற்கொள்ள வேண்டியிருந்தது. ஏழு மணிக்கே இராச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கம்பளி, டார்ச் லைட், தண்ணீர்க் கூஜா சகிதம் பரணுக்குச் சென்று எங்கள் முறையை ஒப்புக் கொண்டோம். ஏற்கெனவே காலையிலிருந்து அங்கே காத்துக் கொண்டிருந்த குஞ்சுக்குட்டனும், நாராயணன் நம்பியாரும் எங்களைக் கண்டதும் பொறுப்பை ஒப்புவித்து விட்டு வீடு திரும்பிச் சென்றனர். முரளீதர குருப்புக்குச் சமீபத்தில்தான் திருமணமாகி யிருந்தது. இளம் மனைவியை வீட்டில் தனியாக விட்டு விட்டு என்னோடு விடிய விடியப் பரணில் இருக்கப் பைத்தியமா என்ன? எட்டரை மணி சுமாருக்கு. ''சாரோ! நிங்கள் இவ்விடே இருக்கட்டே. ஞான் வீட்டுக்குப் போய் வருன்னு'' என்று சொல்லிக் கம்பளியைப் போர்த்திக் கொண்டு கிளம்பி விட்டான் அவன். நான் பரணில் ஏறிப் படுத்துக் கொள்ளச் சென்றேன்.

திடீரென்று அந்த ஓசையும் அலறலும் கேட்டன. குழிமேல் மூடியிருந்த மூங்கில் தட்டி முறியும் ஓசை! யானைதான் விழுந்து விட்டதோ என்று நான் பரபரப்பாக எழுந்திருந்தேன். ஆனால் தட்டி முறிந்ததை அடுத்து ஒரு பெண்ணின் பரிதாபகரமான ஓலக் குரல் எழுந்தது. யானை விழவில்லை; இருட்டில் யாரோ ஒரு பெண் வழிதெரியாமல் போய்க் குழி மேல் நடந்திருக்கிறாள். தட்டி முறிந்து உள்ளே குழிக்குள் விழுந்து விட்டாள் போலிருக்கிறது. ''யாரது?''—மரத்தின் மேலிருந்து நான் இரைந்து கத்திய வினா ஆயிரம், பதினாயிரம் வினாக்களாக மாறி எதிரொலித்தது. பதில் இல்லை. குழிக்குள்ளிருந்து ஒரு பெண் குரல் அலறும் சத்தம் மட்டும் பரண் மேலிருந்த எனக்குத் தெளிவாகக் கேட்டது. எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. திகிலும், பரபரப்பும் ஏற்பட்டன. நான் கீழே இறங்கிப் பார்க்காவிட்டால் குழிக்குள் அகப்பட்டுக் கொண்டவள் அங்கேயே கதறிப் பயந்து உயிரை விட்டு விடுவாளோ என்று திகைத்தேன். ஒரு கையில் டார்ச் லைட்டையும், இன்னொரு கையில் கயிற்றுச் சுருளையும் எடுத்துக் கொண்டு பரணிலிருந்து கீழ்நோக்கித் தொங்கும் கயிற்று ஏணி வழியே இறங்கினேன். மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள் குழம்பின. உடலில் சிறிது நடுக்கம் ஏற்பட்டது. அந்த இருளில் அம்மாதிரி மலைப் பகுதியில் கீழே நிற்பதனால் எந்த விநாடியிலும் அபாயம் ஏற்படலாம். மிருகங்கள் பழகுகிற இடம். ஆனால் அதற்காக ஒரு அப்பாவிப் பெண்ணைக் குழிக்குள்ளேயே தவிக்க விடுவதா? நான் வேகமாக நடந்து குழியருகே சென்றேன். வடக்கு ஓரமாகத் தட்டி முறிந்து இடைவெளி தெரிந்தது. கையிலிருந்த டார்ச்சை அமுக்கினேன். அப்பப்பா! அதை அமுக்குவதற்குள் கை நடுங்கிய நடுக்கம் சொல்லி முடியாது. விளக்கு ஒளி குழியின் இருண்ட பகுதியில் வட்டமாகப் படிந்தது.

நான் மங்கலான ஒளியில் அவளை ஒரிரு கணங்கள் உற்றுப் பார்த்தேன். கரிய நெடுங்கண்கள், புருவங்கள்! அவை மன்மதன் வளைக்கின்ற வில்லோ எனத் தோன்றின. செம்பவழ இதழ். அழகிய நுனியுடன்கூடிய சிறிய நாசி. தெளி தெளியாகச் சுருளோடி யிருந்த கருங் கூந்தலுக்கும் அந்த மதிமுகத்துக்கும் தான்எவ்வளவு பொருத்தம்? சந்திரனைக் கருநாகம் கவ்வினது போல், கொடியுடலுக்கு ஏற்ற ஒற்றைநாடியானதோற்'





**சினிமா நடிகையின் தாயார்** :—இந்த வருஷம் உனக்குக் கல்யாணம் செய்து விடுவதாக நிச்சயம் செய்து விட்டேன்!

**நடிகை** (நடிப்பு ஞாபகமாகவே) :—ஓ. அப்படியா? மாப்பிள்ளையாக யார் நடிக்கப் போகிறுர்?

---

றம். யானைக்காக வெட்டியபள்ளத்தில் இப்படி ஒரு அழகியைப் பிடிக்கப் போகிறோம் என்று சொப்பனத்திலாவது எதிர்பார்க்க முடியுமா?

"ஐயோ! இந்தக் குழிக்குள் பயமாக இருக்கிறதே! என்னைக் காப்பாற்ற மாட்டீர்களா? நீங்கள் யாராயிருந்தாலும் சரி! உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகிறது."—அவள் மறுபடியும் ஓலமிட ஆரம்பித்து விட்டாள். "சத்தம் போடாதே! உன்னைக் காப்பாற்றத்தான் வந்திருக்கிறேன். இதோ இந்தக் கயிற்றை உள்ளேவிடுகிறேன். இரண்டு கைகளாலும் கயிற்று நுனியை இறுக்கிப் பிடித்துக் கொள்" என்று மேலிருந்து உரத்த குரலில் பதில் கூறிக் கொண்டே கயிற்றுச் சுருளை அவிழ்த்து விட்டேன். அவள் கயிற்றை இறுகப் பிடித்துக் கொண்டாள். எப்படியோ அவளை மேலே தூக்கி விட்டேன். அப்போது பக்கத்தில் மரங்கள் முறிபடுகிற ஓசை கேட்டது. நான் திடுக்கிட்டேன். "பெண்ணே! நீ யாராக இருந்தாலும் சரி. இனி ஒரு விநாடி கூடத் தரையில் நின்று கொண்டிருக்கக் கூடாது. யானைகள் மந்தை மந்தையாக வந்து போகிற இடம் இது. அதோ கேட்டாயா ஓசையை? உயிரின் மேல் ஆசையிருந்தால் வந்துதான் ஆக வேண்டும். வேறெங்கும் போக முடியாது" என்று அவளை நோக்கிக் கூறி விட்டுப் பரணில் ஏறுவதற்கு ஓடினேன். அவளும் என்னைப் பின்பற்றி ஓட்டமும் நடையுமாக வந்தாள். பழக்கத்தின் காரணமாகக் கயிற்று ஏணியில் வேகமாக ஏற முடிந்தது என்னால். அவள் எப்படி ஏறுவதென்று தெரியாமல் தயக்கமும் திகைப்பும் அடைவதைக் கண்டு, "ஆபத்துக்குப் பாபமில்லை! வேறு என்ன செய்வது? உன் வலது கையை இப்படிக் கொடு! நான் பிடித்து மேலே தூக்கி விடுகிறேன்" என்றேன். சொல்லும்போதே என் வார்த்தைகளை அவள் தவருக எடுத்துக் கொள்ளக்கூடாதே என்ற பயத்துடன்தான் சொன்னேன். அவள் தயங்கி நின்றுள்.

"இப்படி நின்றுல் நின்று கொண்டே இருக்க வேண்டியதுதான். என்னையும் மேலே போக விடாமல் நீயும் வராமல் இப்படி ஊமையாக நின்றுல் என்ன அர்த்தம்?" என்று கண்டிப்பான குரலில் அதட்டினேன். வெண்ணிறத் தந்தத்தில் கடைந்தெடுத்தது போன்ற அந்த வளைக் கை உயர்ந்தது.

அந்த இரவில் அன்று நான் ஒரு கனவைக் கண்டுகொண்டிருக்கிறேனே என்று சந்தேகமாயிருந்தது. ஆனல் கனவல்ல. உண்மையில் ஒரு அழகிய பெண்ணின் கை என் கையோடு பிணைந்த நிகழ்ச்சி மெய்யாகவே நடந்தது. பொய் இல்லை. கற்பனை இல்லை. புனைவும் இல்லை. அவள் குழியில் விழுந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடாத பயத்துடன் பரணில் என் முன் உட்கார்ந்து கொண்டிருந்தாள். கம்பளியைக் கொடுத்தேன். "இந்தா! போர்த்திக் கொள். குளிர் அதிகமாக இருக்கும்" என்றேன். வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாள். "யார் நீ? எதற்காக இங்கே வந்தாய்?" என்று கேட்டேன்.

அவளுக்குச் சரியாகத் தமிழ் பேசத் தெரியாததால் மலையாளத்தில் தன்னைப் பற்றிக் கூறினுள். கூறும்போதே துயரம் தாங்காமல் நடுநடுவே விம்மி அழத் தொடங்கி விட்டாள். முழுவதையும் கேட்டு முடித்தபோது அந்தப் பெண்ணின் சோகக் கதை என் உள்ளத்தை உருக்கியது. 'இப்படியும் ஒரு துயரக் கதை வாழ்வில் புதைந்திருக்குமா?' என்று ஏங்கினேன். உடல் முழுவதும் செழித்து நிற்கும் இளமையும், இளமையை எடுத்துக் காட்டும் அற்புத அழகும் பொருந்திய அந்தப் பெண், கேவலம், நாள் ஒன்றுக்கு ஆறணுக் கூலிக்கு மரம் அறுக்கும் கோவிந்த ஈழவனின் மகளாக இருப்பாள் என்று எதிர்பார்க்கவே இல்லை. கோவிந்த ஈழவன் எங்கள் கம்பெனியின் மற்ருேர் பிரிவாகிய மரக்கடையில் வேலை பார்ப்பவன். ரம்பம் பிடித்து மரம் அறுப்பது அவன் தொழில். சமீபத்தில் சில மாதங்களாக நல்ல மரங்கள் கிடைக்காததனுல் எங்கள் கம்பெனி மானேஜர் நாலைந்து மாதங்களுக்கு மரக்கடையை மூடி விட்டார். கடையில் வேலை பார்த்து வந்தவர்களுக்குத் திடீரென்று வேலை போய் விட்டது. வேலையை இழந்தவர்களில் கோவிந்த ஈழவனும் ஒருவன். மனைவி, குழந்தைகளோடு முக்கால் டஜனுக்கு மேல் பாரமுள்ள அவன் குடும்பம் பரிதவிப்புக்கு ஆளாகியது. வறுமைப் பிணி வாட்டி எடுத்தது. ஆணும் பெண்ணுமாக உழைத்தும் வீட்டில் அரை வயிற்றுப் பட்டினி. இப்போதோ ஈழவனுக்கு வேலையே போய் விட்டது. வேலையற்ற நிலையில் குடும்பம் தத்தளித்தது. மலேரியாக் காய்ச்சல் ஈழவனைப் படுத்த படுக்கையாக்கி விட்டது. அவன் மனைவி ஏற்கெனவே நோயாளி. பெண் மாதவி குழந்தைகளில் மூத்தவள். அவள் ஏதாவது செய்தால் தான் வீட்டிலுள்ளவர்களின் வயிறு நிறையும். விவரம் தெரிந்த வயதுடைய மாதவி வீட்டுக்

**நல்ல தேநீர் தயாரிக்க**
**தேயிலை ஊறும் நேரத்தைக்**
**கணக்கிடுங்கள்**



**தேநீர் பாத்திரத்தில் தேயிலை வெகு நேரம் ஊறவைக்கப்பட்டால், தேநீர் அதன் எல்லா நல்ல குணங்களையும் இழந்துவிடும்.**

*இந்த முக்கிய விதிகளை பின்பற்றுங்கள்*

1. நம்பகமான வியாபாரியிடம் மட்டுமே தேயிலையை வாங்கவும்.
2. புதிய நீரை எடுத்துக்கொள்ளவும். நீரை நன்றாக கொதிக்கும்வரை சூடு செய்து, கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றிவிடவும். தேநீர் பாத்திரத்தை வெந்நீரால் நன்றாக அலசிக் கழுவவும்.
3. ஒவ்வொரு நபருக்கு ஒரு தேக்கரண்டி வீதமும், தேநீர் பாத்திரத்தை உத்தேசித்து ஒரு தேக்கரண்டி அதிகமாகவும் கணக்கிட்டு தேயிலையை தேநீர் பாத்திரத்தில் சட்டென்று போடவும்.
4. கொதிக்கவைத்த நீரை உடனுக்குடன் தேநீர் பாத்திரத்தில் ஊற்றி, தேயிலையை மூன்று முதல் ஐந்து நிமிடங்கள் வரை ஊறவைக்கவும்.
5. தேநீரை கோப்பையில் ஊற்றி, பாலையும் சர்க்கரையையும் ருசிக்கு ஏற்றவாறு சேர்த்துக்கொள்ளவும். கலக்கி அருந்தவும்.



**நான்தான் டீ** - நட்பின் சின்னம்

TEA BOARD INDIA

# அவர்களின் பெயர்களே உங்களுக்குப் பாதுகாப்பு

## எப்பொழுதும், ஒரு பெயர் பெற்ற உற்பத்தியாளரால் தயாரிக்கப்பட்ட வனஸ்பதியையே வாங்குங்கள்

எல்லாச் சமையல்களுக்கும், ஆரோக்யமானதும், மிகுந்த சக்தியளிப்பதுமான வனஸ்பதியை உபயோகியுங்கள். ஆனால் அதை வாங்கும்பொழுது உற்பத்தியாளரின் பெயரைப் பார்க்க மட்டும் தவறாதீர்கள்.

வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் அங்கத்தினர் ஒருவரால் தயாரிக்கப்பட்ட வனஸ்பதியை வாங்கினால், நீங்கள் சிறந்த சாதனத்தையே பெறுகிறீர்கள் என்பதை உறுதியாக நம்பலாம். ஏனெனில் அது சர்க்காரின் கண்காணிப்பின் கீழுள்ள பாக்டரியில் சர்க்காரின் நிபந்தனைகளுக்குட்பட்டு தயாரிக்கப்படுகிறது. மற்றும் அது கைபடாமல் தயாரிக்கப்பட்டு, சுத்தமாயும் புதுமை கெடாமலும் இருப்பதற்கு டின்களில் சீல் செய்யப்படுகிறது!

புகழ்பெற்ற இந்தக் கம்பெனிகளில் ஒன்று தயாரிக்கும் வனஸ்பதி வேண்டுமென்று கேட்டு வாங்குங்கள்:

அஹமத் உமர்பாய் .. .. கம்தா
அமிருத் வனஸ்பதி கோ லிட். கோல்டன் ஆரோ
அமிர்தசர் ஷுகர் மில்ஸ் லிட். .. சேரஸ்
பேரார் ஆயில் இண்டஸ்ட்ரீஸ் .. வனஸ்தா
தி பேரார் ஸ்வதேசி வனஸ்பதி .. ஸ்வதேசி
பவானி வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிட். பிரபாத்
பிருந்தாவன் நகைப்பலவா (மைசூர்) பிரைவேட் லிட். .. கல்பா
பிருந்தாவன் நகைப்பலவா பிரைவேட் லிட். பி.டி.
டி. வி. எம். வனஸ்பதி மான்பு. ஒர்க்ஸ் பன்கட்
ஈஸ்ட் ஏஷியாடிக் கோ. (இந்தியா) பிரைவேட் லிட். .. .. டி.கே.
ஈஸ்ட் கோஸ்ட் புட் பிராடக்ட்ஸ் லிட். அசோகா
கணேஷ் ப்ளோர் மில்ஸ் கோ. லிட். .. .. பன்ட் கேசரிடி.
ஹிந்துஸ்தான் டெவலெப்மெண்ட் கார்பொரேஷன் லிட். .. ரஜோம்
ஹிந்துஸ்தான் லீவர் லிட். .. டால்டா
இந்தியன் வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிட். ஜயன்
ஜகதீஷ் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட். அருண்
கதியவார் இண்டஸ்ட்ரீஸ் லிட். .. —
குசும் பிராடக்ட்ஸ் லிட். .. குசும்
மார்க்கர் அண்ட் சீபைஸ்ட் ஆயில்ஸ் கோ. பிரைவேட் லிட். .. .. பிரகாஷ்
மேட்டூர் கெமிகல் அண்ட் இண்டஸ்ட்ரியல் கார்பொரேஷன் லிட். .. காமதேனு
மோடி வனஸ்பதி மான்பு. கோ. கோடோஜம்
மைசூர் வெஜிடபிள் ஆயில் பிராடக்ட்ஸ் லிட். .. .. .. சாமுண்டி
பஞ்சாப் வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிட். கடாரத்
ரவி வெஜிடபிள் ஆயில் இண்டஸ்ட்ரீஸ் .. .. பிருந்தாவன்
சௌராஷ்டிரா இண்டஸ்ட்ரீஸ் லிட். ஹனுமான்
எஸ். ஜி. வெஜிடபிள் பிராடக்ட்ஸ் கோபால்
ஸ்வோ ஹைட் புட் பிராடக்ட்ஸ் கோ. லிட். பதூன்
ஸ்வாம்பா வனஸ்பதி பிராடக்ட்ஸ் லிட். .. .. .. ஸ்வாம்பா
ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் கோ. லிட். க்ரேப்ஸ்
டாடா ஆயில் மில்ஸ் கோ. லிட். பாசம்
துங்கபத்திரா இண்டஸ்ட்ரீஸ் லிட். தவாரா
வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிட். பிரதாப்
வெஜிடபிள் விடமின் புட்ஸ் கோ. பிரைவேட் லிட். .. விடாமி
வெஸ்டேர்ன் இந்தியா வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிட். .. ஸன்பிளவர்

# வனஸ்பதி

## இல்லாளின் வரப்பிரஸாதம்

தி வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா ஸ்தாபனத்தினால் வெளியிடப்பட்டது

VHA. 4598

கொல்லையில் நேந்திர வாழை, மிளகு என்று ஏதோ பயிரிட்டிருந்தான். அது ஒரு உப வருமானம்தான். தகப்பனாரே வேலையிழந்து வந்து விட்ட போது குடும்பத்தைத் தாங்கும் சக்தி முழுதும் அதற்கில்லை. ஒரு நாள், இரு நாள், கால் வயிறு நிறைந்தது. மூன்றும் நாள் முழுப் பட்டினி. மாதவி என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தாள்.

கூலிகளின் குடிசைகள் யானைகளைப் பிடிப்பதற்காகப் பரண் அமைத்திருந்த இடத்துக்கு அருகே ஒரு பெரிய மேட்டில் இருந்தது. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் யானை பிடிப்பதற்காகப் பொய்க் குழி வெட்டி, அதன் மேல் கரும்புக் கழிகள், பெரிய கொப்பரைத் தேங்காய் மூடிகள்—இவற்றை யெல்லாம் பரப்புவதை மாதவி பார்த்திருந்தாள். 'அந்தத் தடித்த கரும்புக் கழிகளில் ஒன்றாவது சாப்பிடுவதற்குக் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?' என்ற ஏக்கம்கூட அவளுக்கு ஏற்பட்டது. குடிசை வாசலில் நின்றபடியே பரப்பியிருந்த கரும்பு, தேங்காய் மூடிகள் ஆகியவற்றை யெல்லாம் வெகு நேரம் நாவில் நீர் ஊறப் பார்த்துக் கொண்டிருப்பது இரண்டொரு நாட்களாக அவள் வழக்கமாகி விட்டது.

இரவு எட்டு மணிக்கு மேல் பரணில் யானைக்காகக் காத்துக் கொண்டிருப்பவர்களும் உறங்கி விடுவார்களென்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அன்றிரவு எப்படியும் அந்தக் கழிகளில் ஓரிரு கழிகளையும், தேங்காய்களில் சிலவற்றையும் எடுத்து, ருசி பார்த்து விடுவதென்று தீர்மானித்து விட்டாள் அவள். தாய், தகப்பன், குழந்தைகள் யாவரும் தூங்குகிறவரை அவள் தூங்காமல் காத்திருந்தாள். பசிக்கும், ஆசைக்கும் தூக்கம் ஏது? எட்டரை மணி சுமாருக்கு நெஞ்சில் துணிவை வரவழைத்துக் கொண்டு அடி மேல் அடி வைத்து நடந்தாள். பொய்ப் பள்ளம் இருந்த இடத்துக்கு அவசரமாக வந்தாள். வயிற்றில் பசியும், நாவில் நீரும், நடந்து வந்த அவள் மிகுந்த ஆத்திரத்திலும், இருளில் தடம் தெரியாததனாலும் ஒரு பெருந் துன்பத்தில் தானாகவே அகப்பட்டுக் கொண்டு விட்டாள்.

'இவ்வளவு அழகான பெண்ணா வயிற்றின் பசிக்கும் நாவின் துறுதுறுப்புக்கும் அடிமைப்பட்டு இந்த வெட்கக்கேடான காரியத்தைச் செய்ய முன் வந்தாள்?' என்று நினைத்து வியந்தேன். வானுலகிலிருந்து வழிதவறி வந்த மோகினி போல் இருட்டில் என்னெதிரே பரண் மேல் உட்கார்ந்திருந்தாள் மாதவி.

"மாதவி! வெறும் கரும்புக்கும் தேங்காய்க்கும் ஆசைப்பட்டா இதைச் செய்தாய்? என்ன அசட்டுத்தனம்? உயிருக்கு உலை வைக்கும் பிரதேசத்தில் இருட்டில் தனியே வரலாமா?" என்று கேட்டேன். என் கேள்விக்குப் பதில் இல்லை. விம்மி விம்மி அழும் ஒலி கேட்டது.

"அழாதே, மாதவி? பரணில் நிறைய இடம் இருக்கிறது. அந்த மூலையில் நீ படுத்துக் கொள். விடிந்ததும் உன்னை வீட்டில் கொண்டு போய் விடுகிறேன்" என்று கூறி அவளைத் தேற்றினேன். அவள் அப்போதே



பாட்டி:—ஏண்டா மணி! என் பேத்தியைக் கல்யாணம் பண்ணிக்கிறாயா!

மணி:—வேண்டாம்! உங்க பேத்தி நாலு குழந்தைகளோடே இருக்கா. அதெப்படிக் கல்யாணம் பண்ணிக் கொள்வது?

போக வேண்டும் என்றாள். நான் கண்டிப்பாக மறுத்து விட்டேன். என் வார்த்தையை அவள் மீற முடியவில்லை. பரணின் ஒரு மூலையில் அவளும் இன்னொரு மூலையில் நானுமாகப் படுத்துக் கொண்டோம். அந்த இரவு தூங்குவது போல் பாவித்து உண்மையில் தூங்க முடியாமலே இருவரை ஏமாற்றி விட்டது. அது இரவின் குற்றமா? நெஞ்சின் குற்றம்தான்!

மறுநாள் பொழுது விடிந்ததும் மாதவியை அழைத்துக் கொண்டு கோவிந்த ஈழவனின் குடிசைக்குப் போனேன். குழியில் தடுமாறி விழுந்தபோது மாதவிக்கு ஏற்பட்டிருந்த காயங்களுக்கு மருந்து போடச் செய்தேன்.

வேலை கிடைக்கிறவரை செலவுக்கு வைத்துக் கொள்ளுமாறு கொஞ்சம் பணம் கொடுத்தேன். ஈழவனைத் தனியே அழைத்து, "கோவிந்தா! உன் மகளை நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். அதற்கு நீ சம்மதித்துத் தானாக வேண்டும்" என்றபோது அவனுக்கு நம்பிக்கையே இல்லை. நான் விளையாட்டுக்காகக் கேலி செய்கிறேனென்று நினைத்துக் கொண்டு விட்டான். நான் மறுபடியும் வற்புறுத்திச் சொன்னபோதுதான் என்னை அவனால் நம்ப முடிந்தது. "அப்படியானால் அது என் பாக்கியம்தான்" என்று நாக்குழறி நடுங்கும் குரலில் கூறினான் அவன். என் மனம் குளிர்ந்தது.

அந்த அழகி இதழ் விளிம்பு அசைய ஒரு நாணப் புன்னகை புரிந்தாள். அடுத்தவாரம் வைக்கத்தப்பன் கோவிலில் எங்கள் திருமணம் நடக்கும். 'அதன் பின் இந்தப் புன்னகைக்கும், இதன் பிறப்பிடமான சௌந்தரிய உடலுக்கும் நான்தான் சொந்தக்காரன்' என்று மகிழ்ச்சியால் துள்ளியது என் மனம்.

''ஐயோ! உங்களாலே மூழ்கிக் கொண்டிருந்த என் குடும்பப் படகு, சுகமாகக் கரையேறு கிறது'' என்று நன்றிப் பெருக்கோடு எனக்கு வந்தனம் செலுத்தினன் கோவிந்த சமுவன்.

''ஈழுவா! உன் மாதவிக்கு இருக்கிற அழகுக்கு இதுமட்டுமா நடக்கும்? இதைவிடப் பெரிதாக நடந்தாலும் வியப்பில்லை'' என்றேன். பிரம்மச்சாரிக்கட்டைக்கு அதிகம் செலவு ஏது? வாங்கின சம்பளத்தில் நானூறு, ஐந்நூறு மிச்சப்படுத்தி வைத்திருந்தேன். கோவிந்தனின் ஏழைமையை உத்தேசித்துக் கல்யாணத்துக்கு முன் கொடுக்கும் பரிசுப் பணம் போல் இருநூறு ரூபாயை அவனுக்குக் கொடுப்பது என்று தீர்மானித்திருந்தேன். அவன் அப்படி எதுவும் வேண்டுமென்று வாய் திறந்து கேட்கவில்லை. ஆனால் நானகவே கொடுப்பதென்று முடிவு செய்து விட்டேன். அதனால், ''நானே சாயங்காலம் கொஞ்சம் பணம் கொண்டு வந்து தருகிறேன். வாங்கி வைத்துக் கொள்'' என்று சொல்லி விட்டு அங்கிருந்து புறப்பட்டேன்.

நான் தங்கியிருந்த அறை பாதுகாப்புக் குறைவான இடம். ஆகையால் சம்பளத்தில் மிச்சப்படுத்தியிருந்த பணத்தை எங்கள் கம்பெனி மானேஜரிடம் கொடுத்து வைத்திருந்தேன். பணம் வேண்டுமானால் இப்போது அவரிடம் போய்த்தான் கேட்க வேண்டும். ஆனல் சந்தர்ப்பம் அவரிடம் போக முடியாதபடி இருந்தது. பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு முன் மலேரியாக் காய்ச்சலில் அவருடைய மனைவி காலமாகி விட்டாள். ஐம்பத்தேழு வயதில் நாலைந்து குழந்தைகளோடு தனியாக விடப்பட்ட அவர் ஒரே கவலையில் தத்தளித்துக் கொண்டிருந்தார். வீட்டிலிருந்து வெளி வருவதே இல்லை. கம்பெனி வேலைகளைக் கவனிப்பதே இல்லை. துக்க மிகுதியினால் வேளாவேளைக்குச் சாப்பிடாமலும் தூங்காமலும் வீட்டிலே கிடக்கும் அவரிடம் இப்பொழுது போய்ப் பணம் கேட்பது பொருத்தமான காரியமில்லை என்று தயங்கினேன். கடைசியில் சக தொழிலாளி நாராயணன் நம்பியார் இருநூறு ரூபாய் கைமாற்றுத் தருவதாகவும் ஒரு மாதத்தில் திருப்பிக் கொடுத்தால் போதுமென்றும் கூறி இருநூறு ரூபாய் கொடுத்தான். என் கவலையும் பிரச்னையும் தீர்ந்தன. மறுநாள் மாலை பணத்தோடு ஈழுவனைப் பார்க்கச் சென்றேன்.

''இந்தா பணம்! ஈழுவா... வருகிற ஞாயிற்றுக்கிழமை வைக்கத்தப்பன் கோவிலில் கலியாணம். வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் நானே செய்து விடுகிறேன். வாங்கிக் கொள் இதை...''

என் பணத்தை ஈழுவன் வாங்கிக் கொள்ளவில்லை. அவன் முகத்தில் மலர்ச்சியைக் காணோம். நான் திகைத்தேன். ''ஏன்? பணம் வேண்டாமா உனக்கு?''

''அது இல்லை! வந்து...''

''இல்லாவிட்டால் பின் என்ன?''

''மத்தியானம் நம்ம மானேஜர் சார் இங்கே வந்திருந்தார்.''

''மானேஜரா? அவர் எதற்காக இங்கே வர வேண்டும்? என்ன காரியமாக அவர் வந்திருந்தார்?''

''அவர் வந்திருந்தபோது இங்கே குடிசை வாசலில் மாதவி புடவை நோய்த்துக் கொண்டிருந்தது.''

''ஊம்ம்!...அப்புறம்?''

'''இது யார்?' என்று கேட்டார். 'என் மூத்த பெண் மாதவி' என்றேன். கலியாணம் கட்டிக் கொடுத்திட்டாயா, இல்லையா என்று கேட்டார்....''

''ஊம்ம்!''

'''இல்லை! இனிமேல்தான் கட்டிக் கொடுக்கணும்' என்றேன்! அவர் கொஞ்ச நேரம் யோசித்துக் கொண்டிருந்தார். திடீரென்று, 'நானே கட்டிக்கறேன், கொடுப்பியா?' என்றார். நான் அவருக்கு என்ன பதில் சொல்வதென்று தயங்கிக் கொண்டிருந்த போது, 'கோவிந்தா! எனக்கு இவளை மிகவும் பிடித்திருக்கிறது. இந்தா! இந்தப் பணத்தை வைத்துக் கொள்' என்று ஐந்நூறு ரூபாயை என் கையில் திணித்து விட்டார். நான் பதில் பேசவே முடியவில்லை. ''சும்மா தயங்காதே! கலியாணமானதும் நீதான் மரக்கடையில் மேஸ்திரி. வர வெள்ளிக்கிழமை குருவாயூரில் கலியாணம்! எல்லா ஏற்பாடும் நான் செய்து விடுகிறேன்' என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.''

பூமி, வானம், திசை, திசைக்கோணம் எல்லாம் இடிந்து என் தலை மேல் விழுந்து அமுக்குவது போலிருந்தது எனக்கு. ஈழுவன் என் முன்தான் நின்று கொண்டிருந்தான். அவனை நான் என்ன செய்ய முடியும்? அவன் என்னை விட ஏழை. நானே மானேஜரை விட ஏழை! ஈழுவனின் குடிசை வாசலில், நான் முதல் நாள் கொடுத்து விட்டுப் போயிருந்த கரும்பின் சுவைத்துத் துப்பிய சக்கைகள் சிதறிக் கிடந்தன. அவை என்னைப் பார்த்துச் சிரித்தனவா? அல்லது விதி உன் ஆசையையும் இப்படித்தான் கடித்துத் துப்பி விட்டது என்று கூறாமல் கூறினவா?

பணமுள்ளவர்களுக்கு ஆசையையும், ஏழைகளுக்கு அழகையும் படைத்த பிரம்மாவின் முகத்தில் கரியைப் பூசத் துடித்தன என் கைகள். ஆனல் முடிகிற காரியமா அது? அன்று குழியிலிருந்து ஒருத்தியைக் காப்பாற்றினேன். இன்று நானே குழியில் விழுந்து விட்டேன்.

* * *

என் அருமை உள்ளமே! இதுதான் அந்தக் கதை. எண்ணமும் நாளும் ஓயாமல் எவளைப் பற்றி எண்ணுகிறோமோ, அவள் இப்போது ஒரு கம்பெனியின் மானேஜருக்கு மனைவி! ஆனல் நினைவளவில் பார்க்கும் போது அவள், அந்த மகா சௌந்தர்யவதி இன்னும், இப்போதும், இந்த விநாடி வரை எனது நினைவில் நிலையாக இடம் பெற்று விட்டாள். காலம் பதினைந்து வருஷ மலர்களை உதிர்த்து விட்டது!

என் நினைவை மட்டும் யாராலும் உதிர்க்க முடியவில்லை. காலம் மட்டும் என்ன? காலத்தை ஆட்டி வைக்கும் மூலத்துக்கு மூலமான விதி நினைத்தாலும் என் நினைவை அழிக்க முடியாது! என் நினைவு? அது என்னுடன்தான் அழிய வேண்டும்!

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon